பாண்டியநாட்டில்

# வாணாதிராயர்கள்





வெ. வேதாசலம்

தொல்பொருள் தொழில் நுட்பப்பணியாளர் பண்பாட்டுக்கழ
மதுரை

# பாண்டிய நாட்டில்
# வாணாதிராயர்கள்

வெ. வேதாசலம் எம். ஏ., டி. இ. ஏ.,

தொல்பொருள் தொழில்நுட்பப் பணியாளர்
பண்பாட்டுக்கழகம்
மதுரை 1987

1000 பிரதிகள் 1987

தொ. தொ. நு. ப. ப. கழக

வெளியீடு எண் : 5

விலை ரூ 10. 00

தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம்

பதிவு எண். 73/82 138A, சலாமத் இல்லம்,

பகவத்சிங்தெரு தாசில்தார் நகர், மதுரை-625 020.

அச்சு : தீன் பிரிண்டர்ஸ், கரும்பாலை, மதுரை.

அட்டைப்படம் : திரு. சந்திரபாபு ஓவியர் மதுரை

# மதிப்புரை

டாக்டர். எ. சுப்பராயலு எம். ஏ., பி. எச் டி.
தலைவர், கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

தமிழக வரலாற்றின் பல இயல்புகளையும் ஆழமாகவும், தெளிவாகவும் அறிந்து அவற்றைப் பிறருக்கும் தெரிவிக்க வேண்டும் என்ற முனைப்புள்ள இன்றைய இளைய வரலாற்றாசிரியர்களுள் ஒருவரான திரு வேதாசலம் படைத்துள்ள இந்த நூல் தமிழக அரசியலிலும் சமுதாயத்திலும் பல நூறு ஆண்டுகள் தொடர்ந்து செல்வாக்குடனிருந்த வாணர் என்ற குறுநில அரசகுலத்தின் வரலாற்றின் ஒரு பகுதியைத் தெளிவாக்குகிறது. கி.பி. 5 ஆம் நூற்றாண்டை ஒட்டிய காலத்தில் தமிழகத்தின் வட எல்லையிலிருந்த இப் போர்மரபுக் கூட்டத்தினர் நாளடைவில் தெற்கு நோக்கிப்பரவி நாட்டின் பல இடங்களிலும் குடியேறி, சில பகுதிகளைத் தனியாக ஆட்சி செய்ததோடு பெரும்பாலும் பல்லவ, சோழ, பாண்டிய, அரசுகளை அண்டி குறுநிலத் தலைவர்களாகவும் அரசு அலுவலர்களாகவும் இருந்துள்ளனர் இவ்வாணர் பாண்டியநாட்டில் கி. பி. 11 ஆம் நூற்றாண்டு தொடங்கி எப்படி அரசியல் செல்வாக்குப் பெற்றனர், இப் பகுதிப் பண்பாட்டு வளர்ச்சிக்கு எப்படி உறுதுணையாயிருந்தனர் என்பனபோன்ற செய்திகளை நிரல்பட எடுத்துச் சொல்கிறது இந்நூல்.

முன்னவர் தொகுத்த வரலாற்று மூலங்களோடு, தான் நேரில் பல இடங்களிலும் கள ஆய்வு மேற்கொண்டு புதிதாகக் கண்டு தொகுத்த கல்வெட்டுகளையும், செப்பேடு-களையும் பயன்படுத்தி இந்நூலைப் படைத்துள்ளார் இந்-நூலாசிரியர். குறிப்பாக விஜயநகர ஆட்சிக்காலத்தில் பாண்டி

நாட்டில் அரசோச்சிய திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயனைப் பற்றியும் அவன் மகனைப் பற்றியும் பல புதிய செய்திகளைத் தந்துள்ளார்.

தமிழ்நாட்டில் பண்டைக்காலத்திலும், இடைக்காலத்திலும் இருந்த அரசுகளின் (State) தன்மை பற்றிய கோட்பாடுகள் இன்று தீவிரமாகச்சிந்திக்கப்பட்டுவருகின்றன இச்சிந்தனை வளமுற வாணர்போன்ற குறுநிலமரபுகளின் அரசியல், சமுதாய நடவடிக்கைகள் பற்றி தெளிவாக அறிந்து கொண்டால்தான் இயலும். அந்த வகையில் திரு வேதாசலம் அவர்களின் முயற்சி பாராட்டற்குரியது.

ஆசிரியர் வெளியிட்டுள்ள சில கருத்துக்கள் மேலும் ஆய்வுக்கு இடம் தருகின்றன. காட்டாக, வாணர்களுக்குள் சிலர் காலிங்கராயர் (ப. 47) மழவராயர் (ப. 89) என்று பெயர் கொண்டுள்ளதை இவர்கள் காலிங்கர்மழவர் போன்ற மரபினரோடு கொண்ட மண உறவுகளின் விளைவு என்று கூறியிருப்பதை அப்படியே ஏற்றுக்கொள்ள இயலாது. இதனைத் தெளிவாக்க அக்காலச் சமுதாய அமைப்பை மேலும் ஆழமாக ஆராயவேண்டியுள்ளது. மேற்கொண்டு செய்யவேண்டிய ஆய்வுக்கு இந்நூல் உறுதுணையாக அமையும் என்பதில் ஐயமில்லை.

நல்ல ஆய்வு நூல்களை வெளியிடும் முயற்சியில் நல்ல இளைஞர்களைக் கொண்ட தொல்பொருள் தொழில்நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழக அமைப்பு ஈடுபட்டு வருவது பாராட்டுதற்குரிய சிறப்பான பணியாகும்.

தஞ்சாவூர்

எ. சுப்பராயலு

3 . 11. 1987

# பதிப்புரை

தமிழ்நாடு அரசு, தொல்பொருள் ஆய்வுத்துறையில் பணியாற்றும் தொழில்நுட்ப அலுவலர்களின் சார்பில் வெளியிடப்படும் இந்தப் புத்தகம் தொல்பொருள் தொழில் நுட்பப்பணியாளர் பண்பாட்டுக் கழகத்தின் ஐந்தாவது படைப்பு என்பதைத் தொல்லியல்-தமிழ் இலக்கிய உலகத்திற்குத் தெரிவித்துக்கொள்வதில் நாங்கள் மிகவும் பெருமைப் படுகின்றோம்.

'பாண்டிய நாட்டில் வாணாதிராயர்' என்ற தலைப்பில் இந்தப் புத்தகத்தை எங்கள் பண்பாட்டுக்கழகத்தின் மூத்த உறுப்பினர் திரு. வெ. வேதாசலம் அவர்கள் சிறப்பாகவும், செம்மையாகவும் எழுதியிருக்கின்றார். வாணாதிராயர் என்ற பிரிவினரைப் பற்றி இதுகாறும் வெளிவராத-அறிஞர் உலகம் ஏற்றுக் கொள்ளக்கூடிய சிலபல கருத்துக்களை அவர் இங்கே எடுத்துக் காட்டியிருக்கிறார்.

இந்த ஆய்வு மட்டுமல்ல...எந்த ஆய்வும் ஒருமுடிந்த முடிபல்ல என்பதை எங்கள் பண்பாட்டுக் கழகத்தின் நேரடிக் கருத்தரங்கிலும், அஞ்சல் வழிக்கருத்தரங்குகளிலும் கூறி வருகின்றோம். அந்தவகையில் வாணாதிராயர் பற்றிஅறிந்து கொள்ளவும் தொடர்ந்து ஆய்வு செய்யவும் இந்த நூல் பெரிதும்துணை நிற்கும் என்பதில் ஐயமில்லை.

1982-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட எங்கள் தொல் பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக்கழகம் இந்த அளவுக்கு வளர்ந்து, வரலாற்று வல்லுநர்கள் வியந்து பாராட்டுகின்ற அளவுக்கு தன்னுடைய பாதையைச்செம்மைப் படுத்தி அன்று தொட்டு இன்று வரை தொய்வின்றி நடந்து வருகின்றது.

இதற்கு எங்களை மட்டுமல்ல ...எங்களுக்கு உறுதுணை யாக இருக்கும் பேராளர்களையும் இந்த நேரத்தில் நாங்கள் நினைவு கூரக்கடமைப்பட்டிருக்கின்றோம் இந்த அளவுக்குத்

திடமும், திறமும் நாங்கள் பெற்றிருப்பதற்குக் காரணம் இதனைத் தொடங்கி வைத்தவர்களும், தொடர்ந்து நடத்த ஆக்கபூர்வமான அறிவுரை கூறுபவர்களும்தான். அவர்களை எல்லாம் மீண்டுமொருமுறை நினைக்கின்றோம். இந்தியா விலேயே இதுவரை எவரும் செய்யாத வகையில் அஞ்சல் வழியிலேயே 'கருத்தரங்கு' நடத்தி அதனைப்புத்தகமாகவும் வெளியிட்டு வருபவர்கள் நாங்கள் தான் என்று எங்களைப் பார்க்கின்ற போதெல்லாம் பாராட்டுகின்ற பேராசிரியர் களையும், ஆர்வலர்களையும் கைகூப்பி வணங்குகின்றோம். இளைய தலைமுறையைச் சேர்ந்த பல கைகள் இன்னும் பல நூல்களை உங்களுக்குத் தருவதற்குக் காத்திருக்கின்றன. காலம் வரும் போது ஒவ்வொன்றாகக் கனிந்து உங்கள் கைகளில் கிடைக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கின்-றோம்.

இந்நூல் உருவாகுங் காலந்து உடனிருந்து பணிகள் பலவற்றைச் செய்த நண்பர்கள் திரு. சு. இராசகோபால், திரு. மா செந்தில்செல்வக்குமரன், திரு. பொ. இராசேந்திரன், திரு. தே. கோபாலன், திரு. செ. போசு, திரு. நா. சுலைமான் ஆகியோருக்குக் காலம் தான் கைம்மாறு செய்ய வேண்டும். நல்லமுறையில் அச்சிட்டளித்த 'தீன்' அச்சக உரிமையாளர் திரு. J. ஷாஹுல்ஹமீது பாய் அவர்களுக்கு எல்லாம் வல்ல அல்லாஹ் துணை நிற்பாராக. இந்த நூலுக்கு நல்லதொரு மதிப்புரையைத் தந்திருக்கும் தமிழ்ப்பல்கலைக் கழகக்கல்வெட்டுத்துறை பேராசிரியர் டாக்டர் எ.சுப்பராயலு அவர்களைப்பற்றி அறிஞர் உலகம் நன்கறியும். அவரது மதிப்புரை இந்த நூலுக்கு மேலும் அழகூட்டுகிறது. அழகுக்கு அழகு செய்த அந்தப் பெரியவருக்கு எங்களது அன்பார்ந்த நன்றிகள் என்றுமே உரியன.

— தொல்பொருள் தொழில்நுட்பப் பணியாளர்
பண்பாட்டுக் கழகம், மதுரை.

தலைவர் : திரு. பொ. இராசேந்திரன் எம். ஏ.

துணைத்தலைவர் : திரு. செ. போசு எம். ஏ.,

செயலாளர் : திரு. மா. செந்தில்செல்வக்குமரன் எம். ஏ.,

பொருளாளர் : திரு. சு. இராசகோபால் எம். ஏ.,

உறுப்பினர்கள் :

1. திருமதி. நா. மார்க்கிய காந்தி எம். ஏ.,
2. திரு. அ. இராசேந்திரன் எம். ஏ.,
3. திருமதி ஆ. பத்மாவதி எம். ஏ.,
4. திருமதி இரா. வசந்த கல்யாணி எம். ஏ.,
5. திரு வெ. வேதாசலம் எம். ஏ.,
6. ,, எஸ். இராமச்சந்திரன் எம். ஏ.,
7. ,, இரா. ப. கருணானந்தன் எம். ஏ.,
8. ,, து. துளசிராமன் எம். ஏ.,
9. ,, இரா. செல்வராசு எம். ஏ.,
10. ,, ச. கிருட்டிணமூர்த்தி எம். ஏ.,
11. ,, சொ. சாந்தலிங்கம் எம். ஏ.,
12. ,, ச. செல்வராசு எம். ஏ.,
13. ,, மா. கலைவாணன் எம். ஏ.,
14. ,, சொ. சந்திரவாணன் எம். ஏ.,
15. ,, கா. நெடுஞ்செழியன் எம். ஏ.,
16. ,, இ. சுப்பிரமணியன் எம். ஏ.,
17. ,, சி. முனிசாமி எம். ஏ.,
18. திருமதி சீ. வசந்தி எம். ஏ.,
19. திரு தே. கோபாலன் எம். ஏ.,
20. ,, பி. கௌதமபுத்திரன் எம். ஏ.,
21. ,, கே. எஸ் சம்பத் எம். ஏ.,
22. ,, ச. பரணன் எம். ஏ.,
23. ,, கே. அர்ச்சுணன் எம். ஏ.,
24. ,, வெ. இராமமூர்த்தி எம். ஏ.,
25. ,, இரா. முத்து எம். ஏ.,
26. ,, கோ. முத்துச்சாமி எம். ஏ.,
27. ,, இரா. செயராமன் எம். ஏ.,
28. ,, நாக. கணேசன் எம். ஏ.,
29. ,, கே. முரளிதரன் டி. எப். ஏ.
30. ,, எம். எஸ். அசோக்தீன் எம். எஸ். சி.,
31. ,, இரா. பூங்குன்றன் எம். ஏ.,
32. ,, கி. ஸ்ரீதரன் எம். ஏ.,

## பாண்டியநாட்டில் வாணாதிராயர்கள்

### உள்ளடக்கம்



### பின்னிணைப்பு

# முன்னுரை

தமிழக வரலாற்றில் சங்ககாலந்தொட்டு ஆற்றல்மிக்க சில குழுக்கள் குறுநில மன்னர்கள் அளவிற்கு உயர்ந்து இன்றியமையாத இடத்தைப் பெற்றுவந்திருக்கின்றார்கள். அரசுரிமைப் போட்டியில் பெருமன்னர்களுக்கிடையே சிக்கித்தவித்த இவர்கள, எவரேனும் ஒரு பெருமன்னரைச் சார்ந்திருந்து தங்கள் அரசியல் வாழ்வைத் தக்க வைத்துக் கொண்டு வந்திருக்கின்றார்கள். பெருமன்னர்கட்கிடையே போர்கள் நடைபெற்றபோது ஏதேனும் ஒரு பக்கம் சார்ந்து கொண்டு பலசமயங்கள் அவர்தம் வெற்றிக்குக் காரணமாய் அமைந்திருக்கின்றார்கள். இப்போர்களில் அழிந்தவரும் உண்டு. புதிதாக முளைத்தவரும் உண்டு. சில நேரங்களில் வல்லரசுகளும் போரில் உதவிகேட்டுத் தங்களை நாடிவரும் வல்லமை படைத்தவர்களாக இவர்கள் விளங்கி-யிருக்கின்றார்கள். அவர்களோடு மணவுறவு வைத்துக் கொள்ளும் அளவுக்கும் உயர்ந்திருக்கின்றார்கள். எடுத்துக் காட்டாகச் சங்ககால மன்னர்கள் வேளிர்குலத்தாரோடு மணவுறவு கொண்டிருந்தமையைச் சுட்டலாம்.

தமிழகக்கலை, நாகரிகம், சமுதாயம், பண்பாடு முதலியவற்றின் உருவாக்கத்தில் இக்குறுநில மன்னர்கள் பெரும்பங்கு ஆற்றியிருக்கின்றார்கள். கொடைமடம்பட்ட பேகனின் கொடையும், முல்லைக்குத் தேரீந்த பாரியின் பண்பும், அவ்வைக்கு நெல்லிக்கனி அளித்த அதிகமானின் நட்பும் இன்றும் உலகில் பேசப்படுகின்றன. இடைக்

காலத்தில் பழுவூரிலும், கொடும்பாளூரிலும் இவர்கள் கல்லிலே வடித்துள்ள கலைப்பணிகள் இன்றும் அவர்களின் பெருமையைப் பறைசாற்றி நிற்கின்றன.

## நோக்கம்

தமிழ்நாட்டில் மழவர், முத்தரையர், முனையதரையர், இருக்குவேள், வாணாதிராயர், காலிங்கராயர் என்று பல்வேறு பெயர்களைக் கொண்ட ஆற்றல்மிக்க குழுக்கள் சிறப்புற்று விளங்கியிருக்கின்றன. தமிழகமெங்கும் சிதறிக் கிடக்கும் இவர்கள் வரலாற்றைத் திரட்டித் தொகுத்துத் தருவதன் மூலமும் தமிழக வரலாற்றைச் செம்மை பெறச் செய்ய முடியும் என்ற நோக்கிலேயே இந்நூல் எழுதப் பெற்றிருக்கின்றது. அவர்களுள் பாண்டியநாட்டோடு தொடர்புடைய வாணாதிராயர்கள் என்ற குலத்தின் வரலாற்றை மட்டும் இந்நூல் விரித்துரைக்கின்றது.

## முன் முயற்சிகள்

இவ்வாணாதிராயர்கள் வரலாறு பற்றிப் பல வரலாற்றாசிரியர்கள் நூற்களும், கட்டுரைகளும் எழுதியுள்ளனர். இவர்களில் திரு. ஹுல்ஸ்[1], வால்டர் எலியட்[2], K. V. சுப்பிரமணிய அய்யர்[3], V. ரெங்காச்சாரியர்[4], R. சத்தியநாதஅய்யர்[5], K. A. நீலகண்ட சாஸ்திரியார்[6], தி. வை. சதாசிவப்பண்டாரத்தார்[7], வி.ரா. இராமச்சந்திர தீட்சிதர்[8], T. V. மகாலிங்கம்[9], D. தேவகுஞ்சரி[10], அ. கி. பரந்தாமனார்[11], S. A. ஹுசைனி[12], A. கிருஷ்ணசாமி[13], M. S. கோவிந்தசாமி[14], V. பாலம்பாள்[15], இரா. நாகசாமி[16], K. V. இராமன்[17], நடன. காசிநாதன்[18], A. V. ஜெயச்சந்திரன்[19], திரு. முத்துக்கோனார்[20], V. விஜயலட்சுமி[21], சு. இராசகோபால்[22], ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவார்கள்.

இவர்களது நூல்களிலும் கட்டுரைகளிலும் பாண்டிய நாட்டோடு தொடர்புடைய வாணாதிராயர்கள் வரலாறு மிகச் சுருக்கமாகவே காணப்படுகின்றது. இதனை நிறைவு செய்யும் முயற்சியில் கி. பி. 11ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 17ஆம் நூற்றாண்டு முடிய பாண்டிய நாட்டிலிருந்த வாணாதிராயர்களின் வரலாறு இந்நூலுள் விளக்கமுற எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

## பகுப்பு

இவ்வாணாதிராயர்கள் பிற்காலச் சோழர்—பாண்டியர் அரசுரிமைப் போராட்டத்தில் பங்கு பெற்ற வாணாதி-ராயர்கள், அதற்கு முன்னரே பாண்டிய நாட்டில் இருந்த வாணாதிராயர்கள், பாண்டிய நாட்டின் மீது சோழர்க்கு உதவியாகப் படையெடுத்து வந்த வாணாதிராயர்கள், பாண்டிய அரசர்களின் அரசியல் அதிகாரிகளாக விளங்கிய வாணாதிராயர்கள், பாண்டிய நாட்டில் முசுலிம் மன்னர் காலத்தில் இருந்த வாணாதிராயர்கள், மதுரை நாயக்கர் ஆட்சியின் தொடக்கத்திற்கு முன்பு பாண்டிய நாட்டின் வடபகுதியில் விசயநகரப் பேரரசுக்குக் கீழ்த் தனியாணை நடத்திய வாணாதிராயர்கள், மதுரை நாயக்கமன்னர் களுக்குக்கீழ் பாளையக்காரராக விளங்கிய வாணாதிராயர் கள் வரலாறு குறித்த செய்திகளும் காலந்தோறும் பாண்டிய நாட்டில் அரசியல், நாகரிகம், பண்பாடு, கலை, சமயம், முதலானவற்றில் இவர்கள் ஆற்றிய பங்கு எத்தகையது என்பது குறித்த செய்திகளும் இந்நூலுள் விரிவாக எடுத்தெழுதப்பட்டுள்ளன, வாணாதிராயர் பற்றிய இச்செய்திகள், பாண்டியர்காலம், மகமதியர்காலம், விசய நகரவேந்தர்காலம், நாயக்கர்காலம் என்று வெவ்வேறு இயல்களாகப் பிரிக்கப்பெற்றுக் காலவாரியாக எடுத்துக் கூறப்பெற்றுள்ளன.

## சான்றுமூலங்கள்

கல்வெட்டுக்கள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காசுகள், சிற்பங்கள், கட்டடங்கள், இலக்கியங்கள், வழக்காறுகள், ஆகியவற்றின் துணைகொண்டு இந்நூல் உருவாக்கப்பெற்றுள்ளது. மேலும் வாணாதிராயர்கள் பற்றி வெளி வந்த கல்வெட்டுக்களின் வாசகங்கள் (Annual Report on Indian Epigraphy) பல இதுவரை சுருக்கமாகவே வெளி வந்துள்ளன. அக்கல்வெட்டுக்களோடு புதியதாகக் கண்டறியப்பெற்ற கல்வெட்டுக்களும் விளக்கமாகப் படிக்கப் பட்டு இந்நூலாக்கத்திற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## வாணாதிராயர்கள் பொதுச்செய்திகள்

வாணாதிராயர்கள் என்று அழைக்கப்பட்ட பாண அரச பரம்பரையினர் தென்னிந்திய வரலாற்றில் குறிப்பிடத்தக்க இடத்தை வகித்து வந்திருக்கின்றார்கள். மாபலிச் சக்கரவர்த்தியின் வழியில் வந்தவர்கள் என்று தங்களைக் கூறிக்கொண்ட இவர்கள் 'மாவலி வாணாதிராயர்' என்று தம்மை பெயரிட்டு அழைத்துக்கொண்டார்கள். கல்வெட்டுக் களில் இவர்களே வாணர் என்றும், பாணர் என்றும் மாறி மாறி அழைக்கப்பட்டிருக்கின்றனர். பல பேரரசுகட்குக் கீழ் சிற்றரசர்களாகவும், அரசியல் அதிகாரிகளாகவும் விளங்கினார்கள், சரித்திர காலந்தொட்டு பதினேழாம் நூற்றாண்டு வரை ஒரு பெரும் பேரரசுக்குக்கூட இல்லாத தொடர்ச்சியான வரலாறு வாணாதிராயர் குலத்திற்கு உண்டு. எல்லோருக்கும் வளைந்து கொடுத்த பண்பே இவர் களது இந்த நீண்ட வாழ்வுக்கு ஒரு காரணமாயிருந்தது. இவர்களது வீரமும் நிர்வாகத்திறமையும் குலமரபும் இவர்களது ஆதரவைப்புறக்கணிக்க இயலாதவாறு பல பேரரசுகளால் ஏற்றுக்கொள்ளப் பெற்று வந்ததும்

வாணாதிராயர்களின் நீண்ட வாழ்விற்கு மற்றொரு முக்கிய காரணமாகும். வாய்ப்புக் கிடைத்த போதெல்லாம் இவர்கள் தங்களது தனித்தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள அப் பேரரசுகளுடன் இடைவிடாது போராடியும் வந்திருக்கின்றனர்.

இவர்களைப் பற்றி பழந்தமிழ் இலக்கியங்களிலும், குறிப்புக்கள் காணப்படுகின்றன. அகநானூற்றின் 325ஆம் பாடலில் 'பாணர் நன்னாட்டுக்குச் செல்லும்வழி' மாமூலனாரால் குறிப்பிடப்படுகின்றது. அகம். 113-ஆம் பாடலில் பாணன் நாட்டில் நடைபெற்ற விழா குறிப்பிடப்படுகின்றது. மேலும் அகம். 117, 204, நற்றிணை 340-ஆம் பாடல்களில் "வாணன் சிறுகுடி"யின் வளம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

தென்னிந்தியாவில் சாதவாகனர்க்குக் கீழ்க் கோலார், கர்நூல் பகுதிகளில் இவர்களது அரசியல் வாழ்வு தொடங்குகிறது எனலாம். கி. பி. நான்காம் நூற்றாண்டில் கதம்பர்க்கு அடங்கிய சிற்றரசர்களாகத் தலையெடுத்தவர்கள் பின்னர்ச் சாளுக்கியர், காஞ்சிப்பல்லவர், இராட்டிரகூடர், சோழர், முதலிய பேரரசர்கட்குக் கீழ் அடங்கி வாழ்ந்தார்கள். இவர்களில் ஒரு பகுதியினர் முதற்பராந்தக சோழன் காலத்தில் வடக்கே குண்டூர், கிருஷ்ணா முதலிய மாவட்டங்களில் தனித்தும் ஆட்சி நடத்தியுள்ளார்கள். மற்றொரு பகுதியினர் பெண்ணைக்கரையில் இருந்த பாணப்பாடியில் சோழர்க்குக் கட்டுப்பட்டு ஆட்சி நடத்தினர். கல்வெட்டுகளில் இது வாணகோப்பாடி எனக் குறிப்பிடபெறும். பிற்காலச் சோழர் காலத்தில் வாணர்களில் ஒரு பகுதியினர் சேலம் மாவட்டத்தின் ஒரு பகுதியில் ஆட்சி நடத்தினர். வாணர்கள் ஆண்ட இப்பகுதி 'மகதேசம்' என்றும் 'மகதை மண்டலம்' என்றும் கூறப்பட்டது. இது சேலம் மாவட்டத்தின் கீழ்ப் பகுதியையும், தென்னார்க்காடு மாவட்டத்தின் மேற்

பகுதியையும் தன்னகத்துக்கொண்டது. இன்று சேலம் மாவட்டத்தில் ஆத்தூருக்கு அருகிலுள்ள ஆறகளூரே இதன் தலைநகரமாகும். 'அந்நாட்களில் ஆண்ட அரசர்கள் "வாணக்கோவரையர்" எனவும், 'வாணாதிராயர்' எனவும் 'வாணாதிராசர்' எனவும் 'மகதேசன்' எனவும் 'மகதேச நாயினார்' எனவும் தம்மை அழைத்துக்கொண்டனர்.

இவ்வாணாதிராயர்கள் சோழர்கள் வலியிழந்தபோது, பிற்காலப் பாண்டிய மன்னர்களுக்குக்கீழ்ச் சிற்றரசர்களாகவும் அவர்களது அரசியல் அதிகாரிகளாகவும் விளங்கினார்கள். பிற்காலப்பாண்டியர்களின் வீழ்ச்சிக்குப் பின்னர் பாண்டிய நாட்டில் முசுலீம் ஆட்சிக்குப் பிறகு இவ்வாணாதிராயர்களின் வழிவந்தோரில் ஒரு பிரிவினர் புதுக்கோட்டை, மதுரை, பழைய முகவை மாவட்டங்களில் விசயநகர அரசுக்குக்கீழ்த் தனியாக அரசு நடத்தினர் மதுரையில் நாயக்க மன்னர்களின் ஆட்சி ஏற்பட்டதும், அவர்கள் நாட்டில் அமைதியையும் பாதுகாப்பையும் ஏற்படுத்த அமைந்த பாளையப்பட்டில் இவ்வாணாதிராயரும் ஒருவராகினர். இத்துடன் பாண்டிய நாட்டில் இவர்களின் அரசியல் வாழ்வு ஒடுங்கியது எனலாம்.

# பாண்டியர் காலம்

மூன்றாம் குலோத்துங்கன் பாண்டிய நாட்டைக் கைப்பற்றி ஆட்சி செய்த காலத்தில் பாண்டியர்களைக் கலகம் செய்யாது தடுத்து நிறுத்திச் சோழர் ஆட்சியைப் பாதுகாக்கும் பொருட்டு இராமநாதபுரம் மதுரை மாவட்டங்களில் இவ்வாணாதிராயர்கள் குடியேற்றப்பட்டனர் என்பர்.[1] மூன்றாம் குலோத்துங்கன் பாண்டியர்களை அடக்க வாணாதிராயர்களைப் பயன்படுத்தியது உண்மைதான். ஆனால் வாணாதிராயர்கள் அதற்கு முன்பே பாண்டிய நாட்டிற்கு வந்து சோழர்களுக்கு எதிராகப் பாண்டிய மன்னர்களின் அதிகாரிகளாகப் பணிபுரிந்திருக்கின்றனர் என்பதற்குச் சான்றாக, நமக்கு கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன.

## பாணாதிராஜன் (கி. பி. 11ஆம் நூற்றாண்டு)

கி. பி. 11ம் நூற்றாண்டைச் சார்ந்த மன்னன் பெயர் இல்லாது[2] 28ஆம் ஆட்சியாண்டைக்குறிக்கும் அழகர்கோவில் கல்வெட்டு ஒன்றில் ''பாணாதிராஜன்'' ஒருவன் குறிப்பிடப் படுகின்றான். பாணாதிராஜன் என்ற பெயர் மட்டும் உள்ள இத்துண்டுக் கல்வெட்டில் இவனைப் பற்றிய செய்தி எதனையும் தெரிந்து கொள்ள இயலவில்லை. வாணர்களின் வருகை பாண்டிய நாட்டில் பதினொன்றாம் நூற்றாண்டிலேயே தொடங்கிவிட்டது என்பதை இக்கல்வெட்டு உணர்த்துகிறது. பாண்டிய நாடும் பாணப்பாடியும் கி. பி. 11ஆம் நூற்றாண்டில் சோழ மன்னர்களது ஆட்சிக்குக் கீழிருந்தன சோழ மன்னர்களுக்குக் கீழிருந்த வாணாதிராயர்கள்

இக்காலத்தில் அவர்களது அரசியல் அதிகாரிகளாகவும் பாண்டிய நாட்டிற்கு வர ஆரம்பித்திருக்கவேண்டும்[2] என்பதையும் இது காட்டுகிறது.

## வாணாதிராஜன் (கி. பி. 12ம் நூற்றாண்டு)

கி. பி. 12ம் நூற்றாண்டின் இறுதியைச் சார்ந்த நிலக் கோட்டை வட்டத்துத் தென்கரைச் சிவன்கோயில் அதிட்டானத்திலுள்ள கல்வெட்டு ஒன்று பாண்டிய மன்னன் ஒருவனது அரசியல் அதிகாரியாக வாணன் ஒருவன் விளங்கியதைத் தெரிவிக்கின்றது, இதில் இவனது பெயர் 'வாணாதிராஜன்' என்று குறிப்பிடப்படுகின்றது. தென்கரை சிவன் கோயிலுக்கு நிலம் விடப்பட்ட அந்த ஆவணத்தில் இவன் கையெழுத்திட்டுள்ளான். சோழர்கள் ஆதிக்கம் பாண்டிய நாட்டின் மீது இருந்த இக்காலத்திலேயே அவர்களுக்கு ஆதரவு அளிக்காது சில வாணாதிராயர்கள் பாண்டியர்களுக்கு ஆதரவாக அவர்களது அரசியல் அதிகாரிகளாகப் பணிபுரிந்திருக்கிறார்கள் என்பதை இக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[3]

## இராசராச வாணகோவரையன் பொன்பரப்பினான் மகதைப்பெருமாள்

இவன் மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் மகதேசத்தை அவனுக்குக் கீழிருந்து ஆண்டு வந்தவன். குலோத்துங்கனது படைத்தலைவனாகப் பல நாடுகள் மீது படையெடுத்துச் சென்று வெற்றியும் கண்டவன். தென்னார்க்காடு பகுதியில் திட்டைக்குடியை ஆண்ட வெங்கார முத்தரையனை முறியடித்தவன். மலையமான்கள் மீதும் வெற்றிகண்டவன்[4] இவன் பெற்ற வெற்றிகளையும் இவனது சிறப்புக்களையும் பாண்டியநாட்டில் புதுக்

கோட்டைப் பகுதியிலுள்ள பல பாடல் கல்வெட்டுக்கள் எடுத்தியம்புகின்றன.

குடுமியான்மலையிலுள்ள குகைக்கோயிலில் வெட்டப் பட்டுள்ள பாடல் ஒன்று இவனது பிறந்த நாளாகிய திருவுத்திராட நாள் பற்றிச் சிறப்பித்துக் கூறுகின்றது.

பாரோங்கு கொற்றக் குடைவாணன் பல்புரவித்
தேரோன் திருவுத் திராடநாள் பேருவமை
குன்றெடா மால்யானைக் கோவேந்தர் வீற்றிருப்பச்
இன்றெடான் இன்றெடான் என்று[5]

இப்பாடல் திருவண்ணாமலை அருணாசலேசுவரர் கோயிலிலும் (பெருந்தொகை எண். 1161) இவனைப் புகழ்ந்து பாடும் பாடலில் ஒன்றாகப் பொறிக்கப்பட்டுள்ளது.

மூன்றாம் குலோத்துங்கன் சார்பில் அவனது படைத் தலைவர்களுள் இவ்வாணாதிராயனும் ஒருவனாக பெரும் பங்கேற்றுச் சென்று வடுகரை வெற்றி கண்டான். இதனை வடுகரையெல்லாம் புறங்கண்ட இவ்வாணன் மறுபடியும் வடக்கே வருவான் என்று எண்ணி வடவேந்தர் ஊர்கள் எல்லாம் உறங்காது என்று பின்வரும் குடுமியான்மலைப் பாடல் தெரிவிக்கின்றது.

மன்னாடு பூங்கழலான் வாணற்கு இளங்கோமான்
அந்நாள் வடுகெறிந்த ஆர்வத்தால்-இன்னம்
மறம்கால் வேல் அண்ணல் வரும்வரும் என்றேங்கி
உறங்கா வடவேந்தர் ஊர்[6]

பகையரசர் நடுக்கத்திற்கும், சார்ந்தவரின் வெற்றிக்கும் வாணாதிராயர்கள் காரணமாக இருந்திருக்கின்றார்கள்.

இவர்கள், யானைப்படையைப் பெற்றிருந்த பெருவேந்தர்களும் கண்டு அஞ்சும் மறப்பண்பைக் கொண்டிருந்தார்கள் என்பதை இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

மற்றொரு பாடல் 'மாலவிட்ட படை துரந்து வடுகெறிந்த மகதேசன்[7] என்று குறிப்பிடுகின்றது. இதேபோல் குடுமியான்மலை உச்சியிலுள்ள பாடல் கல்வெட்டு ஒன்றும்[8] பொன்னமராவதி சிவன்கோயிலில் உள்ள பாடல்கல்வெட்டு ஒன்றும்[9] இவனைப் புகழ்ந்து கூறுகின்றன. இவன் கண்ட வெற்றிகளில் எல்லாம் பலவசறாகச் சிறப்பித்துப் பேசப்படுவது பாண்டியர்கள் மீது கண்ட வெற்றிகளேயாகும். திருவண்ணாமலைக் கோயில் கல்வெட்டிலுள்ள வடமொழிச் சுலோகம் ஒன்று 'முன்பு ஐந்து முறை பாண்டியரின் முடி பறித்த இப்பாணன் தற்போது பெற்ற வெற்றியின் காரணமாக ஆறுமுறைகள் பாண்டியரின் முடிபறித்தான் என்ற பெயரைப் பெற்றான்' என்று தெரிவிக்கின்றது. இவ்வாணன் சோழ மன்னன் இரண்டசம் இராசாதிராசன் காலத்திலும் வாழ்ந்தவன் ஆவசன்.

சடாவர்மன் குலசேகரபாண்டியன் கி. பி. 1162ஆம் ஆண்டில் திருநெல்வேலியிலிருந்து பாண்டியநாட்டின் ஒரு பகுதியை ஆட்சிபுரிந்து வந்தான். அதே நேரத்தில் மதுரையிலிருந்து பாண்டிய நாட்டின் வட பகுதியை ஆண்டு வந்தான் பராக்கிரம பாண்டியன். இவன் இலங்கையரசனிடமிருந்து உதவியைப்பெறும் முன்னர் திடீரென குலசேகர பாண்டியன் மதுரை மீது படையெடுத்துப் பராக்கிரம பாண்டியனையும் அவனது மனைவி மக்களையும்கொன்று மதுரையைக் கைப்பற்றினான் இதனையறிந்த இலங்கையரசன் பாண்டியநாட்டின் மீது படையெடுத்து வந்து

குலசேகரனை வென்று பராக்கிரமபாண்டியன் புதல்வன் வீர பாண்டியனை ஆட்சிப் பீடத்தில் அமர்த்தினான். குலசேகரன் பலமுறை முயன்று நாட்டை மீட்க இயலாது இலங்கையரச னிடமும், வீரபாண்டியனிடமும் தோல்வியுற்றான். இறுதியில் நாட்டைப் பெறுவதற்காகச் சோழமன்னன் இரண்டாம் இராசாதிராசனின் உதவியை நாடினான். இராசாதிராசன் தன் படைத்தலைவர்களைப் பாண்டிய நாடு அனுப்பி இலங்கைப் படையை வென்று வீரபாண்டியனை விரட்டிக் குலசேகரனை மதுரையில் ஆட்சிப்பீடத்தில் அமர்த்தினான். குலசேகரன் சிறிது நாட்களில் சோழமன்னன் செய்த உதவியை மறந்து இலங்கைஅரசன் அனுப்பிய பரிசில்களைப் பெற்றுக் கொண்டு அவனோடு மணவுறவு செய்து கொள்ளவும் உடன்பட்டான். பாண்டியநாட்டில் இருந்த சோழமன்னனது படைத்தலைவர்களை அங்கிருந்து அகற்றவும் செய்தான். இதனை அறிந்த இராசாதிராசன் தனது அமைச்சன் வேத வனமுடையான் அம்மையப்பன் அண்ணன் பல்லவராயனைப் பாண்டியநாடு அனுப்பிப் பராக்கிரமபாண்டியனின் புதல்வன் வீரபாண்டியனுக்கு ஆட்சியை அளிக்குமாறு ஆணையிட்டான். பல்லவராயன் அச்சோழமன்னன் ஆணைப்படி குலசேகரனை வென்று வீரபாண்டியனை கி. பி. 1175ல் ஆட்சியில் அமர்த்தினான்.

கி.பி.1178ல் சோழநாட்டில் இரண்டாம்இராசாதிராசன் ஆட்சி முடிவடைந்து மூன்றாம் குலோத்துங்கன் ஆட்சி ஏற்பட்டது. சடாவர்மன் குலசேகரனைப் போன்றே வீரபாண்டியனும் சிறிது நாட்களுக்குப் பிறகு சோழமன்னன் செய்த உதவியை மறந்து சிங்களமன்னனோடு சேர்ந்து கொண்டு சோழ மன்னனிடம் மாறுபாடு கொண்டிருந்தான் அப்போது சடாவர்மன் குலசேகரனின் மகன் விக்கிரம பாண்டியன் தன் தந்தை செய்த செயலுக்கு வருந்தி

மூன்றாம்குலோத்துங்கனிடம் சென்று பாண்டிய நாட்டின் ஆட்சியை தனக்கு அளிக்குமாறு வேண்டிக்கொண்டான். எனவே கி.பி. 1180ஆம்ஆண்டில் மூன்றாம் குலோத்துங்கன் பாண்டியநாட்டின் மீது படையெடுத்துச் சென்று வீர பாண்டியனை வென்று விக்கிரம பாண்டியனுக்கு ஆட்சியை அளித்தான். நாட்டை இழந்த வீரபாண்டியன் மலைநாடு சென்று சேரமன்னன் உதவி பெற்று இழந்த நாட்டை மீட்க முயன்றான். குலோத்துங்கன் இளையான்குடிக்கருகிலுள்ள நெட்டூரில் வீரபாண்டியனை முறியடித்து பாண்டியர்க்குரிய முடியைக் கைப்பற்றினான்.[10] மேலே கண்ட போர்களில் எல்லாம் இராசராசவாணகோவரையன் சோழமன்னர்களுக்கு ஆதரவாகப் பங்கேற்றிருக்கவேண்டும்.[11] பல இடங்களில் சோழமன்னர்கள் பெற்ற வெற்றிகளையும் தன் வெற்றிகளாகக் கூறிக்கொள்ளும் இவ்வாணன் பாண்டியர்கள் சோழ மன்னர்களிடத்துப் பலமுறை தோல்வி கண்ட இப்போர்களில் பங்கேற்றதால் இவற்றை பாண்டியர்கள் தன்னிடத்து கண்ட தோல்வியாக எண்ணி இவன் திருவண்ணாமலைக் கல்வெட்டில் 'ஆறுமுறை பாண்டியர் முடிபறிக்கும் பேறு பெற்றேன்' என்று தன்னைக் கூறிக்கொள்வதில் வியப்பொன்றுமில்லை.

குடுமியான்மலையிலுள்ள இரண்டுபாடல்கல்வெட்டுக்கள் இவ்வாணன் பாண்டியர் மீது வெற்றி கண்டு அவர்களை மதுரைக்குத் தெற்கே விரட்டிப் பழம்பெருமையை இழக்கச் செய்ததைத் தெரிவிக்கின்றன. இப்பாண்டிய மன்னர்குலமே முன்பொரு காலத்தில் இந்திரன் முடியைக் காலால் உதைத்தது. கடலே வற்றிப் போகும்படி வடிவேலை கடல் மீது எறிந்தது. பெருவலியுடன் படையெடுத்துச் சென்று இணைக்கயலை இமயத்தின்மீது பொறித்தது ஆனால் இன்று அப்பெருவலியும் பெருமையையும் இழந்து

இவ்வாணனிடத்தில் தோல்வி கண்டு துவண்டு போனான் தென்னவர்கோன் என்ற பொருளில் குடுமியான்மலையில் பாடல் ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது.

மால்விட்ட படைதுரந்து வடுகெறிந்த
மகதேசன் வடிவேல் வாங்கக்
கால்விட்ட கதிர்முடிமே லிந்திரனைப்
புடைத்ததுமுன் கடல்போய் வற்ற
வேல்விட்ட தொருதிறலு முகிலிட்ட
தனிவிலங்கும் வெற்பி லேறச்
சேல்விட்ட பெருவலியு மாங்கே விட்
டுடைந்தான் தென்னவர் கோவே[12]

இதே போன்று திருவண்ணாமலைக் கோவில் சாசனத்திலும் இவனைப் புகழ்ந்து கூறும் பாடல் ஒன்று உள்ளது.

மேருவின் மேல் வென்று கயல் பொறித்த வார்த்தையினும்
வாரிபட வேலெறிந்த வார்த்தையினும்—கார்விளங்கு
முன்னிட்ட வார்த்தையினுந் தென்னர் மாகதற்குப்
பின்னிட்ட வார்த்தை பெரிது.

மற்றொரு பாடலில் வாணன் வடிவேலால் தோல்வியைத் தழுவி தென்னன் போன திசையில் இவ்வண்ணம் ஆனதே என்று கண்ணீரும் கம்பலையும் நிறைந்து நின்ற காட்சி காட்டப்பட்டுள்ளது.

இழைத்த படியிதுவோ வெங்கணா வென்றென்
றழைத்த வழுகுர லேயால் — தழைத்த குடை
மன்னர்கோன் வாணன் வடிவேலால் தோற்றுடைந்த
தென்னவர்கோன் போன திசை[13]

இதேபாடலின் முற்பகுதியின் மூலம் இவ்வாணன் பாண்டிய நாட்டு மக்களிடமிருந்து வரிவசூலித்ததைத் தெரிந்துகொள்ள முடிகிறது.

வீரமாகதன் ராசராசதேவன் பொன்பரப்பினான்
மகதைப் பெருமான் மகதைப்பெருமான் வாராதாகில்
பெருவெள்ளப் பெருஞ்சாவி போகாதாகில் இட்ட
திட்டுக்கு ஒன்றுக் கோறனர் குடுக்கக்கடவது[14]

திருவண்ணாமலைப் பாடல் கல்வெட்டுக்களும் வாணனிடம் பாண்டியர்கள் கண்ட தோல்விகளை விவரிக்கின்றன. அவற்றில் ஒரு பாடல் பாண்டியனை

'தென்மதுரை விட்டின்று தென்கடலான்'

என்கின்றது. இவ்வாணனிடம் இலங்கையரசன் அளித்த பரிசலை (மாணிப்படி) பாண்டியன் தராவிடில் சோழஅரசனின் ஆணை அவனது தலையை யானைக்காலால் இடறச் செய்யும் என்கின்றது ஒரு பாடல். மற்றொரு பாடல் சோழ அரசன் சார்பில் பாண்டியரிடம் சென்று திறை வாங்க இவ்வாணன் அனுப்பப்பட்டதைத் தெரிவிக்கின்றது.[15]

## வாணனுக்குப் பாண்டியர்முடி

குலோத்துங்கனால் நாட்டைப்பெற்ற விக்கிரம பாண்டியன் கி. பி. 1190 வரை பாண்டியநாட்டை குலோத்துங்கனுக்குக் கட்டுப்பட்டு ஆண்டான். அதன்பிறகு முதல்சடாவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி.1190-1218) அதைப் பெற்றுத் தொடர்ந்து சோழ அரசுக்குக் கட்டுப்பட்டு ஆட்சி நடத்திக் கொண்டிருந்தான். அந்நாளில் குலோத்துங்கன் கொங்குநாட்டுக் கருவூரைக் கைப்பற்றி

அங்கு சோழகேரளன் என்ற பெயருடன் விசயாபிசேகம் செய்தான். அதன்பிறகு தனக்குக்கீழிருந்த பாண்டியநாட்டின் தலைநகரான மதுரையிலும் விசயாபிசேகம் செய்துகொள்ள விருப்பினான். ஆனால் இதற்குப் பாண்டியன் குலசேகரன் மறுத்துவிடவே கி. பி. 1202ல் குலோத்துங்கன் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்றான். குலசேகரன் குலோத்துங்கன் முன் நிற்கமாட்டாது போரில் தோல்வியுற்று நாட்டையிழந்து உரிமைச் சுற்றத்தாருடன் மதுரையை விட்டோடினான். குலோத்துங்கன் தன்படையுடன் மதுரையில் புகுந்து அங்கிருந்த மண்டபங்களையும் மாளிகைகளையும் இடித்தான். தான் எண்ணியவாறே பாண்டியர் தலைநகரான மதுரையில் சோழபாண்டியன், திரிபுவன வீரதேவன், என்ற பெயரில் வீராபிசேகம் செய்து கொண்டான்.16 இப்போரிலும் ஆறகளூருடைய மகதேசன்பொன்பாப்பினான் ராசராச வாணகோவரையன் கலந்து கொண்டிருக்கின்றான்.

மூன்றாம்குலோத்துங்கன் இவ்விசயாபிசேகத்திற்கும் வீராபிசேகத்திற்கும் முன்பு தனக்கு மதுரையை வெற்றி கொள்ள உதவிய பாணன் ஒருவனுக்குப் பாண்டியன் என்று பெயர் கொடுத்து பாண்டியர் பட்டத்தைச் சூட்டினான் என்று அவனது மெய்க்கீர்த்தியில் குறிப்பிடுகின்றான்.

பாண்டியனைப் பாண்டியனென்னும் பேர் மாறிவர
நெடும்படைத் தென்னவர்கெட மதுரைகொண்ட
தோள்வலி பாடிய
பாணனைப் பாண்டியனென்று பருமணிப் பட்டஞ்
சூட்டினன்.

பாண்டியனைப் பேர்மாற்றி பாணனுக்குப் பட்டஞ்சூட்டிய இச்செயலைத் தன் படைத்தலைவனாக விளங்கிய

இவ்விராசராச வாணகோவரையன் பொன்பரப்பினான் மகதைப்பெருமாளைக் கொண்டே குலோத்துங்கன் நடத்தினான்.[17]

இதனை,

பாண்டியனைப் பேர்மாற்றி பாணற் கரசளித்த
ஆண்டகையென் றுன்னை யறியேனோ—முண்டெழுந்த
கார்மாற்றுஞ் செய்கை கடகரிவா ணாவுனது
பேர்மாற்று வதரிதோ பேசு.

என்று இவ்வாணனைப் புகழ்ந்துகூறும் தொண்டைமண்டல சதகவுரைப் பாடல் ஒன்று இதனை எடுத்துக் கூறுகின்றது.

'பாணன் மதுரைப் பதியாள வைத்தபிரான்'

என்ற தனிப்பாடல் ஒன்றும் (பெருந்தொகை எண். 1191) இதனை உறுதிப் படுத்துகிறது.

மூன்றாம் குலோத்துங்கன் இராசராச வாண கோவரையன் பொன்பரப்பினான் மகதைப் பெருமாளுக்கே பாண்டியன் பட்டத்தை அளித்திருக்கவேண்டும். ஏனெனில் மேற்கண்ட அவனைப் புகழ்ந்து பாடும் பாக்கள் இதனை உறுதிப்படுத்துவதோடு பாண்டிய நாட்டில் பல இடங்களில் அவனைப் பற்றிய பாடல்கள் கல்வெட்டுகளாகப் பொறிக்கப் பட்டிருப்பதும் இதனை உறுதிப்படுத்துகின்றது. புதுக் கோட்டைப் பகுதியிலுள்ள குடுமியான்மலைப் பாடல்கள் இவன் பாண்டியனை வெற்றி கொண்டதைத் தெரிவிக்கின் றன. இவ்வாணன் பட்டஞ்சூட்டப்பட்ட மதுரைக்கருகிலுள்ள திருப்பரங்குன்றத்திலும் இதே போன்ற பாடல்கள் கல்வெட்டுக்களாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இங்கேயுள்ள வடமொழிச் சலோகம் ஒன்றில் இவன் 'சகல வித்யா சக்கரவர்த்தி' என்று புகழ்ந்து கூறப்படுகின்றான். 17A

இப்பரங்குன்றில் பொறிக்கப்பட்டுள்ள இன்னும் சில தமிழ்ப்பாடல்களில் 'வீரப்பெருமாள் மகதேசன்' என்ற பெயரில் இவன் குறிப்பிடப்படுகின்றான்.173 வீரப் பெருமான் மகதேசன் என்பது பிற்காலத்தில் வாழ்ந்த ஒரு வாணாதிராயனுக்குரிய பெயராகக் கொள்ள வேண்டியதில்லை. இப்பெயர் இவனுக்குரிய பெயர்களில் ஒன்றாகும். திருவண்ணாமலைக் கோயிலில் இவனைப் புகழ்ந்து கூறும் பாடல்களில் ஒன்றிலும் இவன் வீரப்பெருமாள் மகதேசன் என்று குறிப்பிடுவது இம்முடிவினை உறுதிப்படுத்துகின்றது. 'வீரப்பெருமாள் மகதேசன்' என்று இவ்வாணன் பெயர் பொறித்த அடிமையோலையை (ஆளோலை) அடையாளமாக மார்பில் அணிந்து கொண்ட மன்னர்கள் தங்களுக்குரிய தாசினையும் முடியினையும் நாட்டையும் இவ்வாணனிடம் வந்து பெறுவார்கள் என்று திருவண்ணாமலையில் காணப்படும் பின்வரும் அப்பாடல் தெரிவிக்கின்றது.

தாரு முடியு முரசுந் தமக்குரிய
பாருமுடன் பெறுவர் பார்வேந்தர்-வீரப்
பெருமான் மகதேசன் பேரெழுதித் தத்தந்
திருமார்பி லாலோலை செய்து

பெருந்தொகை, எண். 1158

திருப்பரங்குன்றில் காணப்படும் மற்றொரு பாடல் இவ்வாணன் மதுரை, காஞ்சி, கருவூர் முதலிய ஊர்களை வென்றதாகக் குறிப்பிடுகின்றது.176 இப்பாடலில் இவன் பொன்பரப்பியபெருமான் என்றே குறிப்பிடப்படுகின்றான். இப்பெயர் திருவண்ணாமலை அருணாசலேசுவரர் கோயிலைப் பொன்வேய்ந்தமையால் இவனுக்கு ஏற்பட்டது. இவ்வெற்றிகள் இவ்வாணன் குலோத்துங்கன் படைத்தலைவனாய்ச் சென்று பெற்ற வெற்றிகளாகும் இவ்வெற்றியில்

மதுரையும் குறிப்பிடப்படுவதால் இவனே இப்பரங்குன்றில் காணப்படும் பாடல்களுக்கு உரியவன் என்பதும் மூன்றாம் குலோத்துங்கனால் மதுரையில் பாண்டியன் என்ற பெயரில் பட்டங்கட்டப் பெற்றவன் என்பதும் தெளிவாகின்றது. இந்நிகழ்ச்சி கி. பி. 1202க்குச் சிறிது முந்திய காலத்தில் நடைபெற்றிருக்க வேண்டும்.17D இச்செயலைக் குலோத்துங்கன் தனக்கு மதுரையில் முடிசூடிக்கொள்ள மறுத்த பாண்டியனை இழிவுபடுத்தும் நோக்கத்தின் அடையாளமாகவே செய்துமுடித்தான். முதலில் வாணனுக்கு முடிசூட்டிவிட்டு பிறகு தான் முடிசூடிக்கொண்டான். வாணனை மதுரை மன்னனாக ஆட்சிப்பீடத்தில் அமர்த்திப் பாண்டியனுக்குப்பதிலாக தனக்குக்கீழ் நெடுநாள் ஆட்சிபுரியச் செய்ய வேண்டும் என்ற நோக்கம் குலோத்துங்கனுக்கில்லை. இந்நிகழ்ச்சி முடிந்தவுடன் மதுரையில் அவன் செய்து கொண்ட வீராபிசேகமும். விசயாபிசேகமும் மூன்றாம் குலோத்துங்கன் உள்நோக்கத்தை நமக்குப் புலப்படுத்துகின்றது.

சோழமன்னர்க்கு ஆதரவாய் இருந்த இப்பாணனுக்கு எதிராக இருவாணர்கள் இருந்ததைத் திருவண்ணாமலைக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது. பதினொரு தலைவர்கள் சேதிராயர் தலைமையில் கூடி இவ்வாணனோடு எந்தவித உறவும் வைத்துக்கொள்ளக் கூடாது என்று முடிவு செய்தார்கள். இவர்களில் மகதை நாடாழ்வானான வாணகோவரையன், குலோத்துங்கசோழ வாண-கோவரையன் என்ற பெயர்கள் கொண்ட இரு வாணர்கள் இருந்தார்கள் என்று அக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.[18] குலோத்துங்கனுக்கு ஆதரவாய் இருந்த இராசராச வாணகோவரையனுக்கு எதிராக இம்முடிவு குலோத்துங்கனின் இருபத்தேழாம் ஆட்சியாண்டில் கி. பி. 1205ல்

எடுக்கப்பட்டிருக்கிறது. இதற்குச் சற்று முன்புதான் 1202ல் இருந்து குலோத்துங்கனால் நாட்டையிழந்த முதல் சடாவர்மன் குலசேகரன் மீண்டும் பாண்டியநாட்டைப் பெற்று ஆட்சிபுரியத்தொடங்கிய காலம். இக்கல்வெட்டில்கண்ட இருவாணர்களும் இராசராசதேவன் பொன்பரப்பினான்வாணக்கோவரையனுக்கு ஆதரவளித்த மூன்றாம் குலோத்துங்கனுக்கு எதிராக பாண்டிய அரசுக்கு ஆதரவாய் இருந்திருக்க வேண்டும் என்று உய்த்துணர இக்கல்வெட்டு இடந்தருகின்றது.

## பாணனுக்குச்சோழர்முடி

கி பி. 1218ல் சோழநாட்டில் குலோத்துங்கன் முதுமையுற்று அவனது ஆட்சி முடிவடைந்து மூன்றாம் இராசராச சோழன் ஆட்சிக்கு வர இருந்தான். இவன் குலோத்துங்கனைப் போன்று 'தன்னாட்டைக் காப்பதற்கேற்ற ஆற்றல் அற்றிருந்தான். அவ்வேளையில் பாண்டிய நாட்டில் கி. பி. 1216ல் இளவரசுப் பட்டம் கட்டப்பெற்ற சடாவர்மன் குலசேகர பாண்டியனின் தம்பி மாறவர்மன் சுந்தர பாண்டியன் குலோத்துங்கனால் பாண்டிய நாட்டிற்கு ஏற்பட்ட இழிவையும், அழிவையும், பாணன் ஒருவனுக்கு அது அளிக்கப்பட்ட தன்மையையும் எண்ணி கி, பி. 1218ல் சோழநாட்டின் மீது படையெடுத்தான். போரில் சோழ மன்னன் தோற்கடிக்கப்பட்டான். தஞ்சையும் உறந்தையும் செந்தழலுக்கு இரையாக்கப்பட்டன. குலோத்துங்கன் மதுரையில் மாடமாளிகையையும் மண்டபத்தையும இடித்தது போன்று சோணாட்டில் இருந்த மாடமும் மாளிகையும் மண்டபமும் இடிக்கப்பெற்றன. குலோத்துங்கன் பாண்டியனைப் பாண்டியனென்னும் பெயர் மாற்றிப் பாணன் ஒருவனுக்குப் பருமணிப்பட்டஞ் சூட்டியதை

மறக்காத மாறவர்மன் சுர்தரபாண்டியன் சோழமன்னன் முடியைப் பறித்து முதலில் அதை ஒரு பாணனுக்குச் சூட்டி மகிழ்ந்தான். அதன் பிறகே ஆயிரத்தளியில் அபிசேக மண்டபத்தில் வீராபிசேகம் செய்து கொண்டான் என்று அவனது மெய்க்கீர்த்தி தெரிவிக்கின்றது.

'' தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்தி
காவியும் நிலமும் நின்று கவினிழப்ப
வாவியு மாறு மணிநீர் நலனழித்துப்
மாடமு மாளிகையும் மண்டபமும் பலவிடித்துத்
தொழுது வந்தடையா நிருபர்தந் தோகையர்
அழுத கண்ணீ ராறு பரப்பிக்
கழுதை கொண்டுழுது கவடி வித்திச்
செம்பியனைச் சினமிரியப் பொருதுசுரம் புகவோட்டிப்
பைம்பொன் முடிபறித்து பாணனுக்குக் கொடுத்தருளி''

தமிழக வரலாற்றில் வரலாறு தன்னையே திருப்பிக்காட்டும் (History repeats itself) என்பதற்கு இதைவிட சிறந்த சான்று இருக்க முடியாது. சுந்தரபாண்டியன் எந்தப்பாண அரசனுக்குச் சோழர் முடியைத் தந்தான் என்று தெரியவில்லை. ஆனால் பெற்றது யார் என்று உய்த்துணர இடமிருக்கின்றது. முன்னர் குலோத்துங்கனுக்கு ஆதரவாய் இருந்த வாணகோவரையனுக்கு எதிரான கூட்டணியில் இருந்த மகதை நாடாழ்வானான வாணகோவரையன், குலோத்துங்கசோழ வாணக்கோவரையன் என்ற இருவாணர்களில் ஒருவராக அவன் இருக்கலாம். இவர்கள் இப்போரில் சோழ அரசனுக்கு எதிராகப் பாண்டியனுக்கு உதவியாய் இருந்திருக்கவேண்டும். இவ்வாணர் உதவியை மறவாத மாறவர்மன் சுந்தரபாண்டியன் தன் பகையைத் தீர்த்துக்கொள்வதற்கு இவர்களது உதவியை ஒரு வாய்ப்பாக ஏற்றுச் சோழ அரசைப் பழிவாங்கிக் கொண்டான்.

சுந்தரபாண்டியனது இச்செயலை அடிப்படையாகக் கொண்டு புனையப்பட்ட இரு தமிழ்ப்பாடல்கள் கல்வெட்டுக் களாகக் காணப்படுகின்றன. திருவானைக்காவலில் ஒன்றும் புதுக்கோட்டைப் பகுதியில் மற்றொன்றும் பொறிக்கப்பட்டுள்ளன.

திருவானைக்காவிலுள்ள பாடலின் கீழே பாண்டியனின் சின்னங்களாகிய இணைக்கயலும் செண்டும் பொறிக்கப் பட்டுள்ளன. இப்பாடல் கவிஞரின் கற்பனை நயம் செறிந்தது.

மாவடிவங்கொண்ட மால்சென்று வேண்டவு மன்னொருவன்
மூவடிமா நிலமேமுன் கொடுத்தது முத்தமிழ்நூல்
தூவடி வேபெய் சுந்தரபாண்டியன் சோழர் தங்கள்
பாவடி வைய்ய மகுடங் கொடுத்தது பாணனுக்கே

என்பதே இத்திருவானைக்காவல் கல்வெட்டுப் பாடலாகும்.

அன்று திருமால் சென்று கேட்டபோது மாபலி மூன்றடி நிலந்தான் அளித்தான். அன்று நிலம் அளித்தவன் மாவலி; இன்று நிலம் அளித்தவன் சுந்தரபாண்டியன். அன்று நிலத்தைப் பெற்றது பெருமாள்; ஆனால் இன்று நிலத்தைப் பெற்றது திருமாலுக்கு மூவுலகத்தை அளித்த மாபலியின் வழி வந்து பாணன் என்ற சுவையான உட்பொருளையும் தாங்கி நிற்கிறது இப்பாடல்.

இனி அடுத்த பாடலைக்காணலாம். இதுவும் முன்னைய பாடல் போன்றே கற்பனை நயம் சிறந்தது. இப்பாடல் பொதுவாகப் பாண்டியர் குலம் பற்றியும் குறிப்பாகச் சுந்தரபாண்டியனைப் பற்றியும் புகழ்ந்து பேசுகின்றது. வஞ்சப்புகழ்ச்சியாக அமைந்தது. இப்பாடல் 'பாண்டிய மன்னனாகிய மீனவர்கோனுக்கு எதைச் செய்யவேண்டும்.

எதைச் செய்யக்கூடாது என்ற பாகுபாடு தெரியவில்லையே! பொன்னிவளநாடான சோழ நாட்டை வென்று அதனைத் தானே வைத்துக்கொள்ளாது ஒரு பாணனுக்கு அளித்திருக்கின்றான். திருவுடை மன்னரைக் கண்டால் திருமாலைக் கண்டேன் என்பார்கள். இதையறியாது ஒரு சோழமன்னனைப் புறங்கண்டு அவன் மார்பில் தன் வீரத்தைப் பொறித்திருக்கின்றான். தனது மூன்றாங் கண்ணால் முப்புரத்தையே எரித்தவர் சிவபெருமான். அப் பெருமானைப் போய் முன்னொருநாள் ஒரு மீனவர்கோன் வையைக்கரையில் மண்சுமக்க வைத்துவிட்டு இவ்வுலகை ஆட்சிபுரிந்திருக்கின்றான். தரமறியாதது இம்மீனவர்குலம் என்ற பொருளில் சுந்தரபாண்டினை இகழ்வதுபோலப் புகழ்ந்து கூறுகிறது இப்பாடல்.

பொன்னி வளநாடு பாணன்பெறப் புரந்தான்
சென்னி திருமார்பிற் செயல் தீட்டினான்-முன்னே
புரமெறிவார் மண்சுமக்க பூபாரங் காத்தான்
தரமறயான் மீனவர் கோன்[19]

இப்பாடலில் வரும் புரமெறிவார் மண்சுமக்கப் பூபாரங் காத்த பெருமை தவிர சோழமன்னனை வென்றதும். பொன்னி வளநாட்டைப் பாணனுக்கு அளித்ததும் மாறவர்மன் சுந்தரபாண்டியனுக்கே உரிய பெருமைகளாகும்.

இச்சுந்தரபாண்டியனின் ஆற்றலாலும் பெருவீரத்தாலும் பாண்டியர்குலம் தழைக்க ஆரம்பித்தது. சோணாடு வலிமையிழந்தது. பாண்டிய அரசு மதுரையில் முகலிம் மன்னர்கள் ஆட்சி தொடங்கும் வரை கி. பி. 14ம் நூற்றாண்டின் தொடக்கம் வரை தென்னிந்தியாவில் வல்லரசுகளில் ஒன்றாக விளங்கியது. வாணர்களும் இக்

காலத்தில் தங்கள் தலைமையைச் சோழர்களிடமிருந்து பாண்டியர்க்கு மாற்றிக் கொண்டார்கள். இக்காலத்தில் பாண்டிய நாடெங்கும் சென்று இவ்வாணர்குலம் பணி யாற்றியதற்கு நமக்கு கல்வெட்டுச் சான்றுகள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. இவர்கள் பாண்டிய அரசர்களின் அதிகாரி களாகவும் சில பகுதிகளுக்குத் தலைவர்களாகவும் சிற்றரசர் களாகவும் விளங்கியதை இவை தெரிவிக்கின்றன.

இனி, இக்கல்வெட்டுக்களின் துணைகொண்டு எந்தெந்தப் பாண்டிய அரசர்களின் கீழ் எந்தெந்த வாணாதிராயர்கள், அரசியல் அதிகாரிகளாகவும் சிற்றரசர்களாகவும் பணியாற்றி னார்கள் என்பதையும் பிற்காலப்பாண்டியர்கால நாட்டின் வரலாறு, அரசியல், நாகரிகம், பண்பாடு, சமுதாயம், கலை, சமயம் முதலியவற்றிற்கு இவர்கள் ஆற்றிய பணிகளையும் காணலாம்.

**மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலம் (கி. பி. 1216-1238)**

இவன் காலத்தில் திருநட்டப்பெருமாளான சுந்தர பாண்டிய வாணாவதரையர்[20] அவனிநாராயணதேவரெனும் வழுதிநாராயணதேவர்[21] சுந்தரபாண்டிய வாணாதிராயர்[22] என்று பெயர் கொண்ட வாணாதிராயர்கள் வாழ்ந்திருக் கின்றனர்.

**திருநட்டப்பெருமாளான சுந்தரபாண்டிய வாணவதரையர்**

இவன் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் (கி. பி. 1219) கல்வெட்டிலும் ஏழாவது ஆட்சியாண்டு (கி. பி. 1223) கல்வெட்டிலும் குறிப்பிடப் பட்டுள்ளான். இவன் அவனிநாராயண தேவரெனும் வழுதிநாராயணதேவர் என்ற வாணாதிராயனுக்குத்

தந்தையாவான். மதுரை மாவட்டத்தில் மேலூரிலிருந்து திருச்சி செல்லும் பாதையில் அமைந்திருக்கின்றது அருவிமலை. இங்குள்ள கல்வெட்டில் இது அறுகைக்குன்றம் என்று குறிக்கப்படுகின்றது. இவ்வறுகைக்குன்றத்தில் இருந்த படைத்தலைவருள் ஒருவனாக இவ்வாணாதிராயன் விளங்கியிருக்கின்றான். 'ஆனைமலைநாட்டு அறுகைக் குன்றத்து அகப்பரிவாரமுதலிகளில்திருநட்டப்பெருமாளான சுந்தரபாண்டிய வாணவதரையர்' என்று கல்வெட்டில் இவன் குறிப்பிடப்படுகின்றான். திருநட்டப்பெருமாளான பிள்ளையார் அழகப்பெருமாள்' என்ற மற்றொரு பெயரும் இவனுக்கு இருந்திருக்கிறது. திருநட்டப்பெருமாள் என்ற தனது இயற்பெயரோடு 'சுந்தரபாண்டியன்' என்ற தனது மன்னன் பெயரையும் சேர்த்து தன்னை அழைத்துக் கொண்டிருக்கின்றான். இவனைப் பற்றியும் இவனது மகன் வழுதிநாராயணதேவரைப் பற்றியும் தெரிவிக்கும் சுந்தரபாண்டியனின் இரண்டாவது, ஏழாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்கள் மேலூர் வட்டம் கள்ளங்காடு சிவன்கோயி விலும் இதனருகில் உள்ள மாவலிப்பாறையிலும் காணப் படுகின்றன[23]

கள்ளங்காட்டிற்கு அருகிலுள்ள பாறை மாவலிப்பாறை என்று இன்றும் மக்களால் அழைக்கப்பெறுவது குறிப்பிடத் தக்க செய்தியாகும். இது வாணாதிராயர்கள் இப்பகுதியில் வாழ்ந்திருக்கின்றனர் என்பதற்கு மக்கள் வழக்காகக் கிடைக்கும் சிறந்த வரலாற்றுச் சான்றாகும். இங்குள்ள கல்வெட்டில் மூன்று பாறைகளின் பெயர்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. இவற்றில் இரண்டு வாணர்கள் பெயர் கொண்டு விளங்கியிருக்கின்றன. இவ்வூர்ச் சிவன்கோவிலுக்கு மேல் புறம் இருந்த பாறை 'மாவலிப்பாறை' என்றும் கீழ்ப்புறம் இருந்த பாறை 'வாணன்பாறை' என்றும் அழைக்கப் பெற்றிருக்கின்றன.

## வாணவதரையர் வழுதிநாராயணதேவர்

இவனும் தன் தந்தையைப் போன்றே அறுகைக்குன்றத் துப்பகுதியில் வாழ்ந்தவன். 'வாணவரான வழுதி நாராயண தேவர்' என்ற பெயரும் 'வாணனார்வாணவத்தரையர் அவனி நாராயணதேவர்' என்ற பெயரும் இவனுக்கு இருந்திருக் கின்றன. இதில் வழுதி என்பது பாண்டியரின் பட்டப் பெயராகும். திருநட்டப்பெருமாளின் 'மகனார்' என்றே கள்ளங்காடு மாவலிப்பாறைக் கல்வெட்டுக்களில் இவன் குறிப்பிடப்படுகின்றான்.

மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழநாடு சென்று வாகைசூடி வரும்நாளில் தன் பிறந்தநாளான அவிட்ட நட் சத்திரத்தன்று கள்ளங்காட்டிலுள்ள சிவன்கோயிலை ஊரார் வேண்டுதலுக்கு இணங்கக் கற்றளியாக்குவதற்கு வழுதி நாராயணதேவர்க்கு வாக்குக்கொடுத்தான். இவ்வாக்குப்படி இக்கோயிலைத் திருக்கற்றளியாக்குவதற்கு நிலஎல்லைகள் வகுக்கப்பட்டன. இதன்வடபால் திருவெணகாடன் பாறையும் மேல்பால் மாவலிப்பாறையும் கீழ்பால் காளாங்கரையும் தென்பால் வாணன்பாறையும் எல்லைகளாக ஆக்கப்பட்டன. இக்கற்றளியாக்குவதற்குப பொறுப்பேற்கும்படித் திருக் கொடுங்குன்றத்து பண்டாரத்தான் அழகியசுந்தரலாச் சாரியன்என்றகற்றச்சன் பணிக்கப்பட்டான். இவ்வாணையை மதுரை மாகண்டத்தரையரும் வஞ்சி மண்டலத்தரையரும் ஓலையில் எழுதச்செய்தனர். இவ்வோலையைச் சோணாட்டில் போரை முடித்துக்கொண்டு படையோடு பாண்டியநாடு திரும்பிக் கொண்டிருந்த திருநெல்வேலி வல்லபுரத்தைச் சார்ந்த கொன்றைவேலுடையானிடம் கொடுத்தனுப்பினர் என்று மாவலிப்பாறை கல்வெட்டு தெரிவிக்கின்றது.

சுந்தரபாண்டியனின் ஏழாவது ஆட்சியாண்டில் கி. பி, 1223ல் இவ்வழுதிநாராயணதேவர்க்குச் சொந்தமான

நிலத்தில் மதுரைமாக்கோல் என்ற நீட்டலளவைக் கோலால் இருநூற்றுஐம்பத்தாறு குழி கொண்டது ஒருமாவாக அளந்து வந்த கடமை, அந்தராயத்தை இச்சிவன்கோயில்நாயனார்க்கும், காராண்மைக்காணியை வழுதிநாராயணதேவர்க்கும் ஊரார் அளித்தனர் என்று கள்ளங்காடு சிவன்கோயில் கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இன்று இக்கோயில் மேலூரிலிருந்து திருச்சி செல்லும் வழியில் அமைந்த வஞ்சிநகரம் என்ற ஊரின் கிழக்கே ஒன்றரைக் கல்தொலைவில் கள்ளங்காடு என்ற பகுதியில் இடிந்த கோயிலாகக் காட்சியளிக்கின்றது. கல்வெட்டில் இதன் இறைவன் 'அகளங்கீசுரமுடைய நாயனார்' என்று குறிப்பிடப்படுகின்றார். ஜகதி, முப்படைக்குமுதம், வேதிகை ஆகிய கோயில் கட்டட உறுப்புக்களுடன் கூடியஅதிட்டானத்துடன் (base) மேற்பகுதியில்லாமல் கருவறை அர்த்த மண்டபத்துடன் கூடிய நிலையில் காட்சியளிக்கின்றது. கருவறையில் லிங்கம் ஒன்றும், கோயிலின் எதிரே உடைந்த தேவியின் சிலை ஒன்றும், நந்தியின் உருவம் ஒன்றும் மேற்கூரையில்லாதுவிளங்கும் இக்கோயிலின் கட்டடப்பகுதிகளும் இதைச் சுற்றிச் சிதறிக்கிடக்கின்றன.

### சுந்தரபாண்டிய வரணாதிராயன்

இவனும் சுந்தரபாண்டியனின் மூன்றாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்றில் குறிப்பிடப்படுகின்றான். திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலில் பொறிக்கப்பட்டுள்ள இம்மன்னனின் ஆணையில் இவன் கைச்சாத்து இட்டுள்ளான்.[24] இவனைப் பற்றி வேறு செய்திகள் தெரியவில்லை.

## இரண்டாம் சடாவர்மன் குலசேகர பாண்டியன் காலம் (கி. பி. 1238)

இவன் காலத்தில் இருந்த வாணாதிராயர்கள் பற்றி அண்ணா மாவட்டம் நிலக்கோட்டை வட்டம் தென்கரைச் சிவன் கோயில் கல்வெட்டால் அறிந்து கொள்ளமுடிகின்றது. 'பூதலவனிதை மேதக விளங்க' என்று தொடங்கும் இக்கல் வெட்டு இம்மன்னனது இரண்டாவது ஆட்சியாண்டைச் சார்ந்தது ஆகும்.

## கங்கைகொண்டான் சுந்தரபாண்டிய வாணாதிராசன்

மேலே குறிக்கப்பெற்ற தென்கரைச் சிவன்கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிலக்கொடை ஆவணத்தில் இவன் அதிகாரியாக கையொப்பம் இட்டுள்ளான். இவன் சிவகாசி சாத்தூர் வட்டங்களில் விளங்கிய வெண்பைக்குடிநாட்டுக் காவனூரைச் சார்ந்தவன். கல்வெட்டில் வெண்பைக்குடி நாட்டு காவனூர் அரயன் கங்கைகொண்டானான 'சுந்தர பாண்டிய வாணாதிராஜன்' என்று குறிப்பிடப்படுகின்றான் சுந்தரபாண்டிய வாணாதிராசன் என்ற பெயர் கொண்ட இவன் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலும் வாழ்ந்திருக்க வேண்டும்[25] என்பதை இவனது இப்பெயர் உணர்த்துகின்றது.

## இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலம் (கி. பி. 1239-1251

சடாவர்மன் குலசேகரன் காலத்தில் வாழ்ந்த வாணாதிராயன் ஒருவன் இம்மன்னன் காலத்திலும் வாழ்ந்திருக்கின்றான் அருளாளன் சேவகத்தேவனான வாணாதிராஜன் என்று பெயர் பெற்ற இவனும்[26] சீவளவன் மதுரைப் பெருமாளான வாணக்கோவரையன் என்பவனும்[27] திருவேங்

கடத்துடையாள் வாணாதிராயர் என்பவனும் [28]மகாபலி வாணாதிராயன் என்பவனும் [29]இம்மன்னன் காலத்தில் வாழ்ந்த வாணாதிராயர்கள் ஆவார்கள்.

அருளாளன் சேவகத்தேவனான வாணாதிராசன்

இரண்டாம் சடாவர்மன் குலசேகர பாண்டியனின் இரண்டாவது ஆட்சியாண்டு தென்கரைக் கல்வெட்டிலும்[30] இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் நான்காவது (கி.பி. 1243) பதினைந்தாவது (கி.பி. 1254) ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்களிலும் இவன் குறிப்பிடப்படுகின்றான். அறந்தாங்கி, திருமயம் பகுதிகளில் சில பண்டு மிழலைக் கூற்றம் என்ற பெயரில் விளங்கின. இப்பகுதியில் இருந்த அக்கூற்றத்தின் கீழ்கூற்று தச்சனூரைச் சார்ந்தவன் இவ் வாணாதிராயன்[31]

இவன் மதுரை மீனாட்சியம்மன்கோயிலில் பல திருப்பணிகளைச் செய்திருக்கின்றான். வெண்பைக்குடி நாட்டைச் சார்ந்த நம்பி(தாய)விடயநல்லூரில் இருந்த நிலங்களின் வரிகளால் வந்த வருமானம் இவ்வாணதிராயன் மூலம் மதுரை ஆலவாய் அப்பருக்கு அரசன் ஆணையினால் அளிக்கச்செய்யப்பட்டன. இவ்வருமானத்தைக் கொண்டு ஆலவாய் நாயனார்க்கு இவனால் 'வாணாதிராயன் சந்தி' என்றஒரு சந்தி ஏற்படுத்தப்பட்டது. ஆண்டுதோறும் மார்கழி மாத நாட்களில் இறைவன் முன் திருவெம்பாவை பாடியவர்களுக்கு உணவு வழங்கப்பட்டது. திருவெம்பாவை பாடிய இவர்கள்'பரதேசிக் கோவணவர்' என்று அழைக்கப்பட்டனர். ஆலவாய் அழகனைக் கோயிலின் திருச்சுற்றில் ஊர்வலமாக எடுத்து வந்து அம்மன் கோயிலுக்கு தெற்குபுறமிருந்த 'வாணாதிராயன் வாசலில்' நிறுத்தி வைத்து அவர் கேட்கும்படி 'சதாரி' என்ற இசைப்பண் பாடவும் ஏற்பாடு செய்யப்பட்டது [32]

ஆடவல்லானாகிய ஆலவாயழகன் ஆடுவதற்கு இவனால் 'அதிரவீசியாடுவார் திருமண்டபம்' என்ற மண்டபம் ஒன்று திருப்பணி செய்யப்பட்டது. இம்மண்டபம் இன்று சொக்கர் சன்னதிக்கு முன்புள்ள மகாமண்டபத்தின் தென்புறம் இருக்கும் வெள்ளியம்பலமாக பண்டு இருந்திருக்கவேண்டும் மேலும் இவனால் இக்கோயிலில் முதல்பிரகாரத்தில் 'திரு நடைமாளிகை' திருவம்பலம் முதலியன கட்டப்பட்டன. கோயிலுக்கு தேர் ஒன்றுசெய்து அளிக்கப்பட்டது. கோயிலின் முன்பிருந்த எழுநிலைக்கோபுரம் பழுதுபார்க்கப்பட்டது. இக் காரியங்கள் எல்லாம் சுந்தரபாண்டியனின் ஆணைப்படி அண்ணன் தமிழப்பல்லவரையன் என்பவனது வேண்டுதலின் படிசெய்யப்பட்டது[33] இதற்காகசோழபாண்டியநல்லூர்என்ற ஊர் வரிவிலக்கு செய்யப்பெற்று தானமாக விடப்பட்டது.

## சீவலவன் மதுரைப்பெருமான் வாணகோவரையன்

புதுக்கோட்டை பகுதியில் குடுமியான்மலைப் பகுதியான கோனாட்டு இராசராசபுரத்தைச் சேர்ந்தவன். மதுரைப் பெருமான் என்ற சிறப்புப்பெயர் கொண்டவன். திருப்பத்தூர் வட்டத்துச் சதுர்வேதிமங்கலத்திலுள்ள சுந்தரபாண்டியனின் மூன்றாவது ஆட்சியாண்டுச் (கி. பி. 1242) கல்வெட்டு இவனைப்பற்றி குறிப்பிடுகின்றது. இவ்வூரில் இருந்த சோழன்வாசல்திறந்தான் மடம்' என்ற பெயருடைய 'மடம் ஒன்றிற்கு இவன் நிலம் அளித்திருந்திருக்கின்றான்[34]

## திருவேங்கடத்துடையான் வாணாதிராயர்

இவன் சுந்தரபாண்டியனின் மூன்றாவது ஆட்சியாண்டு (கி. பி. 1242) பொன்னமராவதிக்கல்வெட்டிலும்[35] ஒன்பதாவது ஆட்சியாண்டு (கி. பி. 1248) அழகர்கோயில் கல்வெட்டிலும்[36] குறிப்பிடப்படுகின்றான். அழகர்கோயில பகுதியைச்

சார்ந்த இரணியமுட்ட நாட்டு ஆர்க்காடு என்ற ஊரைச் சார்ந்தவன். அழகர்மலையில் இருக்கும் சக்கரத்தாழ்வார்க்கு விளக்கு எரிப்பதற்காக அரச ஆணைப்படி இவனுக்குச் சொந்தமான நிலத்தைத் தானமாக அளித்துள்ளான்.37 இவன் குறிப்பிடத்தக்க பொதுத்தொண்டு ஒன்றும் செய்துள்ளான். புதுக்கோட்டை மாவட்டத்துப் பொன்னமராவதி நகரில் பொதுமக்கள் பயன்படுத்துவதற்காக தண்ணீர்ப் பந்தல் ஒன்றைத் தோற்றுவித்தான்.38 அதை நடத்துவதற்காக வரி நீக்கிய நிலத்தை நிரந்தரமாக அதற்கு அளித்துள்ளான்.

## மாவலி வாணாதிராயர்

இவன் இப்பாண்டியனது பதினொன்றாவது ஆட்சியாண்டு (கி. பி. 1250) மதுரைக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றான். இவனது இயற்பெயர் என்னவென்று தெரியவில்லை. இவன் மதுரைக்கோயிலின் உள்ளே 'விரதம் முடித்த ஈஸ்வரமுடையார்' என்ற பெயரில் சிவனுக்காக ஒரு சிற்றாலயத்தை எடுத்தான். அதற்கு ஆகும் அர்ச்சனை செலவிற்கு நிலமும் அளித்திருக்கிறான்.39 மதுரைக் கோயிலில் இவ்வாலயம் இன்று எப்பகுதியில் இருக்கிறது என்று அறிய இயலவில்லை.

## சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலம் (கி. பி. 1251-1271)

இம்மன்னன் பாண்டிய நாடு கடந்து வாணர்களுடைய நாடாகிய மகதேசத்தை வென்று அடிப்படுத்தினான் என்று இவனது கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.40 இதனைப் பாண்டியநாட்டில் இருந்த வாணாதிராயர்கள் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. இவன் காலத்தில் பாண்டிய

அரசின்கீழ் தொடர்ந்து வாணாதிராயர்கள் பணியாற்றி வந்தமைக்குச் சான்றாகக் கல்வெட்டுக்கள் பல நமக்கு கிடைத்துள்ளன.

### அரசுபுத்தன் சாமந்தன் வாணாதிராயன்

இவன் இப்பாண்டிய மன்னனது காலத்தில் வாழ்ந்தவன் ஆவான். புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டத்து ஊளவர்மாணிக்கத்திலுள்ள இவனது கல்வெட்டில் இவன் குறிப்பிடப்படுகின்றான். இவன் இவ்வூரில் இருந்த சிவன்கோயில் இறைவர்க்கு வழிபாட்டிற்காக நிலமளித்திருக்கின்றான். 'அரசு-புத்தன்' என்ற இவனது பெயர் புதுமையானதாக விளங்குகின்றது 'சாமந்தன்' என்ற அடைமொழியோடு இவன் விளங்குவதால் பாண்டியரின் படைத்தலைவருள் ஒருவராக விளங்கியிருக்கவேண்டும்[41] எனத் தெரிகின்றது.

இச்சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் பரந்து கிடந்த பாண்டியர்ஆட்சிப் பரப்பைப்பார்த்துக்கொள்வதற்கு ஆங்காங்கே பாண்டிய அரசகுலத்தின் பிரதிநிதிகள் இருந்தனர். சடையவர்மன் விக்கிரமபாண்டியன் என்பவன் சில காலம் தொண்டைநாடு, நடுநாடு ஆகியவற்றிற்குப் பிரதிநிதியாய் இருந்தான். இவன் கல்வெட்டுக்கள் கி. பி 1249 முதல் 1258 வரையில் கிடைத்திருக்கின்றன. சடையவர்மன் வீரபாண்டியன் என்பவனும் இம்மன்னன் காலத்தில் கி. பி. 1253 முதல் 1268 வரை சோழநாடு, நடுநாடு, தொண்டை நாடு ஆகியவற்றின் பிரதிநிதியாய் இருந்து அரசாண்டிருக்கின்றான் இவன் கி. பி. 1281வரை உயிருடன் இருந்திருக்கின்றான்[42] இவ்விக்கிரம பாண்டியன் வீரபாண்டியன் கல்வெட்டுக்களில் வாணாதிராயர்கள் பலர் குறிப்பிடப்படுகின்றனர்.

## சடாவர்மன் விக்கிரமபாண்டியன் காலம் (கி. பி. 1249-1258)

பாண்டியர்களது அரியாசனம் மழவராயன், கலிங்கராயன் என்று பெயர் பெற்று விளங்கியது அனைவரும் அறிந்த ஒன்றாகும். அதேவேளையில் பாண்டியரது அரியாசனம் வாணாதிராயன்' என்றும் இவன் காலத்தில் பெயர் பெற்று விளங்கியிருக்கின்றது. இச்சடாவர்மன் விக்கிரமபாண்டியனின் அரியாசனம் 'வாணாதிராயன்' என்று பெயர் பெற்று விளங்கியிருப்பதை மதுரைக் கல்வெட்டு ஒன்று நமக்குத் தெரிவிக்கின்றது.[43]

## மகதநாயனார் பராக்கிரமபாண்டிய மாபலிவாணாதிராயர்

இவன் சடாவர்மன் சுந்தரபாண்டியனின் திருக்களாக் குடியிலுள்ள எட்டாவது ஆட்சியாண்டுக் (கி. பி. 1259) கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றான் 'பாவனங்காரன்' என்ற இவனது பட்டப்பெயரில் இவ்வூரில் ஓர் ஏரி தோற்றுவிக்கப் பட்டதை இது தெரிவிக்கின்றது. இதில் இவன் பாண்டிய அரசனது மகன் என்றும் இவனது பெயர் மகதநாயனார் பராக்கிரம பாண்டிய மாவலிவாணாதிராயர் என்றும் குறிப் பிடப்படுகின்றது[44] வாணருக்கும் பாண்டியர்க்கும் இடையே ஏற்பட்ட மணவினையினால் பிறந்த இளவரசனாக இருக்க வேண்டும். ஆனால் எந்தப்பாண்டிய அரசனது மகன் என்று உறுதியாகத் தெரியவில்லை. 'பாவனங்காரன் வாய்க்கால்' என்று இவன் பெயரில் வாய்க்கால் ஒன்று சின்னமனூரில் 'இருந்திருக்கின்றது.[45]

இவன் விக்கிரமபாண்டியனின் ஐந்தாவது ஆட்சியாண்டு (கி. பி. 154 4) அழகர்கோயில் கல்வெட்டிலும்[46] திருக்காளக் குடியிலுள்ள ஏழாவது ஆட்சியாண்டு கி. பி. 1256 கல்வெட் டிலும்[47] குறிப்பிடப்பட்டிருக்கின்றான். இவ்விளவரசன் அழகர்கோயிலில் கோயில் முழுவதும் விளக்குகள் எரிய

ஏற்பாடு செய்தான். செங்குளம் என்ற கிராமத்திலிருந்து வரிகளால் வந்த வருமானம் இதற்காக அளிக்கப்பட்டது[48] திருக்காணக்குடி சிவன்கோயிலில் 'பாவனங்காரன் சந்தி' என்று இவனது பட்டப்பெயரால் ஒரு சந்தியை ஏற்படுத்தி அதற்கு ஆகும் செலவிற்காகப் பொன்னமராவதி நாட்டுக் கும்மாத்தலக்குடி என்ற ஊரைத் தானம் விட்டிருக்கின்றான்[19]

## உய்யநின்றாடுவான் வீரசோழதேவனான வாணாதிராசன்

இவன் ஸ்ரீவில்லிபுத்தூர்ப் பகுதியான திருமல்லிநாட்டு தடங்கண்ணி என்ற சிற்றூரைச் சார்ந்தவன். முகவை வட்டத்துத் தேவிபட்டணத்திலுள்ள விக்கிரமபாண்டியனின் நான்காவது ஆட்சியாண்டு[50] அரச ஆணை ஒன்றில் இவன் கைச்சாத்து இட்டுள்ளான். மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி. பி. 1216-1238) அமைச்சன் உய்யநின்றாடுவானான குருகுலத்தரையனும் இதே ஊரைச் சார்ந்தவன் ஆவான்[51] இவ்வமைச்சனுக்கும் இவ்வாணாதிராயனுக்கும் இடையேயுள்ள உறவை இன்னதென்று துணிந்து சொல்வதற்கில்லை. ஆனால் இருவர் பெயருக்கும் முன்னே 'உய்ய நின்றாடுவான்' என்ற பெயர் வருவது இருவரும் உய்ய நின்றாடுவானுக்கு உடன் பிறந்த மக்களோ என்று ஐயப்பட இடமளிக்கிறது. தடங்கண்ணி என்ற ஊர் இன்று T. மானகச்சேரி (தடங்கண்ணி மானகர்சேரி) என்ற பெயரில் ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து சிவகாசிக்குச் செல்லும் வழியில் அமைந்துள்ளது.

## அண்ணன் வாணாதிராயன்

இவனது இயற்பெயர் என்னவென்று தெரியவில்லை. மதுரையில் இருந்த கோசாலைமடம் (பசுமடம்) ஒன்றிற்குப் போசளமன்னன் வீரசோமேஸ்வரன் சார்பாக. இவன் நின்று

இயங்கிஆடுவான் என்பவனோடு சேர்ந்து பாண்டியா சனிடமிருந்து சோழவந்தான் செல்லும் வழியில் அமைந்த திருவேடகம் என்ற ஊரிலிருந்த நிலங்களைப் பெற்று அதை அம்மடத்தை நிர்வகித்து வருவதற்காக ஒரு மலையாள பிராமணர்க்குஅளித்தான். இதனைமதுரைக்கோயிலிலுள்ள சடாவர்மன் விக்கிரமபாண்டியனின் நான்காவது ஆட்சி யாண்டு (கி. பி. 1252) கல்வெட்டு தெரிவிக்கின்றது.[52]

### விக்கிரமபாண்டிய வாணாதிராயர்

''நாயனார்' விக்கிரமபாண்டிய மகாபலி வாணாதிராயர் என்று இவன் அழைக்கப்பெறுவதால் இவ்வாணாதிராயனும் வாணாதிராயர்க்கும் பாண்டியர்க்கும் பிறந்த இளவரசனாக இருக்கவேண்டும்[53] இவனை விக்கிரமபாண்டிய வாணாதி ராயனின் தம்பியாக இருக்கவேண்டும் என்பர்.[54] இவன் வேதசாத்திரம் வல்ல இருபத்து நான்கு பிராமணர்களுக்கு விரதம் முடித்த பாண்டிய சதுர்வேதிமங்கலம் என்ற ஊரைத் தானமாக அளித்திருக்கின்றான்.[55] இவனைப் பற்றி வேறு செய்திகள் எதுவும் கிடைக்கவில்லை.

### சடாவர்மன் வீரபாண்டியன் காலம் (கி. பி 1253-1281)

இவன் கல்வெட்டுக்களில் மாவலி வாணாதிராயர்[56] பிள்ளை குலசேகர மாவலிவாணாதிராயர்'[57] 'தேவர் வாணாதிராயர்'[58]' கங்காதரன் வாணாதிராயர்[58A]' என்ற வாணாதிராயர்கள் குறிப்பிடப்படுகின்றனர்.

### மாவலி வாணாதிராயர்.

இவன் இயற்பெயர் என்னவென்று தெரியவில்லை. புதுக்கோட்டை மாவட்டத்து குடுமியான்மலையிலுள்ள இம்மன்னனது இருபத்தொன்பதாவது (கி. பி. 1274) ஆட்சி யாண்டுக் கல்வெட்டில் இவ்வாணாதிராயன் குறிப்பிடப் படுகின்றான்.

அன்னவாசலுக்கு அருகிலிருக்கும் விசலூரில் இருந்த நிலங்கள் இம்மன்னனது காலத்தில் விளைச்சலின்றி மன்னனது கடமையும், கீழிறையும் (சிறு வரிகள்) இழந்து போய் பெருங்காடாய்க் கிடந்தன. இதனைக் கண்டு கரை நாட்டு நாட்டவரும் வைப்பூருடையார் என்பவரும் சேர்ந்து இவற்றிக்கு வெள்ளாற்றிலிருந்து பாசனவசதி செய்து அவ் வூராரே உழுது பாசனம் செய்யும்படி ஏற்பாடும் செய்தனர். அதிலிருந்து வருகின்ற கடமையையும், கீழிறையையும குடுமியான்மலை இறைவர்க்கு அளிக்கும்படி செய்தனர். அதன் பிறகும் அவ்வூரார் வரிகளைச் செலுத்த முடியாமல் இருந்தனர். இதனைக் கேள்வியுற்ற அரசன் இம்மாவலி வாணாதிராயரோடு காலிங்கராயரையும் சேர்த்து இவ்-வூருக்கு அனுப்பி வைத்தான் விசலூர் ஊரார் தாங்களே உழுது பயிர் செய்த போதும் வரிகளைச் செலுத்த முடியாத தங்கள் நிலையைப் பற்றி எடுத்துச்சொல்லி அவ்வூரில் இருந்த முன்னூறுவேலி நிலங்களையும் குடுமியான்மலை இறைவர்க்கே திருநாமத்துக்காணியாக இவ்வாணாதிராயன் மூலம் விற்றுக் கொடுத்தனர் என்று இக்குடுமியான்மலைக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[59]

## பிள்ளை குலசேகரமாவலிவாணாதிராயர்

இவன் இவ்வீரபாண்டியனின் இருபத்தாறாம் ஆட்சி யாண்டு (கி பி. 1274) சின்னமனூர் கல்வெட்டில் குறிப்பிடப் படுகின்றான்.[60] இம்மாவலி வாணாதிராயர் பாண்டிய அரசன் மாறவர்மன் குலசேகரனது தந்தை அல்லது பிள்ளையாக இருக்க வேண்டும் என்பர்.[61] புதுக்கோட்டை மாவட்டத்துக் குடுமியான்மலைப் பகுதியான கோனாடு இவன் பொறுப்பில் இருந்தது. இவன் மாறவர்மன் குலசேகரனின் ஆட்சிக் காலத்திலும் வாழ்ந்தவன் ஆவான்.

### கங்காதரவாரணாதிராயர்

வீரபாண்டியனின் இரண்டாவது ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்றில் இவன் குறிப்பிடப்படுகின்றான். புதியதாகக் கண்டறியப்பெற்ற இக்கல்வெட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் வட்டத்தி லுள்ள பெருமாள்பட்டி மதகுகல்லில் பொறிக்கப்பட்டுள்ளது. இவன் இவ்வூருக்கு அருகிலுள்ள ஏரிக்கரையில் நீர்ப்பாசன வசதி செய்ய மதகு ஒன்றை அமைத்து அம்மதகுக்கல்லின் மீது தன்செயல் தெரியும் வண்ணம் இக்கல்வெட்டைப் பொறித்துள்ளான்.

### சந்திரவாணன் (தஞ்சைவாணன்)

தமிழில் தஞ்சைவாணன் கோவை என்ற வரலாற்றுக் கோவை நூல் ஒன்று கிடைத்துள்ளது. நம்பியகப்பொருள் விளக்கத்திற்கு இதன் பாடல்கள் எடுத்துக்காட்டாகப் பயன் படுத்தப்பட்டுள்ளன. இது களவியல், வரையியல், கற்பியல், என்ற மூன்று பகுதிகளை உடையது. நானூற்று இருபத் தைந்து பாடல்களைக் கொண்டது. இதன் ஆசிரியர் தொண்டை நாட்டுச்செங்காட்டுக்கோட்டத்துத் துறையூரைச் சார்ந்த பொய்யாமொழிப் புலவர் ஆவார். இக்கோவையின் பாட்டுடைத் தலைவன் வேளாண்குடித் திலகம் ‘சந்திர வாணன்’ ஆவான். இவன் பாண்டிய மன்னன் குலசே கரனுக்கு அமைச்சனாகவும், படைத்தலைவனாகவும் இருந்தான். தன்னைப்புகழ்ந்து பாடிய பொய்யாமொழிப் புலவர்க்கு ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு பொன்னாலான தேங்காய்முடியை வழங்கினான். இவன் ஆண்ட மாறை நாடு என்பது திருநெல்வேலி மாவட்டம் தென்காசி வட்டத்திலுள்ள ஓர் உள்நாடாகும். இது கல்வெட்டில் குறு மாறை நாடு என்று குறிக்கப்படுகின்றது. இவன் முதல் சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் வாழ்ந்திருக்க முடியாது. மாறவர்மன் குலசேகரனின் காலத்தில்தான் (கி.பி.

1268-1310) வாழ்ந்து அவனது படைத்தலைவனாகச் சோழர், சேர மன்னர்களோடு போர் தொடுத்து வெற்றியடைந்தவனாக விளங்கியிருக்க வேண்டும் என்பர்[62] ஆனால் மேலே கண்ட இம்முடிவுகளுக்கு மாறாக தஞ்சைவாணன் கோவையிலேயே பலபாடல்கள் இருப்பதையும் அத்தஞ்சைவாணனின் சிறப்பையும் காணலாம்.

பெயரும் ஊரும் நாடும்

இவ்வாணனைக் கோவைநூல் கொண்டு 'தஞ்சைவாணன்' என்று அழைப்பது பெருவழக்காக இருப்பினும் கோவைப்பாடல்களில் சில இடங்களில் 'சந்திரவாணன்'[63] என்ற பெயரில் குறிப்பிடப்பட்டிருகின்றான். இதுவே இவனது சிறப்புப்பெயராக இருக்கவேண்டும். பாண்டியர் குலமாகிய சந்திரகுலத்திற்குக் கீழ் இவன் பணிபுரிந்தமையால் சந்திரவாணன் என்று தன்னை அழைத்துக் கொண்டிருக்கவேண்டும். மாறைநாட்டை ஆண்டதால் 'மாறைவாணன்' என்று அழைக்கப்பட்டான். தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டதால் 'தஞ்சைவாணன்' என்று அழைக்கப்பட்டான். இது நமக்கு சோழரது தலைநகர் தஞ்சையை நினைவூட்டிக் குழப்புகின்றது. ஆனால் மாறைநாடும்' தஞ்சையும் பாண்டியநாட்டிலேயே இருந்திருக்கின்றன.

தஞ்சைவாணன்கோவை.

'மண்ணில் சிறந்தபுகழ் தஞ்சைவாணன்'[64]
'மையார் குவளைவயல் தஞ்சைவாணன்'[65]
'மாவலிவாணன் வயல்தஞ்சைவாணன்'[66]
'தஞ்சையர்கோன்'[67]
'கலைநாடு தஞ்சையர்காவலன்'[68]
'சந்திரவாணன் தமிழ்த்தஞ்சை'[69]

என்று இவனையும் இவன் தலைநகர் தஞ்சையையும் சிறப்பித்துப் பேசுகின்றது. கோவையில் இவன் 'மாவலிவாணன்' என்று குறிப்பிடப்படுவதால் இவன் மாபலிச்சக்கரவர்த்தியின் வழிவந்த வாணர் குலத்தைச் சார்ந்தவன் என்பது தெளிவாகின்றது. இவன் நாடான மாறைநாடு 'தென்மாறை நாடு' என்று பல பாடல்களில் சிறப்பித்துப்பேசப்படுகின்றது.

'வாணன் தென்மாறை'70
வாவியும்சோலையும்சூழ் தஞ்சைவாணன் தென்மாறை71
தென்பால் திலகம்ஆன் கோன தஞ்சைவாணன் தென்மாறை72

இத் தஞ்சைவாணனின் தஞ்சையும் மாறைநாடும் தென் காசிப் பகுதியில் இருந்திருக்க முடியாது.

'தண்ணென் புனல்வையை சூழ் தஞ்சை'73
'மண்டும் திரைவையை சூழ் தஞ்சை'74
'தந்தும் திரைவையை சூழ் தஞ்சை'75
'வெங்கை வாணன் வையை
தருநீர் மலிவயல் தஞ்சை'76
'வாணன் வரும் தஞ்சை சூழ் வையை நாட்டு'77
'நன்றே தருவையை நாடு'78
'வாணன் தென்மாறை வையைத் தேயம்'79
'தஞ்சைவாணன் வையைத் துறை'80

என்று கோவைப் பாடல்களில் எல்லாம்

வாணன் தலைநகரான தஞ்சை, வையை சூழ்ந்து விளங்கும் என்றும் வாணனது நாடு வையை நாடு, வையைத் தேயம், வையைத்துறை என்றும் குறிப்பிடப்படுகின்றது. இதனால் மாறைநாடும் அதன் தலைநகர் தஞ்சையும் பாண்டியநாட்டில் வையைக் கரையிலேயே இருந்திருக்க வேண்டும் என்று துணியலாம். இதனால் வையைநதிக்கரையிலிருந்து வெகு

தொலைவில் இருக்கும் தென்காசிப்பகுதியிலுள்ள குறுமாறை நாட்டை வாணன்நாடு என்று சொல்வதற்கில்லை.

மதுரையிலிருந்து மானாமதுரை செல்லும் வழியில் திருப்புவனத்தை அடுத்து வையை ஆற்றின் தென்கரையில் அமைந்துள்ளது திருப்பாச்சேத்தி என்ற ஊர். இவ்வூருக்குக் கிழக்கே ஒரு மைல் தொலைவில் 'மாரநாடு' என்ற ஊர் உள்ளது. இதன் அருகிலேயே 'தஞ்சாக்கூர்' என்ற ஊரும் இருக்கிறது. தஞ்சாக்கூரில் சிவன் கோயிலில் உள்ள கி.பி. 1784-ம் ஆண்டைச் சார்ந்த ஓலைச்சுவடி ஒன்றில் இப் பகுதி 'மாறநாட்டுச் சீமை' என்றும் இவ்வூர் அதைச் சார்ந்த தஞ்சாக்கூர் என்றும் குறிக்கப்பட்டிருக்கிறது.[81] இத் தஞ்சாக்கூரே தஞ்சைவாணனின் தலைநகர் தஞ்சையாக இருக்கவேண்டும். மாரநாட்டுச் சீமையே இவனது மாறை நாடாக இருக்கவேண்டும். காலப்போக்கில் வழக்கில் தஞ்சை தஞ்சாக்கூராகவும், மாறைநாடு மாரநாடாகவும் மாறியிருக்க வேண்டும்.

## கொடையும் வீரமும்

இவ்வாணனுக்கு 'மானாகரன்'[82] 'வரோதயன்'[83] என்ற பட்டப்பெயர்கள் இருந்திருப்பது கோவைநூல் கொண்டு அறியமுடிகின்றது. இவனைக்கோவை 'செந்தமிழ்வாணன்'[84] என்று சிறப்பித்துப் பேசுகின்றது இவனது கொடையை

'வாரணம் கோடிதரும் தஞ்சைவாணன்'[85]
'தானக்களிறு தரும் புயல்வாணன்'[86]
'வலம்புரிபோல் கொடைவாணன்'[87]
'தருகற்பகம் அன்ன சந்திரவாணன்'[88]

என்று உயர்த்திக் கூறுகின்றது. இத்தஞ்சைவாணன் பகைவர்க்கு மகத்தில் சனி போன்றவன் என்பதை

'அடையார் தமக்கு
மகத்தில் சனி அன்ன சந்திரவாணன்'89

என்று இக்கோவை நூல் எடுத்துக் கூறும்.

இவனது வீரத்தை,

'சென்றே பகைவென்ற திண்படை வாணன்'90
'மருந்தொன்று கூரிலை வேல்படை வாணன்'91
'திறை கொண்ட வாணன்'92
பூட்டிய வார்சிலை வீரரை வென்றே பொருப்பிலும் சீர்
தீட்டிய வாணன்93

என்று சிறப்பித்துக் கூறும்.

வாணன் வெற்றிகள்

இவ்வாணன் பாண்டியரின் படைத்தலைவனாகப் பல நாடுகள் மீது படையெடுத்துச் சென்று பாண்டியருக்கு வெற்றியைத்தேடிபுகழ்ஈட்டித் தந்திருக்கின்றான்.

'செழியர் கயலைத் திசை வைத்த வாணன்'94
'கயல்கொடி பொன்வரையில் திகழ்வித்த வாணன்'95
'வழுதியம் நாமம் வளர்க்கின்ற வாணன்'96

என்று கோவை இவனைக் குறிப்பிடுகின்றது.

இவ்வாணன் சேரனையும்,சோழனையும் பல்லவனையும், கருநாடரையும் வென்றதாக இத்தஞ்சைவாணன் கோவை தெரிவிக்கின்றது. இவ்வெற்றிகள் இவ்வாணன் பாண்டியரின் படைத்தலைவனாயிருந்து ஈட்டியவையாகும். உண்மையில் இவை பாண்டிய அரசனின் வெற்றிகளேயாகும். ஆனால் இவற்றை இவ்வாணனுக்குரியவையாக இக்கோவைநூல் குறிப்பிடுகின்றது. இவ்வெற்றிகளை எல்லாம் பெற்ற ஒரு பாண்டிய அரசனின் காலத்திலேயே

இவ்வாணாதிராயனும் வாழ்ந்திருக்கவேண்டும். சதாசிவப் பண்டாரத்தார் கருதுவதுபோன்று இவ்வாணன் மாறவர்மன் குலசேகரபாண்டியனின் (கி. பி. 1268-1311) படைத்தலை-வனாக இருந்திருக்க வாய்ப்பில்லை. இம்மன்னன் காலத்துப் போர்நிகழ்ச்சிகள் இவன் ஈழநாட்டின் மீது படையெடுத்ததும் சேரநாட்டிலுள்ள கொல்லத்தைக் கைப்பற்றியதுமேயாகும் திருநெல்வேலி மாவட்டத்து சேரன்மாதேவியிலுள்ள இம் மன்னனது கல்வெட்டு97 ஒன்று இவன் மலைநாடு, சோழ நாடு, இருகொங்குநாடுகள், ஈழநாடு, தொண்டைநாடு, ஆகியவற்றை வென்றான் என்று கூறுகின்றது. இந்நாடுகள் முதலாம் சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலும் வீரபாண்டியன் காலத்திலும் முன்னரே வென்று பாண்டியர் ஆட்சிக்குப் அடிப்படுத்தப் பெற்றவையாகும். இந்நாடுகளில் நடந்த சிறுபூசல்களை இக்குலசேகரன் அடக்கியிருத்தலை-யே அவனது சேரன்மாதேவி கல்வெட்டு குறிப்பிடுகின்றது எனலாம்.98

முதல் சடாவர்மன் சுந்தரபாண்டியன் சேரநாடு, சோழ நாடு, ஈழம், தொண்டைநாடு, கொங்குநாடு முதலியவற்றின் மீது படையெடுத்துச் சென்று வென்றான் என்பதற்கு அவனது 'பூமலர்திருவும்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி சான்றாக விளங்குகின்றது.

### சேரநாட்டு வெற்றி

'வடிநெடு வாளும் வயப்பெரும் புரவியுந்
தொடிநெடுந் தோளுமே துணையெனச் சென்று
சேரனுந் தானையுந் செருகளத் தொழிய
வாரகும் புலரா மலைநாடு நூற'

என்று சேரநாடாகிய மலைநாட்டு வெற்றியை பாண்டியனது மெய்க்கீர்த்தி எடுத்துக் கூறுகிறது. இவ்வாணன் கோவை யோ அவனது சேரநாட்டு வெற்றியை,

'விஜயக்கொடி மேல்
வாங்கிய சாப முயர்த்தவன் போர் வென்ற வாணன்'99
'எதிர்ந்த ஒன்னார்
மன்மலை வேழம் திறைகொண்ட சேய் தஞ்சைவாணன்'100
'மலைநாடு கொண்ட வழுதி போல்பவன் வாணன்
என்னொன்
கலைநாடு தஞ்சையர் காவலன்'101
'செங்கோன் மழைபொழி வானவர் போர்வென்ற மீனவர் தாம்
செங்கோன் முறைமை செலுத்திய வாணன்'102

என்று எடுத்தியம்புகிறது.

## சோழரும் போசளரும்

சடாவர்மன் சுந்தரபாண்டியன் சோழநாட்டை வென்று திறைகொண்டு போசளருக்குச் சொந்தமான கண்ணனூரைப் (சமயபுரம்) பிடித்தான். அதனை அவனது மெய்க்கீர்த்தி

'பருதிமா மரபிற் பொருதிறல் மிக்க
சென்னியை திறைகொண்டு'
'பொன்னிநாட்டுப் போசளத் தரையர்களைப்
புரிசயில் அடைத்து'
'கண்ணனூர் கொப்பத்தைக் கைக்கொண்டருளி'

என்று கூறும்.

தஞ்சைவாணன்கோவையோ இவ்வாணன் பாண்டிய நாட்டைவிட்டு அகன்று சென்று சோழநாட்டுக் காவிரிக் கரையில் தங்கியிருந்து சோழநாட்டை வென்று சோழர்து சின்னத்தைக் கவர்ந்தானென்று கூறும்.

'கரைதாவி உந்தியகாவிரி வைகிய காலத்திலும்
தரைத்தாடு அன்னசெந் தண்ணளி'103
'கொலைகா லெயிற்படை நேரியற் கோனங் கோடவங்கைச்
சிலைக்கால் வளைத்துத் திருந்திய வாணன்'104
'மண்டும் திரைவையை சூழ்தஞ்சை வாணற்கு வன்புலியும்
செண்டும் கொடுத்தகல் செம்பியர் போல்'105

## பல்லவர் மீது வெற்றி

சடாவர்மன் சுந்தரபாண்டியன் 'கோப்பெருஞ்சிங்கன்' என்ற பிற்காலப் பல்லவ அரசன் அனுப்பிய திறைப்பொருளை ஏற்றுக் கொள்ளாது அவனது தலைநகராகிய சேந்தமங்கலம் சென்று அவனை வென்றடக்கினான் என்று அவனது மெய்கீர்த்தி கூறும்.

'வேந்தர் கண்டறியா விறற்றிண்புரிசைச்
சேந்தமங்கலச் செழும்பதி முற்றிப்
பல்லவனடுங்கப் பல போராடி.......'

இக் கோப்பெருஞ்சிங்கனுக்கு

'மல்லைபுரிவல்லபன்' .... (ஆத்தூர்) 106
'மல்லைக்காவலன்' .... (திருவண்ணாமலை) 107
மல்லைவேந்தன் .... (வாயலூர்)108

என்ற பட்டப் பெயர்கள் உள்ளன. இம்மல்லையர்க் காவலனை பாண்டியர் படைத்தலைவனாகச் சென்று தஞ்சைவாணன் வெற்றி கண்டதால்

'மல்லைஅும் போர் வென்ற வாணன்'109

என்று கோவையில் குறிப்பிடப்படுகின்றான். மாறவர்மன் குலசேகரன் கோப்பெருஞ்சிங்கனை வென்றதாகக் குறிப்பு ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை. மேலும் சடாவர்மன் சுந்தரபாண்டியன்

'பெருவரை யரணிற் பின்னரு காக்கிய
கருநாடராசனை களிறு திறைகொண்டு'

என்று கருநாடகரை வென்றதாக கூறிக்கொள்வது போன்றே சந்திரவாணன்,

'கொடிநெடுந்தேர்
கன்னாடர் மண்கொண்ட வாணன்'[11]

என்று கோவையில் குறிப்பிடப்படுகின்றான்.

இவ்வெற்றியும், மாறவர்மன் குலசேகரனுக்குரியது இல்லை. சடாவர்மன் சுந்தரபாண்டியன் பெற்ற வெற்றி-களையே, இத்தஞ்சைவாணன் பெற்ற வெற்றிகளாக கோவை நூல் ஆசிரியர் குறிப்பிட்டிருக்கவேண்டும். இப்போர்களிலெல்லாம் பாண்டியர் படைத்தலைவனாக இவ்வாணன் பங்குகொண்டிருக்க வேண்டும். இதனால் இவ்வாணன் இச்சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலும் அவனது பிரதிநிதிகளான சடாவர்மன் விக்கிரமபாண்டியன், சடாவர்மன் வீரபாண்டியன் காலத்திலும் வாழ்ந்திருக்கவேண்டுமென்று கூறலாம்.

இவர்களது கல்வெட்டுக்களில் ஏனோ இவனைப்-பற்றிய குறிப்பு ஏதும் காணப்படவில்லை. ஆனால் இவன் வேறுபெயரில் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருப்பானோ என்ற ஐயம் எழத்தான் செய்கின்றது. புதுக்கோட்டை இடையாத்தூரிலுள்ள சடாவர்மன் வீரபாண்டியனின் கல்வெட்டில் குறிப்பிடப்படும் வாணாதிராயன் இவனாக இருக்-கலாம் என்று எண்ண அக்கல்வெட்டுச் செய்தி இடமளிக்-கின்றது. இவ்விடையாத்தூர் பகுதியில் படையெடுத்து வந்து பலரைச்சிறைப்பிடித்து மாடுகள் கன்றுகள் முதலியவற்றைக் கவர்ந்து சென்றான் ஒரு வாணாதிராயன், பாண்டிய அரசனுக்கு எதிராக மறவமதுரையில் இது செய்வித்த அவனை பொன்னமராவதிக்கு அருகில் திருக்கொடுங்

குன்றமுடைய நாடாழ்வான் என்பவன் வென்று சிறைப் படுத்தினான் என்று அக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.[111]

தஞ்சைவாணன்கோவையோ தஞ்சைவாணன் பாண்டியர்க்குக்கீழ்ப் பணிபுரிந்தாலும் அவனுக்குக் கீழ்ப்பணிபுரியும் குற்றேவல்காரன் அல்ல வென்றும் அவன் ஒருமுறை பாண்டியனையே புறங்கண்டவன் என்றும்கூறுகிறது.

'தென்னன்
தன்னைப்பணிந்து குற்றேவல் செய்யாது அமர்க்கெதிர்ந்த
மன்னைப் புறங்கண்ட வாசலின் தென்மாறை'[112]

இக்கோவைச் செய்தியும்

இடையாத்தூர் கல்வெட்டுச் செய்தியும் ஒன்றென்று கொண்டால் அக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் வாணனும் இச்சந்திர வாணனும் ஒன்று என்றே கூறலாம். காலத்தினால் கிடைக்கும் கல்வெட்டுக்கள் தான் இதனை முடிவு செய்யவேண்டும்.

**வாணாதிராயர் சோலைமலைப் பெருமாள்**

திருவாடானை வட்டத்துப் பகுதியும் அதை ஒட்டியுள்ள அறந்தாங்கிப் பகுதியும் பண்டு 'முத்தூற்றுக்கூற்றம்' என்ற பெயரில் விளங்கின. இவன் இப்பகுதியில் இருந்த கப்பலூரைச் சார்ந்தவன். இச்சோலைமலைப்பெருமாள் சடாவர்மன் சுந்தரபாண்டியனின் பதின்மூன்றாவது ஆட்சியாண்டு (கி பி. 1264) ஸ்ரீவைகுண்டம் கல்வெட்டு ஒன்றில் 'முத்தூற்றுக் கூற்றநாட்டுக் கப்பலூர் வாணாதிராயர் சோலைமலைப்பெருமாள்' என்று குறிப்பிடப்படுகின்றான். ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள பெருமாள்கோயில் கோபுரத்தைச் 'சுந்தரபாண்டியன் திருக்கோபுரம்' என்ற பெயரில் திருப்பணி செய்ய, நல்லூர் என்ற ஊரில் இருந்த அரசனது நிலம்

'திருப்பணிப்புறமாக' விடப்பட்டது. அதற்காகப் பிறப்பிக்கப் பட்ட அரசு ஆணையில் இவ்வாணாதிராயன் கைச்சாத்து இட்டுள்ளான் 113 இதைத் தவிர இவனைப் பற்றி வேறு ஒன்றும் தெரியவில்லை.

## கங்கைப்பிள்ளை அழகியப்பிள்ளை வாணாதிராயர்

ஸ்ரீவைகுண்டத்தில் பொறிக்கப்பட்டுள்ள சடாவர்மன் சுந்தரபாண்டியனின் முப்பத்துமூன்றாவது ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்றில் இவன் குறிப்பிடப்படுகின்றான். இவ்வூர் பெருமாளுக்கு நித்திய நிவந்தங்களுக்கு வேண்டிய செலவினங்களுக்காக அரசனுக்குச் சொந்தமான நிலங்கள் திருவிடையாட்டமாக விடப்பட்டு அரசு ஆணையும் பிறப்பிக்கப்பட்டது. இவ்வாணையில் இவ்வாணாதிராயன் கைச்சாத்து இட்டுள்ளான். இவனது இயற்பெயர் அழகிய பிள்ளை என்பதாகும். இவனது தந்தை பெயர் கங்கைப் பிள்ளை என்பதாகும். இவன் இளையான்குடி வட்டத்தி லுள்ள இளையான்குடிப் பகுதியில் விளங்கிய வடவல்ல திருக்கைநாட்டைச் சார்ந்த இந்திராவதாரநல்லூரைச் சார்ந்தவன் ஆவான். 114 இவ்விந்திராவதாரநல்லூர் இன்று இளையான்குடி என்ற பெயரில் விளங்குகின்றது. கல்வெட்டில் இது இளான்குடியான இந்திராவதார நல்லூர் என்று குறிப்பிடப்படுகின்றது. 115

## வாணாதிராயரும் காலிங்கராயரும்

சுந்தரபாண்டியனின் முப்பத்து மூன்றாம் ஆட்சி யாண்டைச் சார்ந்த மற்றொரு ஸ்ரீவைகுண்டம் கல்வெட்டு காலிங்கராயருக்கும் வாணாதிராயருக்கும் உள்ள உறவு பற்றி அரிய செய்தியைத் தருகின்றது. அக்கல்வெட்டில் காலிங்கராயர் கங்கைப்பிள்ளை சூரியதேவன் என்பவன்

குறிப்பிடப்படுகின்றான். இவனும் வடவல்லதிருக்கை நாட்டு இந்திரசவதார நல்லூரைச் சார்ந்தவன். இக்காலிங்கராயர் கங்கைப்பிள்ளை சூரியத்தேவனும், வாணாதிராயர் கங்கைப் பிள்ளை அழகியபிள்ளையும் உடன்பிறந்தவராக இருந்தல் வேண்டும். இருவரது பெயரிலும் காணப்படும் கங்கைப் பிள்ளை என்பது இவர்களது தந்தையாரது பெயராக இருக்கவேண்டும். இருவரது ஊரும் பேரும் அவர்கள் வாழ்ந்த காலமும் இம்முடிவுக்கு ஒத்துப் போகின்றன.

ஒரே குடும்பத்தில் பிறந்த இருவரில் ஒருவர் காலிங்கராயர் என்றும், மற்றொருவர் வாணாதிராயர் என்றும் தம்மை அழைத்துக் கொண்டிருப்பது வியப்பைத் தூண்டுகின்றது. வாணாதிராயர்' காலிங்கராயர் என்ற பெயர்கள் இக்காலத்தில் குலப்பெயராக மட்டுமின்றி பட்டப் பெயர்களாக விளங்கியமையே இதற்குக் காரணம் என்று கூறலாம்.

**மாறவர்மன் குலசேகர பாண்டியன் காலம் (கி.பி.1268-1311)**

**கங்கைகொண்ட சூரியத்தேவன்வாணாதிராயன்காலிங்கராயன்**

இவன் மேலே கண்ட காலிங்கராயர் கங்கைப் பிள்ளை சூரியத் தேவனின் மகனாக இருக்கவேண்டும். இவன் வாணாதிராயன், காலிங்கராயன் என்ற இரண்டு பெயர் களையும் தன் பெயரோடு சேர்த்து' கங்கைகொண்ட சூரியத் தேவன் வாணாதிராயன் காலிங்கராயன்' என்று தன்னை அழைத்துக் கொண்டான்.

இவன் மாறவர்மன் குலசேகரனின் மந்திரியாக விளங்கிய பெருமை படைத்தவன். மாறவர்மன் குலசேகரபாண்டியனின் இருபத்தைந்தாவது ஆட்சியாண்டு (கி. பி. 1293) இளையான்குடிக் கல்வெட்டில் இவன் குறிப்பிடப்படு-

கின்றான். இவனும் இவனது முன்னோர்களும் பலதலைமுறைகளாக இங்கு வாழ்ந்திருக்கின்றனர். இவ்வாணாதிராயன் பெரும்பற்றப்புலியூர், ஸ்ரீரங்கம், திருவானைக்காவல், திருவிடைமருதூர், திருநறையூர், திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர், மதுரை, திருக்கானப்பேர், துகவூர், மணவில், சீவில்லிபுத்தூர், திருத்தங்கல், சேரன்மாதேவி, திருநெல்வேலி, வல்லநாடு, திருக்குறுங்குடி, வள்ளியூர், திருவனந்தபுரம், இளையான்குடி, முதலிய இடங்களிலுள்ள கோயில்களில் பலபூசைகளுக்கு ஏற்பாடு செய்து திருப்பணிகளைச் செய்வித்துள்ளான். மேற்கண்ட ஊர்களில் அவன் பின்வருமாறு பலசெயல்களைச் செய்ததாக இளையான்குடிப் பெருமாள்கோயிலிலுள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது[116]

சிதம்பரத்திலிருந்த குலோத்துங்கசோழன் திருவீதியில் பாண்டியனின் மகனார் பெயரில், வீரபாண்டிய ஈசுவரம், என்று கோயில் எடுப்பித்து அக்கோயில் பரிவாரதெய்வங்களையும் கோவில்கட்டி எழுந்தருளுவித்தான். தபசியர் பன்னிருவர்க்கு உணவளிக்கமடமும் தண்ணீர்ப்பந்தலும் தோற்றுவித்தான், மேலும் இவ்வூரில் பதின்மூன்று அந்தணர்களைக்கொண்டு சுந்தரவல்லிச்சதுர்வேதிமங்கலம் என்று சதுர்வேதிமங்கலம் ஒன்றை ஏற்படுத்தினான்.

சீரங்கத்தில் கலியுகராமன்கரை என்று காவிரியாற்றிற்குக்கரை செய்வித்தான். கலியுகராமன் என்ற பெயரில் திருவீதி ஏற்படுத்தினான். தலைது அரசன் பெயரால் கோயில் கட்டி பெருமாளை எழுந்தருளுவித்து உற்சவநாயன்மாரையும் எழுந்தருளுவித்தான். சன்யாசிகள், தபசியர்கள்இருபத்துநால்வர்க்கு திருவமுது செய்யும்படி மாடத்திருவீதியிலே குலசேகரன் மடமும் தண்ணீர்ப்பந்தலும் ஏற்படுத்தினான். பெருமான் திருநாளில் புதுப்புனலாட அழகியநாயனார்-

குளம் என்று குளம் கண்டு அங்கு தீர்த்தமண்டபமும் ஏற்றமும் ஏற்படுத்தினான். தான்பிறந்த அசுவதி நாளில் பெருமாள் அமுதுசெய்ய ஏற்பாடு செய்தான். ஸ்ரீரங்கம் பெருங்கோயிலைச் சுற்றியிருந்த மாடத்திருவீதி, திருமலைதந்தான்திருவீதி, கலியுகராமன் திருவீதிகளைத் திறந்து குலசேகரச்சதுர்வேதிமங்கலம், வாணாதிராயச்சதுர்வேதிமங்கலம் என்ற பெயர்களால் இருநூற்றெழுபத்திரண்டு பட்டர்களைக்கொண்டு சதுர்வேதிமங்கலங்களைத் தோற்றுவித்தான்.

திருவானைக்காவில் திருவானைக்காவுடைய நாயனார்க்குத் தான் பிறந்த அசுவதி நாளில் சிறப்புச் செய்தான். தனதுதந்தையின் பெயராலே கங்கைகொண்டஈசுவரம் உடையசரையும் தாயின் பெயராலே சுந்தரநாயனாரையும் எழுந்தருளிவித்தான். திருவிடைமருதூரில் மருதவனீசுவரமுடையாரை எழுந்தருளுவித்தான். தம்பியின் பெயராலே பெருந்திக்குநாயகரை எழுந்தருளுவித்தான். திருநரையூரிலே ஸ்ரீவைகுண்டநாதரையும் நாச்சியாரையும் ஆழ்வார்கள் பன்னிருவரையும் எழுந்தருளுவித்தான். பெரும்பற்றப் புலியூரிலே வீரபாண்டியஈசுவரமுடையாரை எழுந்தருளுவித்தான் ......... மன்னார்க்கு அசுவதிநாளில் சிறப்புச் செய்யவும் ஐம்பத்திரண்டு பட்டர்களைக்கொண்டு வேதமும் பாசுரமும் பாட சதுர்வேதிமங்கலத்தினை ஏற்படுததினான்.

பாண்டியநாட்டில் திருமாலிருஞ்சோலை அழகருக்கும் தாயின் பெயராலே சுந்தரவல்லிநாச்சியாரைக் கோயில்கட்டி எழுந்தருளுவித்தான். திருக்கோட்டியூரில் சுந்தரவல்லி நாச்சியாரைக் கோயில்கட்டி எழுந்தருளுவித்தான். மதுரையில் திருவாலவாயுடைய நாயனார் திருநாட்களில் தீர்த்தமாட

எழுந்தருள வைகையாற்றங்கரையிலே காலிங்கராயன் திருமண்டபம் கட்டுவித்தான். இந்நாயனார் கோயிலிலே தனதுபெயரால் சூரியதேவரையும் ரிஷபதேவரையும் தனது பெண்டிர் (மனைவியர்) பெயரால் திருவுடைநாச்சியாரையும் எழுந்தருளுவித்தான்.

திருக்கானப்பேர் உடையார் முன்பு திருப்பாட்டு ஓத ஏற்பாடு செய்து வாணாதிராயர்சந்தி ஏற்படுத்தினான். துகவூர் நாயனார்க்கு வாணாதிராயன்சந்தி ஏற்பாடு செய்தான். மங்கலநாட்டு மணலில் திருமாணிக்க ஆழ்வார்க்கு வாணாதிராயன் பெயரால் சந்தியும் இந்நாயனார் கோயிலின்வடபக்கத்து நாற்பத்தாறு பட்டர்களைக்கொண்டு குலசேகரச்சதுர்வேதிமங்கலமும் ஏற்படுத்தினான். மேல் பக்கத்தில் நியாயபரிபாலனகுளம் என்று ஓர் ஊருணி கண்டான். சீவில்லிபுத்தூர் வட பெருங்கோயிலுடையார்க்கு பெரியதிருவடியாரை எழுந்தருளுவித்து கோயிலும் செய்தான். சேரன்மாதேவியில் தீர்த்தமண்டபமும் திருநந்தவனமும் ஸ்ரீபாரந்தீசுவார முடையார்சந்தியும் தோற்று வித்தான்.

திருநெல்வேலி உடையநாயனார்க்கு பொலிந்து நின்ற பிரானுக்கு திருநந்தவனமும் வல்லநாட்டு ஆற்றங்கரையிலே சூரியதேவ விண்ணகரஎம்பெருமான் என்று திருக்குறளப்பனை எழுந்தருளுவித்து அவருக்கு கோயிலும் திருநந்தவனமும் செய்தான். திருக்குறுங்குடியில் இறங்கல் மீட்டான் என்ற திருநந்தவனமும் கோடித்தீர்த்தக்கரையிலே தீர்த்தமண்டபமும் படி ஏற்றமும் செய்தான். வள்ளியூர் கருமாணிக்கஆழ்வார் கோயிலிலே சங்கப்பெருமாளைஎழுந்தருளுவித்தான் நம்பிக்குக்கோயில் செய்து திருக்குழலூதினபிள்ளையாரை எழுந்தருளுவித்தான். மலைமண்டலத்து (சேரநாட்டு)

திருவனத்துபுரத்துப் பெருமாளுக்குக்காலைசந்தியும் அசுவதி திருநாள் சிறப்பும் செய்ய ஏற்பாடுகள் செய்தான்.

இளையாரன்குடியில் வீரகோடிவிண்ணகர எம்பெரு-மானுக்குகோயில் செய்து அங்கு பெரியதிருவடிநாயனாரை எழுந்தருளுவித்தான். இராசேந்திரசோழீசுவரமுடைய நாயனார் எழுந்தருளும் சிறப்பு செய்தான். பெருமாள்-கோயிலில் திருக்குழலூதின பிள்ளையாரையும் நாச்சியாரையும் எழுந்தருளுவித்து அழகியபிள்ளையார் சுந்தரபாண்டிய வாணாதிராயர் பேராலே அழகிய பெருமாளையும் நாச்சியாரையும் எழுந்தருளுவித்தான். இத்துணையளவு சிறப்புற வியப்பைத்தூண்டும் வகையில் மேற்கண்டவாறு சோழ-நாட்டிலும் பாண்டியநாட்டிலும் சேரநாட்டிலும் பல பணிகளை இவ்வாணாதிராயன் செய்திருப்பது பிற்காலப்-பாண்டியர் காலத்தில் வாணாதிராயர்கள் எத்தனையளவு செல்வாக்கும் பெருமதிப்பும் பெற்றுவிளங்கினர் என்பதைக் காட்டுகின்றது.

எம்மண்டலமும் கொண்டருளிய முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் வாழ்ந்த மாறவர்மன் பராக்கிரமபாண்டியனின் பேறுதாணியத்துக் கல்வெட்டி-லிருந்து சில வாணாதிராயர்கள் பற்றியகுறிப்புக்கள் நமக்குக் கிடைத்திருக்கின்றன.[11]

வாணவதரையர்

இவன் சிவகங்கை, காரைக்குடி வட்டப்பகுதிகளைச் சார்ந்த வடகளவழிநாட்டு முடிகொண்டசோழபுரம் என்ற ஊரைச் சேர்ந்தவன். வளத்தரரான சுந்தரபாண்டிய வாண-வதரையர் என்பவன இவனது மகன் ஆவான்.

### வளத்தார் சுந்தரபாண்டிய வாணவதரையர்

ஒல்லையூர்க் கூற்றத்து தென்கோனாட்டு மேற்தாணியத்து ஊரார் வரிகள் செலுத்த முடியாத பதினாறு மாநிலத்தை அவ்வூர் கோயிலுக்குத்' திருநாமத்துக் காணியாகவாங்கி அளிப்பார் உளரோ? என்று ஏலம் விட்டபோது அதை இவ்வாணாதிராயர் வாங்கி அவ்வூர்க்கோயிலுக்கு அளித்தார் என்று மேற்தாணியத்துக் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.[118]

### சுந்தரபாண்டியன் அதிகாரி

எம்மண்டலமும் கொண்டருளிய இக்குலசேகரபாண்டியனின் இருபத்தைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்றில் வாணாதிராயன் ஒருவன் குறிப்பிடப்படுகின்றான்.[119] திருக்கோஷ்டியூரில் உள்ள இக்கல்வெட்டில் 'எம்மண்டலமும் கொண்டருளிய ஸ்ரீசுந்தரபாண்டியதேவர் அதிகாரி வாணாதிராயர்' என்று இவன் குறிப்பிடப்படுவதால் இவ்வதிகாரி சுந்தரபாண்டியன் காலத்திலும், குலசேகரபாண்டியன் காலத்திலும் அதிகாரியாக விளங்கியிருக்கவேண்டும் என்பது தெளிவாகின்றது. திருப்பத்தூர் வட்டமும் சிவகங்கை வட்டத்தின் ஒருபகுதியும் அக்காலத்தில் கேரளசிங்கவளநாடு என்று அழைக்கப்பட்டன. இவ்வளநாடு இவ்வாணாதிராயன் கண்காணிப்பில் இருந்தது. 'எம்மண்டலம் கொண்டருளிய ஸ்ரீசுந்தரபாண்டியத்தேவர் அதிகாரி வாணாதிராயர்க்கு அடைப்பான கேரளசிங்கவளநாடு' என்று கல்வெட்டு இதனைக் குறிப்பிடுகின்றது.

### அம்மான் மகாபலிவாணாதிராயர்

இவன் மதுரை மாவட்டம் திருவாதவூர்க் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றான்.[120] மாறவர்வன் குலசேகரபாண்டி-

மன் காலத்தில் இவன் வாழ்ந்திருக்கவேண்டும். இவனது பெயரில் 'வலங்கைமீகாமன் திருநாள்' என்ற திருவிழா திருவாதவூரில் கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டது. இதற்காகக் 'குட்டம்புளி' என்ற ஊர் வரி நீக்கம் செய்யப்பட்டுத் தானமாகத் தரப்பட்டது. 'அம்மான்' என்று இவ்வாணாதிராயன் குறிப்பிடப்படுவதால் பாண்டிய அரசனுக்கு இவன் மாமன் உறவாக இருக்கவேண்டும் எனலாம்.

**மற்றவர்கள்**

**பிள்ளைவரணக்கோவரையர்**

திருப்பத்தூர் வட்டத்துச் சதுர்வேதிமங்கலத்துக் கல்வெட்டில் இவ்வாணாதிராயன் குறிப்பிடப்படுகின்றான். இவன் எந்தமன்வன் காலத்தில் வாழ்ந்தவன் என்பது தெரியவில்லை. இவன் இவ்வூரில் இருந்த கோயில்களுக்கு சில நிலங்களை விற்றுத் தந்திருக்கின்றான்.[121]

மன்னன் பெயர் இல்லாத திருமங்கலம் வட்டத்திலுள்ள சித்தூர் கல்வெட்டு ஒன்றிலும் வாணாதிராயன் ஒருவன் குறிப்பிடப்படுகின்றான்.[122]

இதேபோன்று அழகர்கோயில் கல்வெட்டு ஒன்றிலும் 'வாணாதிராயன்' ஒருவன் குறிப்பிடப்படுகின்றான்.[123] வாணவிச்சாதரன் என்ற பாண்டிய அதிகாரி ஒருவனும் இங்குள்ள கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றான்.[122ஏ]

மதுரைமாவட்டம் திருமங்கலம் வட்டத்திலுள்ள கட்டக்கருப்பன்பட்டியைச் சார்ந்த ஆனையூர் கண்மாயிலுள்ள பழையமடைக் கல்லில் பொறிக்கப்பட்டு கண்டறியப்பெற்ற கல்வெட்டு ஒன்றில் வாணாதிராயன் ஒருவன் குறிப்பிடப்படுகின்றான். மன்னன் பெயர்குறிப்பிடாத இக்கல்வெட்டின் எழுத்தமைதியைக் கொண்டு இது கி. பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கணிக்கலாம். இக்காலத்தில் வாழ்ந்த

இவ்வாணாதிராயன் இவ்வூரினைக் காத்து வந்த படைத் தலைவருள் ஒருவனாக விளங்கியிருக்கின்றான். இக்கல் வெட்டு பொறிக்கப்பெற்ற ஆனையூர் கண்மாயின் மடைத் தூம்பினை இவ்வாணாதிராயனே செய்வித்திருக்கின்றான். இக்கல்வெட்டில் இவன் 'பிள்ளை பகாபலி வாணராயர் அகம்படி முதலிகளில் பெரியான் உய்யவந்தானான விக்கிரம சிங்கதேவன்' என்று குறிப்பிடப்படுகின்றான்.

திருநெல்வேலி மாவட்டம் ஆத்தூர் சிவன்கோயிலில் காணப்படும் திருநிலைவாயில் கல்வெட்டு ஒன்றிலும் இதே காலத்தினைச் சார்ந்த வாணாதிராயன் ஒருவன் குறிப்பிடப் படுகின்றான். இவன் இக்கோயிலின் திருநிலைவாயிலைச் செய்வித்ததாக அக்கல்வெட்டு தெரிவிக்கின்றது.

## பிற்காலப்பாண்டியர்காலத்தில் வாணாதிராயர்கள்

சோழப்பேரரசுவீழ்ச்சியடையத்தொடங்கிய மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலிருந்து வாணாதிராயர்கள் பாண்டிய அரசில் அதிகமான பங்குபெற்று விளங்கினார்கள் பாண்டியப்பேரரசு வீழ்ச்சியடையத் தொடங்கிய மாறவர்மன் குலசேகரபாண்டியனின் இறுதிக்காலத்திலிருந்து அரசியலில் இவர்கள் பங்கு படிப்படியாகக் குறைய ஆரம்பித்துள்ளதை அவர்கள் பற்றிய கல்வெட்டாய்வு காட்டுகின்றது.

'மகதநாயனார்'[124] 'வாணாதிராயன்'[125] 'வாணணார்' 'வாணவதரையச்'[126] 'மாபலிவாணாதிராயர்'[127] வாணக் கோவரையன்[128] என்று இவர்கள் பாண்டியநாட்டுக கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுகின்றனர். 'அரயன்'[129] 'தேவர்' '[130] பிள்ளை' [131] 'பிள்ளையார்' [132] அண்ணன்[133], அம்மான்[134], நாயனார்[135] என்று பல உறவுமுறைகளில் அடைமொழி கொடுத்து அழைக்கப்பட்டனர். வழுதி,

அவனிநாராயணன்,[136] மதுரைப் பெருமாள்[137] என்று பாண்டியர்களின் பட்டப்பெயர்களையே பெரும்பாலும் புனைந்து கொண்டும் விளங்கினர்.

வாணாதிராயர்க்கும் பாண்டியமன்னர்களுக்கும் இடையே இக்காலத்தில் திருமண உறவுகள் பல நிகழ்ந்துள்ளன. பராக்கிரமபாண்டிய மாவலிவாணாதிராயர்[138] விக்கிரமபாண்டிய வாணாதிராயர்[139] குலசேகரமாவலிவாணாதிராயர்[140] போன்றவர்கள் பாண்டியர்க்கும் வாணாதிராயருக்கும் பிறந்த இளவரசர்களாகப் பாண்டியநாட்டில் சிறந்து விளங்கியிருக்கின்றார்கள.

சடாவர்மன் விக்கிரமபாண்டியனின் அரியாசனம் 'வாணாதிராயன்' என்று பெயர்பெற்று விளங்கியிருக்கின்றது[141] இது பாண்டியரது ஆட்சிக்கு வாணாதிராயர்கள் பெருந்துணைபுரிந்துள்ளதைக் காட்டுகின்றது.

இக்காலத்தில் வாணாதிராயர்கள் பாண்டிய நாட்டில் ஆங்காங்கே அமைதியைநிலைநாட்டி நிர்வாகம்செய்யும் அரசியல் அதிகாரிகளாவும் குறுநிலமன்னர்களாகவும் இருந்திருக்கின்றார்கள். கேரளசிங்கவளநாடு என்ற ஒரு வளநாட்டுப் பிரிவே ஒரு வாணாதிராயன் அதிகாரத்திற்குட்பட்டு இருந்தது[141] தென்மாறைநாடு என்ற ஒரு நாடே சந்திரவாணன் என்ற ஒரு வாணனுக்குக் கீழ் இருந்தது. ஆனைமலை நாட்டு அறுகைக்குன்றத்தைச் சார்ந்த ஓர் ஊரில் இருந்த படைத்தலைவருள் ஒருவனாக திருநட்டப்பெருமாள் என்ற ஒரு வாணாதிராயன் விளங்கியிருக்கின்றான். இவனுடைய பதவி 'முதலித்தரம்' என்று அழைக்கப்பட்டது[142] இதே போன்று ஆனையூரிலும் வாணாதிராயன் ஒருவன் முதலித்தரம் செய்திருக்கின்றான்.

பாண்டிய அரசர்க்குப் படைத்தலைவனாக இருக்கக் கூடிய 'சாமந்தன்' என்ற ஒரு பதவியை வாணாதிராயன் ஒருவன் பெற்று விளங்கினான்[143] சந்திரவாணன் என்ற வாணாதிராயன் பாண்டியருக்கு படைத்தலைவனாக விளங்கிப் பலநாடுகளின் மீதும் பாண்டியர்க்கு வெற்றியைத் தேடித்தந்திருக்கின்றான். பாண்டியமன்னர்க்குப் பல வெற்றிகளைத் தேடித்தந்த அதேநேரத்தில் தங்களுக்கு பேரும்புகழும் கிட்டிய நிலையில் பாண்டிய நாட்டில் சுயாட்சி பெறவும் சில வாணர்குல சிற்றரசர்கள் முயன்றிருக்கின்றார்கள். மாறைநாட்டு வாணன் பாண்டியர்க்குப் பலநாட்டின் மீதும் வெற்றியைத் தேடித்தந்த பின்னர் பாண்டியனையே எதிர்த்து அவனைப் புறங்கண்டான் என்று தஞ்சைவாணன் கோவை குறிப்பிடுகின்றது.[144] உள்நாட்டிற்குள்ளே படையெடுத்து கன்றுகளையும் காலிகளையும் கவர்ந்து சென்ற வாணாதிராயனைத் திருக்கோடுங்குன்ற நாடாழ்வான் சிறைப்பிடித்தான் என்று இடையாத்தூர் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[145]

முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியனுக்குக் கங்கை கொண்ட சூரியத்தேவன் வாணாதிராயன் காலிங்கராயன் என்பவன் மந்திரியாக விளங்கியதை இளையான்குடிக் கல் வெட்டு தெரிவிக்கின்றது.

இவ்வாணாதிராயர்கள் பல ஆவணங்களிலும், அரச ஆணைகளிலும் கையொப்பமிட்டு அவற்றை நிறைவேற்றவும் உதவினர். அரச வருவாயான வரிகள் வராது நின்ற காலங்களில் அவற்றை நேரடியாகச் சென்று வசூலிக்க ஏற்பாடு செய்தனர். புதுக்கோட்டை விசலூர் கிராமத்தில் முன்னூறு மா நிலத்தை நீர்ப்பாசனவசதி செய்து கொடுத்த போதும் வரிகள் செலுத்தமுடியாமல் அங்குள்ள கிராமமக்கள் இருந்த நிலையில் அதனை நேரடியாகச் சென்று கண்காணிக்க

வாணாதிராயன் ஒருவன் பாண்டிய அரசனால் அனுப்பப்பட்டிருக்கின்றான்.[146]

இவ்வாணாதிராயர்கள் பாண்டிய அரசர்களுக்கும் வேற்றுநாட்டு அரசர்களுக்கும் இடையில் நின்று காரியங்கள் பல நடத்தியிருக்கின்றனர். மதுரையிலுள்ள பசுமடத்திற்குப் போசளமன்னன் வீரசோமேசுவரன் நிலம் தானம் அளிக்க நினைத்தபோது அதனைப்பாண்டிய அரசன் விக்கிரமபாண்டியனிடம் எடுத்துக்கூறி சில ஊர்களிலிருந்து வந்த வரிகளைக் கொண்டு திருவேடகம் என்ற ஊரில் நிலம் வாங்கி அதற்கு அளிக்க வாணாதிராயன் ஒருவன் ஏற்பாடு செய்திருக்கின்றான்.[147] இவ்வாணாதிராயர்கள் பாண்டிய நாட்டு அரசியலில் தூதுவர்களாகவும் பணியாற்றி இருக்கின்றனர் என்பதை இது காட்டுகின்றது.

வாணாதிராயர்கள் பாண்டியநாட்டில் வெறும் அரசியல் அதிகாரிகளாக மட்டும் விளங்காது சமுதாயத்தொண்டும் இறைப்பணிகளும் கலைப்பணிகளும் பலசெய்திருக்கின்றனர் 'பாவனங்காரன் ஏரி'[148] 'பாவனங்காரன் வாய்க்கால்'[149] என்று தனது பெயரில் ஏரியையும் வாய்க்காலையும் ஒரு வாணர்குல இளவரசன் தோற்றுவித்திருக்கின்றான். பெருமாள் பட்டியிலும் ஆனையூரிலும்கிடைத்த கல்வெட்டுக்களில் குறிப்பிடப்பெறும் வாணாதிராயர்கள் ஏரிகளுக்குத் தூம்பும் வாய்க்காலுக்கு மதகும் செய்வித்துள்ளனர். திருப்பத்தூர் வட்டத்திலுள்ள சதுர்வேதிமங்கலம் என்ற ஊரில் வாணாதிராயன் ஒருவன் 'சோழவாசல்திறந்தான்' என்ற மடத்திற்கு நிலக்கொடை அளித்திருக்கின்றான்[150] வாணாதிராயன் ஒருவன் பொன்னமராவதியில் 'தண்ணீர்ப்பந்தல்' ஒன்றினை ஏற்படுத்தி அதனை நடத்தப் பொருளும் அளித்திருக்கின்றான்.[151] அழகர்கோவிலில் இவர்கள் பெயரில் 'வாணாதிராயன் மடம்' என்று ஒருமடம் இருந்திருக்கின்றது இம்மடத்திலிருந்து சன்னியாசிகளுக்கும் அனுவிரதிகளுக்கும் உணவு வழங்கப்பட்டிருக்கின்றது.[151A]

பாண்டியநாட்டிற்கு வெளியேயிருந்து வந்த இவ்வாணாதிராயர்கள் தங்கள் கலைப்பாணியை கலைமரபைப் பாண்டியநாட்டிலும் பதித்திருக்கின்றனர். கள்ளங்காடு சிவன்கோயிலுர், ஸ்ரீவைகுண்டம் சுந்தரபாண்டியன் திருக்கோபுரமும் இவ்வாணாதிராயர்கள் முயற்சியில்கட்டப்பட்டவையே.[152] நாயக்கர் காலகட்டடப் பணியே நிறைந்துகாணப் படும் இன்றைய மதுரை மீனாட்சியம்மன்கோயிலில் அன்று பிற்காலப்பாண்டியர் காலத்தில் செய்யப்பட்ட வாணாதிராயர்களின் கலைப்பணிகளும் நிறைந்து விளங்கியிருக்கின்றன. மதுரைக் கோயிலில் அன்று இவர்கள் செய்த கலைப்பணிகள் பல, காலத்தின் கோலத்திற்கு இரையாகி இவ்வாணாதிராயர்களின் கலைப்பாணி எவ்வாறு இருந்தது என்று அறிய முடியாமல் போய்விட்டது. 'வாணாதிராயன் திருவாசல்' என்ற பெயரில் ஒரு வாசலே மதுரைக் கோயிலில் இருந்திருக்கிறது. இங்கு 'அதிரவீசியாடுவார் மண்டபம்' என்று நடராசர்க்கு 'நிருத்தமண்டபம்' ஒன்றை இவர்கள் கட்டியிருக்கின்றனர். இதைத்தொடர்ந்து திருநடை மாளிகையும் கட்டியிருக்கின்றனர். இக்கோயிலுக்குத் தேர் ஒன்றைச் செய்து அளித்திருக்கின்றனர். கோயிலின் எழுநிலைக்கோபுரத்தையும் திருப்பணி செய்து முடித்திருக்கின்றனர்.[153] மேலும் 'விரதம்முடித்த ஈஸ்வரமுடையார்' என்று ஒரு சிற்றாலயத்தையும் மதுரைக்கோயிலின் உள்ளே இவ்வாணாதிராயர்கள் கட்டிமுடித்திருக்கின்றனர்.[154] இவ்வாறு கோயில்களையும் மண்டபங்களையும், கோபுரங்களையும், கட்டிவைத்ததோடு அமையாது அக்கோயிலுக்கு வழிபாட்டிற்கென்று நிவந்தங்கள் பலவற்றை இவ்வாணாதிராயர்கள் அளித்துள்ளனர். தங்களது பெயரால் வழிபாட்டுச் 'சந்தியைத்' தோற்றுவித்திருக்கின்றனர்[155] என்பதைப் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுக்கள் நமக்குத் தெரிவிக்கின்றன.

சமயத்தைப் பொறுத்தவரையில் பாண்டியர்கள் எதைப் பின்பற்றினார்களோ அதையே இவ்வாணாதிராயர்களும் பின்பற்றினார்கள். பாண்டியரைப்போலவே திருமால் கோயில்களுக்கு இவர்கள் இறைபணிகள் அதிகமாகச் செய்திருக்கின்றனர்.

# மகமதியர் காலம்

(கி.பி.1310-1378)

## உள்நாட்டுப்போரும் மகமதியர் படையெடுப்பும்

மாறவர்மன் குலசேகரபாண்டியனுக்குச் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் என்று இரு புதல்வர்கள் இருந்தனர். குலசேகரபாண்டியன் தனக்குப்பின் பட்டத்தரசியின் புதல்வன் சுந்தரபாண்டியனுக்கு முடி சூட்டாது ஆசைக்கிழத்தியின் மகன் வீரபாண்டியனுக்கு முடிசூட்டினான். இதனால் கோபங்கொண்ட சுந்தரபாண்டியன் தனது தந்தை குலசேகரனைக் கொன்றுவிட்டு கி. பி. 1310ல் அரியணை ஏறினான். வீரபாண்டியனை மதுரையைவிட்டுத் துரத்தினான் என்று மகமதிய ஆசிரியர் வாசப் கூறுகின்றார்[1]

வீரபாண்டியனுக்கும் சுந்தரபாண்டியனுக்கும் இடையே அதன்பிறகு பல போர்கள் நடைபெற்றன. பாண்டியநாட்டில் நடக்கும் உள்நாட்டுப் போரைப் பயன்படுத்திக்கொண்டு இக்காலத்தில் மாலிக்காபூர் மதுரை மீது படையெடுத்து வந்து பாண்டிய மன்னர்களின் செல்வத்தைக் கவர்ந்து சென்றான். மாலிக்காபூரின் இப்படையெடுப்பிற்குச் சுந்தரபாண்டியன் உதவினான் என்று வாசப் கூறுகின்றார். 'முன்னாள் இராசராசன்சுந்தரபாண்டியதேவர் துலுக்கருடன் வந்த நாளிலே'[2] என்ற கல்வெட்டு வாசகம் இதனை உறுதிப்படுத்துகின்றது.

மாலிக்காபூர் படையெடுத்து வந்த பிறகு பாண்டிய நாட்டின் குழப்பநிலையைப் பயன்படுத்திக் கொண்டு சேர மன்னன் இரவிவர்மன் குலசேகரன் என்பவன் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்து வீரபாண்டியனையும், சுந்தரபாண்டியனையும் வென்று பாண்டியநாட்டின் பகுதிகளைக் கைப்பற்றினான். இவன் மதுரையைத் தாண்டித் தொண்டைநாட்டுப் பூந்தமல்லி வரை படையெடுத்துச்

சென்றான். காலத்தின் சூழ்நிலையைப்பயன்படுத்திக் கொண்டு பாண்டியநாட்டில் இருந்த குறுநில மன்னர்கள் தன்னிச்சையாகத் தனியரசு புரியத்தொடங்கினார்கள். இந்த குழப்பம் நிறைந்த காலத்திலும் வீரபாண்டியனும் சுந்தர பாண்டியனும் பாண்டியநாட்டில் தொடர்ந்து ஒருபுறமிருந்து ஆட்சி நடத்தியிருக்கின்றனர். வீரபாண்டியன் கி. பி. 1342 வரைக்கும் ஆட்சி நடத்தினான். சுந்தரபாண்டியன் கி. பி. 1319 வரைக்கும் ஆட்சி நடத்தினான் என்று கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன.[3]

## மகமதியர் ஆட்சி

வீரபாண்டியனது ஆட்சிக்காலத்தின் இறுதிப்பகுதியில் டில்லியிலிருந்து படையெடுத்து வந்த முகமதுதுக்ளக்கின் படைத்தலைவன் 'ஜலாலுதீன் அடன்ஷா' மதுரையைக் கைப்பற்றினான். சிறிது காலத்திற்குப்பிறகு இவன் டில்லியுடன் தொடர்பை அறுத்துக் கொண்டு மதுரை அரசனாய் தனியரசு நடத்தத் தொடங்கினான். இவனைத் தொடர்ந்து உடாவ்ஜி. குத்புடீன், கியாசுடீன் நாசிருடீன், அடில்ஷா. பகுருதீன் முபாரக்ஷா. அலாவுதீன் சிக்கந்தர்ஷா என்ற முகமதியத் தலைவர்கள் பாண்டிய நாட்டின் ஒரு பகுதியை மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர். இம் மகமதியர்கள் ஆட்சி மதுரையில் கி. பி. 1330 தொடங்கி கி. பி. 1378 வரையில் நடைபெற்றது[4]

மதுரையிலிருந்து இம்மகமதியர்கள் ஆண்ட காலத்தில் பாண்டிய நாட்டின் பல்வேறுபகுதிகளில் ஆங்காங்கேயிருந்து மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி. பி. 1314-1316) சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1315-1347) மாறவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1334-1380) மாறவர்மன் பராக்கிரமபாண்டியன் (கி. பி. 1335-1352) என்பவர்கள் ஆட்சிபுரிந்திருக்கின்றனர்[5]

இக்காலத்தில் உள்நாட்டுக் கலகங்கள் மிகுந்திருந்தன. மக்கள் வாழ்க்கை நிலையற்றதாய் இருந்தது. திருக்கோயில்கள் கொள்ளையிடப் பெற்று நாள் வழிபாடும், ஆண்டுவிழாவும் அற்று இருந்தன என்பதைப் பல கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. மதுரைக்கோயிலில் சொக்கரது கருவறையும், அர்த்த மண்டபமும், மகாமண்டபமும் தவிர மற்ற கோபுரங்களும் மண்டபங்களும் சுவர்களும் இடிக்கப்பெற்றன என்று மதுரைத்தலவரலாறு கூறுகின்றது[6]

**கம்பணர் படையெடுப்பு**

மதுரையில் நடப்பதையெல்லாம் கேள்வியுற்ற கம்பணன் மதுரையில் முகமதியர் ஆட்சிக்காலத்தின் இறுதியில் படையெடுத்து வந்து மதுரை மகமதியர் ஆட்சியை ஒழித்தான் என்று இம்மன்னனது மனைவி எழுதிய 'மதுராவிசயம்' கூறுகின்றது. மதுரைத்தலவரலாறு இவன் கி. பி. 1371ல் மதுரை மீது படையெடுத்து வந்து துலுக்கரைத் துரத்தினான். மதுரைக்கோயிலில் துலுக்கர் காலத்தில் நின்றுபோன வழிபாட்டை மீண்டும் துவக்கினான். மற்ற பாண்டி நாட்டுக் கோவில்களிலும் நின்றுபோன வழிபாடு மீண்டும் தொடங்க ஏற்பாடு செய்தான். மதுரைக்கோயிலில் துலுக்கர் காலத்தில் மூடப்பட்ட கதவு இவனால் மீண்டும் திறக்கப்பட்டு பார்த்தபோது நடந்த அதிசயநிகழ்ச்சி ஒன்றையும் மதுரைத் தலவரலாறு பின்வருமாறு எடுத்துக்கூறுகின்றது.[7]

''இப்படி துலுக்காணியமாக இருக்கும் நாளையில் சகம் 1293 (கி. பி. 1371)க்கு மேற்செல்லா நின்ற விரோதிகிருது வருடம் மைசூரான் வாசல் தளகர்த்தன் கம்பணஉடையார் துலுக்கனை வெட்டித் துரத்தி ராச்சியம் கைக்கொண்டு சிவஸ்தலம் விஷ்ணுஸ்தலமெல்லாம் திருக்காப்பு நீக்கி திருவாலவாயுடையநாயனார் கோயில் சந்நிதியில் திருக்காப்பும் நீக்கி சுவாமிதரிசனம் பண்ணப் போகையில் சுவாமிக்கு அன்றைக்குச் சாத்தின புஷ்பமாலையும் இரவில் பூசையும் சாத்திக் காலசந்தியிற் கழிக்கும்போது எப்படி

யிருக்குமோ அப்படி இருந்தது. இந்த அதிசயத்தைக்கண்டு கம்பணஉடையார் வெகுசந்தோஷப்பட்டுக் கன்னங்களிலே அறைந்து கொண்டு வெகு பக்தியுடன் உபகாரங்கள் செய்து அநேக திருவிளையாடற்கிராமமும் விட்டுக்கொடுத்து அநேக திருவாபரணமும் கொடுத்து திருவாராதனைக் கட்டளையும் நடபபித்துக் கொண்டு கம்பணவுடையார்''

மதுரைத்தலவரலாறு கம்பணரது பாண்டியநாட்டுப்படையெடுப்பு கி. பி. 1371ல் நடைபெற்றது என்று கூறுகின்றது. ஆனால் கம்பணரின் இப்படையெடுப்பு கி.பி.1365க்கு முன்பாகவே நடைபெற்றிருக்கவேண்டும். இதற்கு கல்வெட்டுச் சான்றும் கிடைத்துள்ளது. மாறவர்மன் வீரபாண்டியனின் முப்பத்தொன்றாவது ஆட்சியாண்டு (கி.பி. 1365) கல்வெட்டு ஒன்று கம்பணர் பாண்டிய நாட்டின்மீதுபடையெடுத்து வந்து துலுக்கரைத் துரத்தியதையும் தனது அரசியல் அதிகாரிகளாக நாயக்கன்மாரை நாடு முழுவதும் அமைதியை ஏற்படுத்தவும் கோயில்காரியங்களைக் கவனித்துக் கொள்ளவும நியமித்ததையும் தெரிவிக்கின்றது.[8]

**வாணாதிராயர்கள்**

கம்பணவுடையார் வந்து சென்ற பிறகும் கி. பி. 1378 புடிய மதுரையில் மகமதியர் ஆட்சி நடைபெற்றிருக்கின்றது. இக்காலத்தில் இவர்கள் வெளியிட்ட நாணயங்களே இதற்குச் சான்றாக நமக்குக் கிடைத்திருக்கின்றன[9] கம்பணரது படையெடுப்பு மகமதியர் ஆட்சியைமதுரையில் முற்றிலும் ஒழித்துவிடவில்லை. மகமதியர் ஆட்சியை நிலைகுலையச் செய்தது என்றே கூறவேண்டும். இக்குழப்பம் மிகுந்த மகமதியர் காலத்தில் வாழ்ந்த வாணாதிராயர்கள் பற்றி அறிவது அரியதாய் உள்ளது. யாருக்கு கீழ்இவர்கள் பணிபுரிந்தார்கள் அல்லது தனியரசு நடத்தினார்களா அப்படியென்றால் எங்கிருந்து நடத்தினார்கள் என்பது பற்றிய செய்திகளை அறிய நமக்குத் தெளிவான சான்றுகள் கிடைக்கவில்லை.

# விசயநகரவேந்தர் காலம்

(கி. பி. 1378-1535)

கம்பணர் படையெடுப்பு மதுரையில் மகமதியர் ஆட்சியை நிலைகுலையச்செய்து முற்றுப்புள்ளி வைக்க வழிகோலியது. அதேநேரத்தில் மதுரையில் பாண்டியர் ஆட்சிக்கும் முடிவுகட்டிற்று. திருப்புல்லாணியில் கம்பண உடையாரது கி. பி. 1371, கி. பி. 1374ஆம் ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.[1] பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்து சென்ற இக்கம்பணன் யாரிடம் பாண்டிய நாட்டு ஆட்சிப்பொறுப்பை ஒப்படைத்துச் சென்றான் என்பதற்கு நேரடியான சான்றுகள் ஏதும் இல்லை. பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், 15ஆம் நூற்றாண்டிலும் பாண்டியர் கல்வெட்டுகள் மதுரை மாவட்டத்தில் காணப்படவில்லை. திருநெல்வேலி மாவட்டத்தில் மட்டும் இவர்களது கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. இதனால் இவர்கள் இக்காலத்தில் மதுரைப் பகுதியை இழந்தவராய் திருநெல்வேலி மாவட்டத்திற்குச் சென்று தங்கினர் என்பர்.[2]

மதுரைத் தலவரலாறோ இக்காலத்தில் கம்பண உடையாரின் மகன் எம்பணஉடையாரும், மருமகன் பொற்காசு உடையாரும் கி. பி. 1405 வரைக்கும் மதுரைப் பகுதியை ஆண்டார்கள் என்றும் அதன் பிறகு கி. பி. 1452 வரைக்கும் லக்கணநாயக்கரும் மதனநாயக்கரும் மதுரைப் பகுதியைத் தொடர்ந்து ஆண்டார்கள் என்றும் தெரிவிக்கின்றது[3] லக்கணநாயக்கரும் மதனநாயக்கரும் இரண்டாம் தேவராயரின் அரசியல் அதிகாரிகள் ஆவார்கள். லக்கண (லச்சுமண) தண்டநாயக்கன் தேவராயரின் அமைச்சர் ஆவார். அவரது தம்பியே மதனநாயக்கர் ஆவார்[4] இவர்கள் இருவருக்கும் 'தக்கண சமுத்திராதிபதி' என்ற பட்டம் இருந்திருக்கிறது[5] மேலும் கி. பி. 1352க்குப் பிறகு கி. பி. 1500 வரைக்கும் வாணாதிராயர்கள் மதுரைப் பகுதியை ஆண்டார்கள் என்றும்

அதன் பிறகு நாயக்கர்கள் பலர் மதுரையை ஆண்டார்கள் என்றும் மதுரைத் தலவரலாறு தெரிவிக்கிறது[6]

நாம் எடுத்துக் கொண்ட இக்காலப்பகுதியில் (கி. பி. 1378-1533) சப்பணரும், இரண்டாம் தேவராயரும் (கி. பி. 1422-1446) இரண்டாம் விசயராயர் (கி. பி. 1446-47) மல்லிகார்ச்சுனர் (கி.பி. 1446-1465) இரண்டாம் விருபாக்சர் (கி. பி. 1465-1485) சாளுவநரசிம்மர் (கி. பி. 1485-1490) நரசநாயக்கர் (கி. பி. 1490-1503) வீரநரசிம்மர் (கி.பி.1503-1509) கிருஷ்ணதேவராயர் (கி. பி. 1509-1529) முதலிய விசயநகர வேந்தர்கள் ஹம்பியிலிருந்து ஆட்சி நடத்தியிருக்கின்றார்கள் இக்காலத்தைச் சார்ந்தசடாவர்மன் விக்கிரம பாண்டியன் (கி. பி. 1401-1422) கல்வெட்டு ஒன்று முகவை மாவட்டம் திருப்பத்தூரில் உள்ளதால் இவனும்இக்காலத்தில் பாண்டிய நாட்டின் வடபகுதிக்கு வந்திருப்பது தெரிகிறது. மாறவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1443-1497) என்றபாண்டிய மன்னன் இக்காலத்தில் புதுக்கோட்டைப் பகுதியில் இருந்திருக்கின்றான் என்பதற்கு சான்றாக அப்பகுதியிலிருந்து சில கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன.[7] இவனது கல்வெட்டுக்கள் பழைய முகவை மாவட்டத்திலும் சில இடங்களில் காணப்படுகின்றது மேலும் இக்காலத்தில் பாண்டிய நாட்டுப் பகுதியை நோக்கி கி. பி. 1438லும், கி. பி. 1453லும் கிருஷ்ணதேவராயர் காலத்திலுமாக விசயநகர வேந்தரின் மூன்று பெரும் படையெடுப்புக்கள் நடைபெற்றிருக்கின்றன.[8]

### வாணாதிராயர்கள்

இக்காலத்தில் இவர்கள் விசயநகரவேந்தர்க்குக்கட்டுப்பட்ட சிற்றரசர்களாக பாண்டியநாட்டில் இன்று காணப்படும் மதுரை பழைய இராமநாதபுரம், புதுக்கோட்டை மாவட்டப் பகுதிகளிலிருந்து ஆட்சிபுரிந்திருக்கின்றார்கள். இதற்குச் சான்றாகப் பல கல்வெட்டுக்கள்[9] இப்பகுதிகளிலிருந்து நமக்குக் கிடைத்திருக்கின்றன.

இரண்டாம் தேவராயரின் அமைச்சர் லக்கணநாயக்கர் காளையார்கோயிலில் இருந்த, பாண்டிய அரசனுடைய வைப்பாட்டி வயிற்றில் பிறந்த பிள்ளைகளான

1. சுந்தரத்தோள் மாவலிவாணாதிராயர்
2. காளையார் சோமனுர்
3. அஞ்சாதபெருமாள்
4. முத்தரசர்
5. திருமலை மாவலிவாணாதிராயர்

முதலியோரைக் கொண்டு வந்து அவர்களைப் பாண்டியனுக்குப் பிறந்த பிள்ளைகளென்று பட்டங்கட்டி பாண்டிய நாட்டை ஆட்சி புரியுமாறு வைத்தான் என்று மதுரைத் தலத்தார் வரலாறு கூறுகின்றது.

''பாண்டிய ராஜாவினுடைய வைப்பாட்டி காளையார் கோவில் தாசி அபிராமி வயிற்றுப்பிள்ளை சுந்தரத்தோள் மாவலிவாணாதிராயர், காளையார் சோமனார், அஞ்சாத பெருமாள், முத்தரசர், திருமலை மாவலிவாணாதிராயர் நாளையில் (இவர்களை) லக்கணநாயக்கர் கொண்டு வந்து பாண்டியனுக்குப் பிறந்த பிள்ளைகளென்று பட்டங்கட்டி வைத்துக் கையெடுத்துக் கும்பிட்டு ராஜ்யத்தையும் அவர்கள் கைவசப்படுத்திக் கொடுத்து ராஜ்யம் ஆண்டார்கள்''[9]

இதில் குறிப்பிடப்படும் வாணாதிராயர்களின் பெயர்கள் எந்த அளவு உண்மையானது என்பது ஒருபுறம் இருக்கட்டும் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வந்த விசயநகர வேந்தர்கள் அதை வென்ற பிறகு யாரிடம் அதன் ஆட்சிப் பொறுப்பை அளித்தனர், யாரை தமக்குக்கீழ் ஆட்சி புரிந்து வரும்படி அனுமதியளித்தனர் என்ற வினாவிற்கு இது விடை

யளிக்கின்றது. விசயநகரவேந்தர் இவ்வாணாதிராயர் களையே பாண்டியர்களின் வழிமுறையினர் என்று நினைத்து மதுரையின் ஆட்சிப்பொறுப்பை அவர்களிடத்து அளித்திருக்கின்றனர். அரை நூற்றாண்டிற்கு மேல் அவர்களைத் தங்களின்கீழ்ச் சிற்றரசர்களாக இருந்துவர அனுமதியும் அளித்து வந்திருக்கின்றனர் என்பது மதுரைத் தலவரலாற்றால் தெளிவாகின்றது. வாணர்க்கும் பாண்டியர்க்கும் பதின் மூன்றாம் நூற்றாண்டில் பல மணவினைகள் நடந்திருக்கின்றன என்பதையும் அவற்றால் பிறந்த பிள்ளைகளில் பலர் இளவரசர்களாக விளங்கியதையும் முற்பகுதியில் கண்டோம். இக்காலத்தில் வாழ்ந்த வாணாதிராயர்களைக் கானையார்கோவிலிலுள்ள ஒரு தாசிக்குப்பிறந்த பிள்ளைகள் என்று கொள்வதைவிட வாணாதிராயர்க்கு பாண்டியர்க்கும் ஏற்பட்ட உறவால் பிறந்த பிள்ளைகள் என்று கொள்வதே பொருத்தமாகப்படுகின்றது.

மதுரைத் தலவரலாற்றில் குறிப்பிடப்படும் வாணாதிராயர் பெயர்களில் ''சுந்தரத்தோள் மாவலிவாணாதிராயர்'' என்ற பெயரைத் தவிர மற்ற பெயர்கள் எதுவும் இக்காலத்தின் கல்வெட்டுக்களில் காணப்படவில்லை.

1. வாணவன் சுந்தரன்
2. திருமாலிருஞ்சோலை நின்ற மாவலிவாணாதிராயர்
3. சுந்தரத்தோளுடையார் மகாபலிவாணாதிராயர்
4. இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையார் மாவலி வாணாதிராயர்

என்ற பெயர்களே இக்காலத்துக் கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. இவர்களில் வாணவன்சுந்தரனைத் தவிர மற்றவர்கள் சிற்றரசர்களாக விளங்கியிருப்பதை மதுரை, முகவை, புதுக்கோட்டை மாவட்டப்பகுதியிலிருக்கும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.

## வாணவன் சுந்தரன்

இக்காலத்து விசயநகரவேந்தர் கல்வெட்டுக்களில் முதன் முதலில் குறிப்பிடப்படும் வாணாதிராயன் இவனே ஆவான். இவனுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள உறவு என்னவென்று[10] தெரியவில்லை. இவன் மற்றவர்களது முன்னோனாக இருக்கலாம். இவனைப் பற்றிய வேறு செய்திகள் எதுவும் தெரியவில்லை.

## திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலிவாணாதிராயன் (கி.பி. 1428-1477)

இவனது முழுப்பெயர் திருமாலிருஞ்சோலை அழகருக்கு இவனால் அளிக்கப்பட்ட 'அம்மிக்கல்' ஒன்றில் 'திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயன் உறங்காவில்லி தாஸந் ஆன சமரகோலாகலன்'[11] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இவனும் இவனது வழியினரும் அழகர் மீது அதிக அன்பு பூண்டு அழகர்கோவிலைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி நடத்தினார்கள். இவனது கல்வெட்டுக்கள் பின்வரும் ஊர்களில் காணப்படுகின்றன.

| ஊர் | காலம் | மாவட்டம் |
|---|---|---|
| ஸ்ரீவில்லிபுத்தூர்[12] | கி. பி. 1428 | காமராசர் மாவட்டம் |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[13] | கி. பி. 1433 | ,, |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[14] | கி. பி. 1438 | ,, |
| புளியங்குளம்[15] | கி. பி. 1449 | மதுரை மாவட்டம் |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[16] | கி. பி. 1453 | காமராசர் மாவட்டம் |
| அழகர்கோவில்[17] | கி. பி. 1464 | மதுரைமாவட்டம் |

| | | |
|---|---|---|
| சேவலூர்[18] | கி. பி. 1468 | புதுக்கோட்டை மாவட்டம் |
| காரையூர்[19] | கி. பி. 1468 | ,, |
| பூவாலைக்குடி[20] | கி. பி. 1468 | ,, |
| காஞ்சிபுரம்[21] | கி. பி. 1469 | செங்கல்பட்டு மாவட்டம் |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[22] | கி. பி. 1476 | காமராசர் மாவட்டம் |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[23] | கி. பி. 1477 | ,, |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[24] | ? | ,, |
| திண்டுக்கல்[25] | ? | அண்ணா மாவட்டம் |
| தாடிக்கொம்பு[26] | ? | ,, |

மேலே கண்ட கி. பி. 1453ஆம் ஆண்டைச் சார்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர், தாடிக்கொம்பு கல்வெட்டுக்களில் இவனது பெயர் குறிப்பிடப்படுகின்றது. ஆனால் மற்றவற்றில் காணப் படுவது போன்று பட்டப்பெயர் முதலியவற்றோடு அரசன் என்ற முறையில் சிறப்பாகக் குறிப்பிடப்படவில்லை. பிற கல் வெட்டுக்களில் இவ்வாணாதிராயனின் பெயர் பின்வருமாறு பலவாறாகக் குறிப்பிடப்படுகின்றது.

| பெயர் | காலம் |
|---|---|
| 1. திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயர்[27] | கி. பி. 1428 |
| 2. திருமாலிருஞ்சோலைநின்றார் மாவலிவாணாதிராயர்[28] | கி. பி. 1468 |
| 3. திருமாலிருஞ்சோலைநின்ற மாவலிவாணாதிராயர்[29] | கி. பி. 1438 |
| 4. திருமாலிருஞ்சோலைநின்றார் ஆன மாவலி வாணாதிராயர்[30] | கி. பி. 1477 |

5. திருமாலிருஞ்சோலைநின்றான்
மாவலிவாணாதிராயரான
உறங்காவில்லிதாசன்[31] கி. பி. 1449

6. திருமாலிருஞ்சோலைநின்றான்
மாவலிவாணாதிராயர்
உறங்காவில்லிதாசன்[32] கி. பி. 1464

7. உறங்காவில்லிதாசனான
மாவலிவாணாதிராயர்[33] கி. பி. 1453

பெரும்பாலான கல்வெட்டுக்களில் திருமாலிருஞ்சோலை நின்றான் என்று குறிக்கப்பெறுவதால் இதுவே இவனது இயற்பெயராக இருக்கவேண்டும். இப்பெயர் இவன் மாலிருஞ் சோலைமாலிடம் கொண்ட மையலைக் காட்டுகின்றது. அத்திருமால் ஒரு காலத்தில் இராமனாக அவதரித்துக் காடு சென்றபோது தானும் உடன் சென்று கையில் வில்லேந்தி அல்லும் பகலும் உறங்காது விழித்திருந்து அருகில் நின்று அவரைக் காத்த இலக்குவனுக்கு உறங்காவில்லி என்ற பெயர் உண்டு. இராமாநுசர் காலத்தில் வாழ்ந்த ஒரு திருமால் அடியார்க்கும் இப்பெயர் உண்டு. திருமாலின் அடியார்க்கும் தானொரு அடியேன் என்ற பொருளில் தன்னை திருமாலிருஞ்சோலை நின்றான் 'உறங்காவில்லி தாசன்' என்று அழைத்துக்கொண்டிருக்க வேண்டும். திருமயம் வட்டத்திலுள்ள சேவலூர் கல்வெட்டு 'ஸ்வஸ்திஸ்ரீ' என்பது போன்ற மங்கலச் சொல்லோடு தொடங்கும் கல்வெட்டு மரபை மாற்றிவிட்டு 'அழகர் திருவுள்ளம்' என்ற அழகிய சொற்றொடரோடு தொடங்கு கின்றது.[34] இவனது காஞ்சிபுரம் கல்வெட்டோ ''அழகர் திருவுள்ளம்'' என்று முடிந்திருக்கின்றது.[35] இவை இவன் அழகர் மீது கொண்டிருந்த அளவில்லாத பற்றைப் பறை சாற்றுகின்றன. பின்னைப்பிறை சடைக்கணிந்த பீணாகபாணி

எம்பெருமானை உள்ளத்தினில் இருத்தி உலகம் காத்த ஒரு பாண்டியனைப் பற்றித் தளவாய்புரம் செப்பேடு கூறும். இவ்வாணாதிராயரோ, மாலிருஞ்சோலை அழகரை மனத்தினில் இருத்தி, ஆட்சி நடத்தி அழகர் திருவுள்ளமே தன் செயலாகக்கொண்டான் போலத் தோன்றுகின்றது.

அழகர்கோயிலுக்கும் வாணாதிராயர்க்கும் பாண்டியர் காலத்திலிருந்தே அதிகத்தொடர்பு இருந்துவந்திருக்கின்றது வாணாதிராயர் பற்றிப் பாண்டிய நாட்டில் கிடைத்திருக்கும் குறிப்புக்களில் மிகவும் பழமையானது இவ்வழகர்கோயிலி லிருந்தே நமக்கு கிடைத்திருக்கின்றது.[36] முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியனது அரசியல் அதிகாரி' ஒருவன் சோலை மலைப்பெருமாள் என்று பெயர் பெற்று விளங்கியிருக்கின்றான்[37] அக்காலத்தில் இவ்வாணாதிராயர்களின் பெயரில் இங்கு 'வாணாதிராயன் மடம்' என்று ஒரு மடம் இருந்திருக்கின்றது[38] இவ்வழகர்கோயில் அழகருக்குப் பாண்டியர் காலத்தில் வாழ்ந்த வாணர் குலத்துப்பாண்டிய இளவரசர்களும் அதிகாரிகளும் பல அறக்கொடைகளை அளித்திருக்கின்றனர்.

இத்திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயனைப் போன்றே மாறவர்மன் குலசேகரன் காலத்தில் வாழ்ந்த ஒரு மழவராயன் 'திருமாலிருஞ்சோலை நின்றான் மழவராயன்' என்று தன்னை அழைத்துக் கொண்டிருக்கின்றான் என்பதை விருந்தாசலம் கல்வெட்டு தெரிவிப்பதும் இங்கு குறிப்பிடத்தக்க செய்தியாகும்.[39]

திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலிவாணாதிராயன் கி. பி. 1428 முதல் 1477 முடிய வாழ்ந்திருக்கின்றான். இவ்வாண்டைச் சார்ந்த இவனது கல்வெட்டுக்கள் பல ஸ்ரீவில்லி புத்தூரில் காணப்படுகின்றன.[40] பழைய முகவை, மதுரை,

புதுக்கோட்டை பகுதிகளில் இவன் கல்வெட்டுக்கள் காணப் படுவதால் இப்பகுதியை விசயநகரவேந்தர் காலத்தில் அவர்களுக்குக்கீழ் கி. பி. 1428 முதல் 1477 முடிய நாற்பத் தொன்பது ஆண்டுகள் இவன் ஆட்சி புரிந்திருக்கவேண்டும்.

இவனது காலத்தில் இரண்டாம்தேவராயர் (கி.பி.1422-1466) இரண்டாம் விசயராயர் (1446-1447) மல்லிகார்ச்சுனர் (கி. பி. 1446-1465) இரண்டாம் விருபாக்ஷர் (கி. பி. 1465-1485) முதலியோர் விசயநகர வேந்தர்களாக விளங்கினர். இவ்வண்ணாதிராயன் ஆண்ட காலத்திலேயே பாண்டி நாட்டில் தென்காசியைத் தலைநகராகக்கொண்டு 1422 முதல் 1462 முடிய ஆண்ட மன்னன் அரிகேசரி பராக்கிர பாண்டியன் ஆவான்.

இவன் காலத்தில் பாண்டியநாட்டின் மீதுஇரண்டுமுறை விசயநகரவேந்தரின் படையெடுப்புகள் நடைபெற்றன முதல் படையெடுப்பு இரண்டாம் தேவராயர் காலத்தில் கி. பி. 1438ல் நடைபெற்றது[41] இப்படையெடுப்பைத்தேவராயரின் படைத்தலைவன் லக்கணதண்ட நாய்க்கன் இலங்கை வரை சென்று நடத்தினான். இலங்கையை வென்றதால் தேவராயன் தன்னை 'ஈழம் திறை கொண்டவன்' என்று அழைத்துக் கொண்டான்[42] இக்காலத்தில் வாழ்ந்த அரிகேசரி பராக்கிரம பாண்டியனும் தன்னை ஈழத்தை வென்றவன் என்று கூறிக் கொண்டான். இவ்வெற்றி இவன் தனியே நின்று பெற்ற வெற்றியாக இருக்கமுடியாது லக்கணதண்டநாயகனோடு உதவியாகச்சேர்ந்து சென்று பெற்ற வெற்றியாக இருக்க வேண்டும். இப்பாண்டிய மன்னனாகிய அரிகேசரிபராக்கிரம பாண்டியன் செய்த உதவிக்குக் கைம்மாறாக விசயநகர வேந்தர் மதுரையைப்பரிசாக அளித்திருக்கவேண்டும். பிறகு இவனது தன்னிச்சையானபோக்கை ஒடுக்கவே கி.பி.1453ல் சதாசிவ நாசநாயக்கனின் இரண்டாவது விசயநகரப் படை யெடுப்பு நடைபெற்றிருக்க வேண்டும். 'மதுரைக்காவலன்

'மானபூசனன்' என்று அழைக்கப்பட்ட இப்பராக்கிரம பாண்டியனையே நரசநாயக்கன் வென்றான். மதுரையை விட்டு அவனைத் துரத்தி அதன் பிறகே உறங்காவில்லி தாசனான இத்திருமாலிருஞ்சோலை மாவலி வாணாதிராய னுக்கு மதுரை ஆட்சியை அளித்தான் என்று கூறுவர். [42A] கி. பி. 1452க்குப் பிறகு மதுரையை வாணாதிராயர்க்கு அளித்தனர் என்ற மதுரைத்தலத்தார் வரலாற்றின் கூற்றை வழிமொழிவது போன்று அமைந்த இக்கூற்று பொருத்த முடையதாகத் தோன்றவில்லை.

இம்முடிவுக்கு மாறாக இவ்வுறங்காவில்லிதாசனான திருமாலிருஞ்சோலை நின்ற மாவலி வாணாதிராயனின் கல்வெட்டுக்கள் கி. பி. 1452க்கு முன்பாகவே கி பி. 1428ல் இருந்து கிடைத்திருக்கின்றன. இதைத் தொடர்ந்து ஸ்ரீவில்லி புத்தூரில் கி.பி. 1433 [43] கி.பி. 1438[44] ஆண்டுகளைச் சார்ந்த கல்வெட்டுக்களும் மதுரை மாவட்டத்து புளியங்குளத்தில் கி. பி. 1449ஆம் ஆண்டைச் சார்ந்த இவனது கல்வெட்டும் கிடைத்துள்ளன. கி. பி. 1453ல் அரசன் பெயர் குறிப்பிடாத கல்வெட்டு ஒன்று மதுரைப்பகுதி இவ்வாணாதிராயனுக்குச் சொந்தமாய் இருந்தது என்பதை உறங்காவில்லிதாசன் ஆன மஹாவலி வாணாதிராயர் சீர்மை ஆன மதுரை மண்டலம்[45] என்றுதெளிவாகத் தெரிவிக்கின்றது, கி.பி.1453ம் ஆண்டைச் சார்ந்த இக்கல்வெட்டில் குறிப்பிடப்படும் உறங்காவில்லி தாசன் ஆன மகாவலி வாணாதிராயனும் கி.பி. 1428, 1433, 1449ஆம் ஆண்டுகளைச்சார்ந்த கல்வெட்டுக்களில் குறிப்பிடப் படும் வாணாதிராயனும் ஒருவனே ஆவான். திருமாலிருஞ் சோலை நின்றானுக்கே 'உறங்காவில்லிதாசன்' என்ற பெயர் இருந்திருக்கின்றது என்பதை முன்னரே இவனது பெயர் பற்றிய ஆய்வுப் பகுதியில் கண்டோம். இதனால் மதுரைப் பகுதி இக்காலத்தில் (கி.பி.1453க்கு முன்பு) இவ்வாணாதிரா யன் வசத்திலேயே இருந்திருக்கவேண்டும் என்பது தெளிவு.

மதுரைப் பகுதியை அரிகேசரி பராக்கிரம பாண்டியன் தன் குலப்பெருமை கருதி இவ்வாணாதிராயனிடமிருந்து மீட்கப் போர் தொடுத்திருக்கலாம். சிலவற்றில் வாணாதிராயனும் சிலவற்றில் பராக்கிரம பாண்டியனும் வெற்றி அடைந்திருக்கலாம். திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயன் பாண்டியர் மீது தான் பெற்ற வெற்றியின் அறிகுறியாகக் காசு[46] ஒன்றினை வெளியிட்டிருக்கிறான். அதில் 'சமரகோலாகலன்' என்ற பட்டப்பெயரைப் பொறித்து மற்றொருபுறம் பாண்டியனை வென்றதன் நினைவாக தனது சின்னமாகிய கருடன் பாண்டியரின் சின்னமாகிய மீனின் மீது அமர்ந்திருப்பது போன்று வடித்துக் காட்டியுள்ளான்.

மதுரை மாவட்டத்துப் புளியங்குளத்து கி பி. 1449 ஆம் ஆண்டைச் சார்ந்த இவனது கல்வெட்டு பொறிக்கப்பட்டதற்குப் பிறகும் கி.பி 1452ம் ஆண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் கல்வெட்டு பொறிக்கப்பட்டதற்கு முன்பும் உள்ள இவ்விடைப்பட்ட காலத்தில் மானபூசனான அரிகேசரி பராக்கிரம பாண்டியன் மதுரையில் வாணாதிராயனை வென்று ஆட்சிப் பீடத்தில் அமர்ந்திருக்க வேண்டும். அக்காலத்தில விசய நகரத்திலிருந்து நரசநாயக்கன் படையெடுத்து வநது மானபூசனனை வென்று அதைத் திரும்பவும் திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலிவாணாதிராயனானஉறங்காவில்லிதாசனுக்கு அளித்திருக்க வேண்டும். மேலும் கி.பி, 1438ல் லக்கணதண்டநாயக்கனுக்கு ஈழத்துப்போரில் உதவி செய்த இப்பராக்கிரம பாண்டியனுக்குத் தென்காசியைத் தலைநகராகக் கொண்டு தென்பாண்டி நாட்டைத் தொடர்ந்து ஆட்சிபுரிந்துவர விசயநகர வேந்தர் அனுமதி அளித்திருக்க வேண்டும் என்று கருதுவதே பொருத்தமுடையதாகத் தோன்றுகிறது.

இத்திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலிவாணாதிராயனின் கி.பி. 1458ம் ஆண்டைச் சார்ந்த ஸ்ரீவிலலிபுத்தூர்

கல்வெட்டு ஒரு விசயநகர வேந்தனின் கல்வெட்டைப் போலவே தொடங்குகின்றது.

'ஸ்ரீமன் மகாமண்டலிகவரான்
பாஷைக்கு தப்புவராயகண்டன்
மூவராயகண்டன்
கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான்'

என்றும்

'பாண்டியமண்டல ஸ்தாபனாச்சாரியன்
சோழமண்டல பிரதாபச்சாரியன் (பிரதிஷ்டாசாரியன்)
மதுராபுரி மஹாநாயகன்'

என்றும்

புகழ்ந்துகூறி 'திருமாலிருஞ்சோலை நின்ற மாவலிவாணாதிராயர்க்குச் செல்லா நின்ற சௌமிய வருசம்' என்று தொடர்ந்து செல்கின்றது[47] கி. பி. 1428ம் ஆண்டு ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டு இவனை

'கஜவேட்டை கண்டருளியவன்[48]'

என்று புகழ்ந்து கூறுகின்றது. பாண்டிய மன்னர்களுக்குக் கீழ் இருந்த காலத்தில் பாண்டிய மன்னர்களின் பட்டங்களை இவ்வாணாதிராயர் புனைந்து கொண்டது போன்று விசயநகர வேந்தனின் கீழ் இருந்த இவ்வாணாதிராயன் விசயநகர வேந்தனின் பட்டங்களைப் புனைந்து கொண்டு விளங்கியிருக்கிறான்.

இவன் பாண்டிய நாட்டை மகமதியரால் ஏற்பட்ட அழிவிலிருந்து மீட்டுக்குழப்பத்தை ஒழித்து பாண்டியமண்டலத்திற்கு அதிபதியாய் மதுரையிலிருந்து ஆட்சி புரிந்தமையால் தன்னைப்'பாண்டிமண்டல ஸ்தாபனாச்சாரியன்' என்று அழைத்துக்கொண்டான், புதுக்கோட்டைப் பகுதியிலிருந்த

சோழநாட்டுப் பகுதியும் இவன் கையில் இருந்தமையால் தன்னைச் 'சோழமண்டல பிரதாபச்சாரியன் என்று அழைத்துக்கொண்டான். திருவணைக்காவலன் என்பது சேதுபதிகளுக்குரிய பட்டப் பெயராக பிறகாலத்தில் விளங்கிற்று அதற்கு முன்பு இப்பட்டத்தை இவ்வாணாதிராயன் புனைந்து கொண்டிருப்பதால் மறவர்நாடும் இவ்வாணாதிராயனுக்குகீழ் இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

'தென்னவர் காவலன்
வேதியர் காவலன்
வீரகஞ்சுகன்
புவனேகவீரன்
சமரகோலாகலன்
இராசமீசுரகண்டன்
மதியார்தம் மணவாளன்
பூபாலசோபாலன்
பட்டமானங்காத்தான்
வீரப்பிரதாபன்[49]
வீரசஞ்சுகன்
புவனேக வீரன்
சமர கோலாகலன்[50]

என்பன இவ்வாணாதிராயனுக்கே உரிய பட்டப் பெயர் களாகும் இவற்றில் சில வீரகஞ்சுக நல்லூர்[51] புவனேக-வீரநல்லூர், சமரகோலாகல நல்லூர்[52] என்ற ஊர்ப்-பெயர்களாக பாண்டிய மண்டலத்தில் மாறிவிளங்கின

புவனேகவீரன், சமரகோலாகலன், என்ற பட்டங்களைக் கொண்டு விளங்கிய இவ்வாணாதிராயனின் கல்வெட்டு (கி.பி 1469) ஒன்று தொண்டை நாட்டுக்காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரநாதர் கோயிலில் உள்ளது[53] இது நெக்கோணம்

கல்வெட்டில் குறிப்பிடப்படும் சுந்தரத்தோளுடையான் மாவலி வாணாதிராயனின் கல்வெட்டாக[54] இருக்க முடியாது அவன் யார் என்பதையும் அவ்வாணாதிராயன் வாழ்ந்த காலம் எதுஎன்பதும் பின்னர் விளக்கப் பெறும். புவனேசுவீரன் திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயனே பாண்டிய நாட்டில் கி. பி. 1477 முடிய வாழ்ந்த வாணாதிராயன் ஆவான். இவனது ஆட்சிப் பரப்பு பாண்டிய நாட்டில் தெற்சே ஸ்ரீவில்லிபுத்தூர் வரைக்கும் வடக்கே புதுக்கோட்டை மாவட்டத்தையும் உள்ளடக்கியதாக விளங்கிற்று, இக்காஞ்சிபுரம் கல்வெட்டோ இவன் ஆட்சிப் பரப்பு கி. பி. 1469ல் காஞ்சிபுரம் வரைக்கும் பரவியிருந்ததை நமக்குக் காட்டுகின்றது. இரண்டாம் தேவராயர்க்குப் பின்னர் ஆண்ட (கி. பி. 1447-1485) விசயநகர வேந்தர்களான மல்லிகார்ச்சுனரும், விருபாச்சரும் வலியிழந்தவர்களாக விளங்கினர். இதனால் விசயநகரத்திலிருந்து அதிகதூரமிருந்த தெற்குப் பகுதியில் வாழ்ந்த சிற்றரசர்கள் அதிக அதிகாரத்துடன் சுயாட்சி மனப்பான்மையுடன் விளங்க வாய்ப்பு ஏற்பட்டது. இதனைப் பயன்படுத்திக்கொண்ட திருமாலிருஞ்சோலை நின்றான் காஞ்சிபுரம் எவ்வித எதிர்ப்பும் இல்லாது சென்று தன் கல்வெட்டைக் காஞ்சியில் பொறித்திருக்க வேண்டும். இவ்வாழ்வு நீண்ட காலம் நிலைத்திருக்கவில்லை இந்த ஆதிக்கம் கி. பி. 1471ம் ஆண்டிலேயே வீழ்ந்து போயிற்று என்பதைக் காஞ்சிபுரத்திலுள்ள கி. பி. 1471, 1472ம் ஆண்டுகளைச் சேர்ந்த விசயநகரத்து வேந்தர்காலக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன[55]

இத்திருமாலிருஞ்சோலைநின்றான் காஞ்சிபுரம் வரை சென்று அங்கு தன் கல்வெட்டைப் பொறித்துள்ளதை உறுதிப படுத்தும் வகையில் இவனைப்பற்றி மூன்று பாடல்கள் காஞ்சி கச்சபேசுவரர் கோயில் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளன[56 A] இப்பாடல்கள் இவன் காஞ்சிபுரம் வந்து தங்கியிருக்கும்

போது இவனிடத்து வந்து பரிசிலுக்காக இவனைப் புகழ்ந்து பாடிய புலவன் ஒருவனது பாடல்களாகஇருத்தல் வேண்டும். இப்பாடல்களின் இனிமையும் தனதுபெருமையையும் போற்றி, இவற்றை இவ்வாணன் தான் காஞ்சிபுரம் வந்து சென்றதன் நினைவாக, கச்சபேசுவரர்கோயிலில் கல் வெட்டாகப் பொறிக்கச் செய்திருக்க வேண்டும்.

கற்பனைநயம் செறிந்த இப் பாடல்களெல்லாம் இவன் பாண்டியர் மீது வெற்றி கண்டதயும் பாண்டியர் இவனிடத்து தங்கள் குலப்பெருமை அழியும்படி தோற்றதையும் பற்றிப் பேசுகின்றன. பாண்டியன் இணைக்கயலை இமயத்தில் பொறித்த சுவடு மறைந்துபோனாலும் போகும் ஆனால் இம்மாவலி வாணனிடம் தோற்றோடிப்போன மாறனின் சுவடுகள் மறையாது, என்கிறது ஒரு பாடல்.

அடுகயலை முன்னாளி லாடகக் குன்றிட்ட
வடுமறைந்துபோயு மறையா - முடுகுசமர்
மாற்றோர் தொழுந்திருமால் மாவுதைப்ப வேல்வழுதி
தோற்றோடிப் போன சுவடு.

பாண்டியநாட்டை அழிக்கவந்த கடலை, ஒரு காலத்தில் வேலால் வெகுண்டு எறிந்து தடுத்தான் ஒரு பாண்டியன் என்று பாண்டியர் செப்பேடுகளும் புராணங்களும் கூறும். இப்பெருமையை இம் மாவலிவாணன் மீதும் ஏற்றிக் கூறுகிறது மற்றொரு பாடல். இப்பாடல் இவ்வாணன் பாண்டியனைத் தென்கடல் வரை துரத்திச் சென்று தோல்வியுறச் செய்ததை நமக்கு உணர்த்துகின்றது. இப்பாடலை இயற்றிய புலவன், முன்பொருகாலத்தில் பாண்டியனால் வெகுண்டு வலி தொலைக்கப்பட்ட கடல், இன்று இம்மாவலி வாணன் வேலால் வலி தொலைந்து விழ்ந்ததை என் கண்களால் கண்டேன்' என்கின்றான்.

மாலாக்கி யிந்திரை யைத்திருத் தோள்வைத்து
வையமொரு
கோலாற் புரந்தருண் மாவலி வாணன்றன் கொற்றவடி
வேலாற் றூப்புண்ட பின்வீர மாறன் வெகுண்டு பண்டு
காலாற் குடித்த கடல்கண்க ளால்வீழக் கண்டனமே.

மூன்றாவது பாடலும் பாண்டியர் இவ்வாணன் முன் செருவேற்று நிற்கமாட்டாது புறமுதுகிட்டு ஓடிய தோல்வியைத் தெரிவிக்கின்றது. சினமிக்க வாணன் போருக்கு எழுந்தவுடன் அவனை எதிர்த்தவர்க்கு இவ்வுலகத்தில் ஆள்வதற்கு இடமும் சூடுவதற்கு மாலையும் இனி இல்லை என்பதை இன்று கண்டோம். வாணன் ஆற்றலை அறிந்து அவனைப் பணிந்த சேரனும் சோழனும் பொன்னையும் பொருளையும் திறையாகக் கொண்டு வந்து வாணன் முன் இட்டனர். பாண்டியனோ இவனைப் பார்க்கவே அஞ்சி புறமுதுகிட்டு ஓடிவிட்டான் என்ற பொருளில் இம் மூன்றாவது பாடல் அமைந்துள்ளது.

எற்றார்க் கிடந்தா ரிலையென்ப தின்றறிந்தோம்
சீற்றத் திருமால் செருவேற்க ணாற்றிலாப்
பொன்னிட்டான் சென்னிக்கொடிப்புள்ளிட்டான்; சேரமான்
வெந்திட்டான் கொற்கையார் வேந்து.

இவ்வாணனைப் பற்றிய மற்றுமொரு தனிப்பாடல் இப்பாடல்களோடு சேர்த்துப்பெருந்தொகையில் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றது[568] இவ்வாணன் மதுரையை விட்டு நீங்கி, நீண்ட தூரம் வந்து (காஞ்சிபுரத்தில்) தங்கியிருக்கும்போது கார்காலத்தில் அவனையேநினைத்து பிரிவின் துயரால் வாடிக்கொண்டிருக்கும் அவனது தலைவியின் கூற்றாக அவனது துயரினை வெளிப்படுத்தும்வகையில் அவள்தோழியிடம் எடுத்துச் சொல்வதாக அமைந்த அகப்பாடலாக உள்ளது

'தோழி! கன்னலென்னும் சிறு குருவி கொட்டுகின்ற மழைக்கு ஆற்றாது, காரிருளைப் போக்க, மின்னலையே புழுவாக எடுத்து வந்து விளக்கேற்றுகின்ற இக்கார்காலத்தில் தென் மதுரைக்கு மன்னனாகிய பாவலிவாணனைப் பிரிந்துறையும் எனக்கு இங்கே இனி மேலும் அவனில்லாமல் என்ன வாழ்வு இருக்கின்றது. எனக்கென்று என்ன விருப்பிருக்கிறது. எனக்கென்று என்ன நகைப்பு வேண்டியிருக்கிறது.'

கன்னலெனுஞ் சிறுகுருவி கசனபனமழக் காற்றாமன்
மின்னலெனும் புழுவெடுத்து விளக்கேற்றுங் கார்காலம்
மன்னவனாந் தென்மதுரை மாவிலிவாணனைப்பிரிந்திங்
கென்னபிழைப் பென்னவிருப் பென்னநகைப் பினியுமே

நந்திக்கலம்பகத்தின் தலைவியை நினைவூட்டும் இத் தனிப்பாடலில் இவ்வாணன் தென் மதுரைக்கு அரசன் என்ற பொருளில்மன்னவனாம்தென் மதுரை பாவலிவாணன் என்றே குறிப்பிடப்படுகின்றான். மற்ற பாடல்களில் இவ்வாணன் 'மாவலிவாணன்' என்றும் 'மற்றார் தொழுந் திருமால்மா' என்றும் சீற்றத் திருமால் என்றும் குறிப்பிடப்படுகின்றான் திருமாலிருஞ்சோலைநின்ற இம்மாவலி வாணாதிராயனே இப்பாடல்களில் சுருக்கமாக 'சீற்றத்திருமால்' என்றும் 'திருமால்மா' என்றும் உருவகிக்கப்பட்டிருக்கின்றான்.

இவ்வாணாதிராயன் காஞ்சிபுரத்தை இழந்த பின்னர் பாண்டிய நாட்டில் தன்னிடம் முன்னர் இருந்த பகுதிகளை வைத்துக்கொண்டு தொடர்ந்து ஆட்சிபுரிந்து வந்தான். விசயநகரவேந்தர் வலிகுன்றிய இக்காலத்தில் இவன் தனக்கென்று தனியாகக்காசுகள் வெளியிடக்கூடிய அதிகாரம் படைத்தவனாக விளங்கியிருக்கின்றான். சமரகோலாகலன், புவனேகவீரன் என்று இவனது பட்டப் பெயர்கள் பொறித்துள்ள அக்காசுகள் இம்மன்னன் காலத்தில் வெளியிடப்பட்டவையேயாகும்.

இம்மன்னன் விசயநகர வேந்தர்களைப் போன்றே சிறந்த வைணவப் பற்றுடையவனாக விளங்கியிருக்கிறான். தன் காசுகளின் பின்புறம் திருமாலின் பெரிய திருவடியான கருடனைப் பொறித்திருக்கிறான். இவன் வைணவக் கோயில்களுக்குச் செய்த அறப்பணிகளும் கலைப்பணிகளும் பலவாகும்.

## இறைப்பணியும் கலைப்பணியும்

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயிலுக்கும் அழகர் கோயிலுக்கும் இவன் செய்த பணிகள் குறிப்பிடத்தக்கவையாகும்.

### ஸ்ரீவில்லிபுத்தூர்

இவனது கி.பி.1428ம் ஆண்டைச் சார்ந்த முதல் கல்வெட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் சூடிக்கொடுத்த நாச்சியாரான ஆண்டாளுக்கு நித்தநிவந்தங்களுக்காக ஒரு கிராமத்தைத் தானமாக அளித்ததைத் தெரிவிக்கின்றது.[56] கி.பி 1433ல் திருவரங்கநல்லூர் என்ற கிராமத்தை இந்நாச்சியாருக்கு அளித்ததோடு மட்டுமல்லாமல் இந்நாச்சியார்க்கென்று ஆபரணங்கள் பலவற்றை அளித்திருக்கிறான்[57] அதன் பிறகு கி.பி.1438ல் இன்று மதுரையிலிருந்து மாரியம்மன் தெப்பக்குளம் வழியாகத் திருப்புவனம் செல்லும் பாதையில் அமைந்துள்ள வெருகனூர் என்ற கிராமத்தில் இருந்த நிலங்களை இறை நீக்கி இந்நாச்சியார்க்குத் தானமாகத் தந்துள்ளான். கி.பி.1453ல் இவனது சீர்மையில் இருந்த முட்டநாட்டைச் சார்ந்த திடியன் என்று அழைக்கப்பட்ட திருவரங்கநல்லூர் என்ற கிராமம் இந்நாச்சியார்க்குத் திருவமுதுபடைக்க ஆகும் செலவிற்காக அடுக்களைப்புறமாக அளிக்கப்பட்டது[58] இன்று இவ்வூர் மதுரை மாவட்டத்தில் உசிலம்பட்டி வட்டத்தில் செல்லம்பட்டி அருகே அமைந்துள்ளது.

இத்திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலி வாணாதி-ராயனே கி. பி. 1477ல் இச்சூடிக்கொடுத்தருளிய நாச்சி-யார்க்குத் தன்னுடைய மனக்குறை தீர, ஆடித்திருநாளில் திருவமுது திருப்பரிவட்டம், திருமாலை திருவிளக்கு போன்ற வற்றிற்கும் நித்திய நைவேத்தியங்களுக்கும் ஆகும் செல-வினங்களுக்காக மாங்குளம் என்ற ஊரைத் தானமாகத் தந்திருக்கின்றான். இவ்வூர்க் கல்வெட்டில் வீரநாராயண வளநாட்டு திறளில் பற்று மாங்குடி ஆன சுந்தரத்தோள நல்லூர் என்று குறிப்பிடப்படுகின்றது. இவன் இதை இந் நாச்சியாருக்கு அளித்ததை கல்வெட்டு பின்வருமாறு தெரிவிக்கின்றது. "...... திருமாலிருஞ்சோலை நின்றான் ஆன மாவலி வாணாதிராயர் கொடுத்த தர்ம தானப் பட்டயம் திருமல்லிநாட்டு சீவில்லிபுத்தூர் நாச்சியார் சூடிக் கொடுத்தருளிய நாச்சியாற்குத் திருவாடித் திருநாள் நம்முடைய குறையறுப்பு ஆகக் கொண்டருளும் படிக்கு இந்தத் திருநாளுக்கு வேண்டும் அமுதுபடி கறியமுது சாத்துப்படி திருப்பரிவட்டம் திருமாலை திருவிளக்கும் மஞ்சள்காப்பு கற்பூரம் குங்குமம் கண்டருளத் திருகாப்பு கூடம் உட்பட வேண்டும் நைவேத்தியங்களுக்கும் உட்பட்ட வகைக்கு விட்ட வீரநாராயண வளநாட்டு திறளில் பற்றில் மாங்குடி ஆன சுந்தரத்தோள நல்லூர்........"[59]

ஆண்டாள்கோவில் அர்த்த மண்டபத்தின் தெற்குப்புறச் சுவரில் உள்ள சிதைந்துபோன கல்வெட்டு ஒன்று இவ் வாணாதிராயன் ஏதோ ஒரு தானத்தை இந்நாச்சியாருக்கு அளித்ததாகத் தெரிவிக்கின்றது[60]

மதுரை மாவட்டம் திண்டுக்கல்லுக்கு அருகிலுள்ள தாடிக்கொம்பு பெருமாள் கோவிலில் இவ்வாணாதிராயன் பெயரில் ஒரு அறக்கட்டளை நடத்தப்பெற்றிருக்கின்றது. இதனை அங்குள்ள கல்வெட்டு 'பெரியநம்பி திருமாலிருஞ் சோலை நின்றான் நிறுவாகம்' என்று குறிப்பிடுகின்றது.

இதன்படி இக்கோயிலில் 'இதிகாசமும், புராணமும், ஸ்ரீபாசியமும், திருவாய்மொழியும், ஸ்ரீ ஆளவந்தான் (ஸ்தோ) தோத்திரமும், சுந்தராச தவமும் ஸ்ரீபதி ஸஹஸ்ரநாம படிப்பும் ஸ்ரீபதி பாகவதமும் படிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கின்றது.[61]

அழகர்கோயில் அம்மி

திருமாலிருஞ்சோலை அழகரிடம் அளவில்லா அன்பு கொண்ட இவ்வாணாதிராயன் அழகருக்குப் பச்சைக் கற்பூரம் குங்குமப்பூ, சந்தனம் முதலியன அரைப்பதற்குச் சாலாந்துச் சிறப்புமிக்க அழகுடைய அம்மி ஒன்றைக் குழவிக்கல்லுடன் செய்தளித்திருக்கின்றான். இது இன்றும் அழகர்கோயிலில் காட்சிப்பொருளில் ஒன்றாகக்காட்சியளிக்கின்றது. தாமரைப் பீடம் ஒன்றில் எட்டுக்கால்களுடன் பக்கத்திற்கொன்றாக இரண்டு சிம்மங்கள் இதனைத் தாங்கி நிற்கும்படி இது வடிக்கப்பட்டுள்ளது. இதன் மேல் விளிம்பின் பக்கவாட்டில்

1. திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலிவாணாதிராயர்
2. உறங்காவில்லி(தா)ஸந் ஆன
3. சமரகோலாகலன்

என்று இவன் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.[62] இதன் நீளம் 18 செ.மீ. அகலம் 8 செ.மீ. ஆகும்.

இன்று அழகர்கோயிலில் 'சோமசந்த விமானம்' என்று அழைக்கப்பட்டு அழகுடன் காட்சியளிக்கும் கருவறை இவ் வாணாதிராயன் காலத்தில் கி. பி. 1464ல் கட்டுவிக்கப் பட்டதேயாகும். விமானத்தின் பழைய கட்டட பகுதிகள் பிரித்தெடுக்கப்பட்டு 'உபானம் முதல் ஸ்தூபி வரை' வேசர விமானமாக வட்டவடிவாக மாற்றியமைக்கப்பட்டுள்ளது. இத்திருப்பணியைச் செய்ய திருவளவன் சோமயாஜி என்பவனுக்கு வரி நீக்கம் செய்யப்பட்ட குலமங்கலம் என்ற ஊர் தானமாகத் தரப்பட்டது.[63]

### சிவன் கோயில்கள்.

வைணவனாக விளங்கிய இவ்வாணாதிராயன் இரண்டு சிவன் கோயில்களுக்கு வழிபாட்டிற்காக நிவந்தங்கள் அளித்திருப்பதையும் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. காஞ்சிபுரத்திலுள்ள ஏகாம்பரநாதர்க்கும், காமாட்சி அம்மனுக்கும் மாதந்தோறும் வருகின்ற இவனது பிறந்த நாள் நட்சத்திரத்தில் விசேட பூசை நடத்துவதற்கு அமுதுபடி, கறியமுது, இலையமுது, அடைகாயமுது திருப்பரிவட்டம், சாத்துப்படி, திருவிளக்கு, உள்பட வேண்டிய நித்திய நைவேத்தியங்களுக்கு ஆகும் செலவிற்காகத் தேவதான-மாகப் பண்டிய மண்டலத்தில் இருந்த வீரநாராயண வளநாட்டு சமரகோலாகலநல்லூர், புவனேகவீரநல்லூர் என்ற ஊர்கள் இவனால் தானமாகத் தரப்பட்டன.[64]

திருமயம் வட்டத்திலுள்ள சேவலூர் பூமிசுவரமுடையார் கோயில் நாயனார்க்கு அமுதுபடி, சாத்துப்படி, நித்தம் எரிகின்ற நிலைவிளக்கு, திருப்பரிவட்டம், உள்ளிட்ட நித்திய நிவந்தங்களுக்காகப் பொன்னமராவதி நாட்டு தேனூர்ப்-பற்றில் ஏனாதி என்று அழைக்கப்பட்ட வாணாதிராயர் பட்டப்பெயர் பெற்றவீரகஞ்சுகநல்லூர் என்ற ஊர் இவனால் தானமாகத் தரப்பட்டது. இது 'சுந்தரத்தோளுடையார் சந்தி' என்று அழைக்கப்பட்டது[65] சிவன் கோயிலில் காணப்-படும் இவனது கல்வெட்டு கூட 'அழகர் திருவுள்ளம்' என்றே தொடங்குகிறது[66] மற்றொன்று 'அழகர் திருவுள்ளம்' என்று முடிகின்றது[67]

### அப்பன் திருவேங்கடமுடையான் மடம்

இம்மடம் இவ்வாணாதிராயன் காலத்தில் மதுரை மாவட்டத்துப் புளியங்குளத்தில் சிறப்புற்று விளங்கிற்று. இதற்கு மடப்புறமாகச்சில நிலங்கள் இவ்வாணாதிராயனால்

அளிக்கப்பட்டதை கி. பி. 1449 ஆம் ஆண்டைச் சார்ந்த இவ்வூரிலிருக்கும் இவனது கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது[60]

### வாணாதிராயன் அளவு

அழகர்கோயிலில் இவ்வாணாதிராயன் காலத்தில் இவனது பெயரில் நீட்டலளவைப் பெயர் ஒன்று வழக்கில் இருந்திருக்கின்றது. அழகர்கோயிலில் உள்ள கல்யாணசுந்தரவல்லித்தாயார்கோயிலில் சந்நிதியின் மேற்குச்சுவரின் அடிப்பகுதியில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு ஒன்றில் இது 'திருமாலிருஞ்சோலை மாவலி வாணாதிராயன் மாத்ராங்குலம்' என்றுகுறிப்பிடப்படுகின்றது[60] இதன் அளவு வரைகோடுடன் (ஸ்கேல்) இச்சுவரில் பொறித்துக் காட்டப்பட்டுள்ளது.

### அரசியல் அதிகாரிகள்

இவனிடத்தில் பணிபுரிந்த அரசியல் அதிகாரிகள் பலர் பற்றி இவனது கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. திருமயம் வட்டத்திலுள்ள பூவாலைக்குடிப் புஷ்பேஸ்வரர் கோயில் கல்வெட்டு ஒன்று கி. பி. 1468-ல்

1. பஞ்சவராயர்
2. நரசிங்கத்தேவர்
3. சோழக்கோனார்
4. பல்லவராயர்

முதலிய அரசியல் அதிகாரிகளுக்கு இடையே இடங்கை வலங்கைப் பங்குகளைப் பிரித்து அனுபவிப்பதில் தகராறு ஏற்பட்டு இவர்களுக்கிடையே நடந்த சண்டையில் இரு தரத்தார் பக்கங்களிலும் ஆள்சேதமாகி அழிவு நேர்ந்ததைத்

தெரிவிக்கின்றது 70 இவ்வாணாதிராயன் அத்தகராற்றில் தலையிட்டு அதனை தீர்த்துவைக்க ஏற்பாடு செய்தான். அதன்படி

1. பின்முடி தாங்கினார்

2. காரையூர் வேளார்பிள்ளை

3. சுந்தரசோழபுரத்து நகரத்தார்

4. செவ்வலூர் ஊரார்

5. வட்டாற்று நாட்டார்

ஆகியோர் கூடி அத்தகராற்றைத்தீர்த்து வைத்தனர். வலங்கையில் வண்டாளவரிசைப் புறத்தில் அடையாள முள்ளதும் பஞ்சவராயர் நாசிங்கத்தேவர் உள்ளிட்டாரும் சோழக்கோனார், பல்லவராயர் உள்ளிட்டாரும் அனுபவிக்க வேண்டும் என்றும் 'இடங்கையில் சுவந்திரமுள்ளதும் வலங்கையில் சுவந்திரமுள்ளதும் பஞ்சவராயர் நரசிங்கத் தேவர் உள்ளிட்டார் அனுபவிக்கவேண்டும் என்றும் முடிவு எடுக்கப்பட்டு இவர்களிடையே ஏற்பட்ட தகராறும் தீர்த்துவைக்கப் பட்டது.

வாணாதிராயர் பிள்ளைகள்

பாண்டியர்காலத்தில் பாண்டியர்களிடத்தில் பணிபுரிந்து வாணாதிராயர்கள் 'பிள்ளை' என்று அடைமொழி கொடுத்து அழைக்கப்பட்டது போன்று இவன் காலத்தில் வாழ்ந்த சில அரசியல் அதிகாரிகள் சிலர் 'பிள்ளை' 'பிள்ளைகள்' என்ற அடைமொழியுடன் கல்வெட்டுக்களில் அழைக்கப்பெறுகின்றனர். இவர்கள் வாணாதிராயர்க்கும் குறுநிலத்தலைவர்களுக்கும் இடையே நடந்த மணவினையால் பிறந்த பிள்ளைகளாக இருத்தல் வேண்டும்.

1. பின்முடிதாங்கினார்[71]
2. காரையூர் கிழவாண்டரான காரையூர் வேளார் பிள்ளை[72]
3. பிள்ளைகள் இராஜகெம்பிர வளநாட்டு வயலூர்க் காங்கையர் பிறவிக்கு நல்லாரான அரசுவழிகண்ட தேவர்[73]

இவர்கள் இவ்வாணாதிராயன் நாட்டில் ஆங்காங்கே தங்கியிருந்து நாட்டில் நிர்வாகமும் அமைதியும் குலையாது காத்து நின்றனர். நாட்டுப் பிரிவுகளின் தலைவர்களாகவும், ஊர்த் தலைவர்களாகவும் பணியாற்றினர்.

(இதில்) பிள்ளைகள் வகை பின்முடிதாங்கினார் புதுக்கோட்டைப் பகுதியில் எந்தப் பிரிவுக்குத் தலைவராக விளங்கினார் என்று தெரியவில்லை. காரையூர் கிழவாண்டாரான காரையூர் வேளார் தென்கோனாட்டு ஒல்லையூர்க் கூற்றத்தைச் சார்ந்த காரையூர்க்குத் தலைவராக இருந்து அப்பகுதியில் அமைதியையும் நிர்வாகத்தையும் நிலைநாட்டி வந்தார். இவர் இராசகெம்பிர வளநாட்டு வயலூரைச்சார்ந்த காங்கையர் பிறவிக்கு நல்லாரான அரசுவழி கண்டதேவர்க்கு அப்பகுதி 'பாடிகாவலைப் பிறமாணம்' பண்ணிக்குடுத்தார் என்று காரையூர் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[74]

ஸ்ரீரங்கநாத பிரியன்

இவன் இவ்வாணாதிராயனின் திருமந்திரஓலைநாயகமாகப் பணியாற்றியவன், கி. பி. 1453-ம் ஆண்டைச் சார்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டில் குறிப்பிடப்படுகின்றான்.[75]

நீலங்கரையர்

இவ்வாணாதிராயன் இவரை 'அம்மான்' என்று குறிப்பிடுவதால் இவர் இவ்வாணாதிராயனின் தாய் மாமனாக இருக்கவேண்டும். இவர் மிழலைக்கூற்றந்தைச்

சார்ந்தவர் ஆவார். இவரது வேண்டுதலுக்கு இணங்கியே இவ் வாணாதிராயன் காஞ்சி காமாட்சிக்கும் ஏகாம்பரநாதருக்கும் பாண்டியநாட்டிலுள்ள சமரகோலாகல நல்லூரையும் புவனேகவீர நல்லூரையும் இறைநீக்கித் தானமாகத் தந்திருக்கிறான்.[76]

ஸ்ரீரங்கநாயகியார்

இவ்வம்மையார் இத்திருமாலிருஞ்சோலை நின்றார் மாவலி வாணாதிராயரின் பட்டத்தரசி ஆவார். கி.பி. 1476-ம் ஆண்டைச் சார்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டு ஒன்றில் குறிப்பிடப்படுகின்றார்[77] அரசனோடு முடிகவிழ்க்கப்பட்ட தேவிகளுக்கு அரச ஆணையிடுதல் போன்ற பல உரிமைகள் உடன் வந்தன என்று சோழர் கல்வெட்டுக்கள் கூறுகின்றன[78] முதல் இராசராசனின் தலைமைத்தேவி தந்திசக்திவிடங்கியான உலோகமாதேவியார் திருவையாற்றில் தன்பெயரால் ஒரு சிவாலயத்தை எடுப்பித்து அக்கோயில் செலவினங்களுக்கு ஆகும் பொருளையும் அளித்து அதற்கான அரச ஆணையயும் தானே பிறப்பித்திருக்கின்றார்[79] இம்மாவலிவாணாதிராயன் பட்டத்தரசியான ஸ்ரீரங்கநாயகியாரும் அரச ஆணை பிறப்பிக்கும் உரிமை பெற்றிருந்தாள். திருமாலிருஞ்சோலையில் இன்று நூபுரகங்கை என்று அழைக்கப்படும் சிலம்பாற்றின் தலையருவிக்கரையிலே அழகர் எழுந்தருளியிருக்கின்ற காலத்தில் 'திருமாலிருஞ்சோலை நின்றார் ஆன மாவலிவாணாதிராயர் குமாரர் சுந்தரத்தோளுடையார் மழவராயர் மாதாக்கள் ஸ்ரீரங்கநாயகியார் (நாம்) கொடுத்த (தன்ம) சாதன பட்டயம்' என்று அவர் வெளியிட்ட ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டு சாசனம் தொடங்குகின்றது.

இதன்படி இந்நாயகியார் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் சூடிக்கொடுத்த நாச்சியார் மார்கழி மாதத்தில் 'திருப்பொன்

னூஞ்சல்' ஆட ஏற்பாடு செய்தார். இத்திருநாளுக்கு ஆகும் அமுதுபடி, கறியமுது சாத்துப்படி, திருபபரிவட்டம், திருமாலை, திருவிளக்கு, மஞ்சள் காப்பு, உட்பட வேண்டும் நைவேத்தியங்களும் அக்கார அடிசிலுக்கும், அடுக்களைப்-புறமாகத் தனது நாயகன் விருபபி அளித்த வீர நாராயண வளநாட்டு குராயூர்பபற்றில் இருந்த சொக்கனே நதல் என்ற சுந்தரத்தோளநல்லூரையே தன் மனக்குறை தீர. சூடிக்கொடுத்த நாச்சியாருக்குத் தானமாக அளித்தார் 'ஸ்ரீவில்லிபுத்தூர் நாச்சியார் சூடிக்கொடுத்த நாச்சியார் மார்கழி மாஸத்தில் என்னுடைய குறை அறுப்பு ஆகக் கொண்டு அமுதுபடிக்கு திருப்பொன்னூஞ்சலும் உண்டு ஆக்கி இத்திருநாளுக்கு வேண்டும் அமுதுபடிக்கு கறியமுது சாத்துப்படி, திருப்பரிவட்டம், திருமாலை, திருவிளக்கும் மஞ்சள் காப்பு உட்படவேண்டும் நைவேத்தியங்களுக்கும் அக்கார அடிசிலுக்கும் உட்பட்ட வகைக்கு நயினார் எனக்கு அடுக்களைப்புறம் ஆகத் திருவுள்ளம் பற்றி அருளின வீர நாராயணவளநாட்டு குராயூர் பற்றில் சொக்கன் ஏந்தல் ஆன சுந்தரத்தோளநல்லூர் நான்கு எல்லையும் புதவாரமும் விசாகமும் பெற்ற புண்ணியகாலத்திலே திருமாலிருஞ் சோலை தலையருவிக்கரையிலே அழகர் எழுந்தருளுகையில் .......... உதகப்பூர்வமாக திருவிடையாட்டம் ஆக விட்ட அளவுக்கு........'[60] என்பது அவர் அளித்த அரச ஆணையின் வாசகமாகும்.

### திருமாலிருஞ்சோலை நின்றானும் சுந்தரத்தோளுடையானும்

மேற்குறித்த ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டில் இத்தேவியர் தன்னை அறிமுகப்படுத்திக்கொள்ளும்போது 'திருமாலிருஞ் சோலை நின்றார் ஆன மாவலிவாணாதிராயர் குமாரர் சுந்தரத்தோளுடையார் மழவராயச் மாதாக்கள்' என்றே

அறிமுகப்படுத்திக் கொள்கின்றார். இதனால் திருமாலிருஞ்சோலை நின்றார் மாவலிவாணாதிராயனும் சுந்தரத்தோளுடையான் மழவராயனும் இருவர் என்பதும் திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயன் மகனே சுந்தரத்தோளுடையான் மழவராயன் என்பதும் தெரிவக்கின்றது.

இவன் வாணர்குலத்திற்கும் மழவராயர் குலத்திற்கும் இடையே ஏற்பட்ட மணஉறவில் பிறந்தமையால் 'சுந்தரத்தோளுடையார் மழவராயன்' என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும் ஸ்ரீரங்கநாச்சியார் தன் கணவன் நாட்டை ஆண்டு கொண்டிருக்கும்போது அவனைமட்டும் குறிப்பிடாது சுந்தரத்தோளுடையார் மழவராயன் மாதாக்கள்' என்று மகனையும் உட்படுத்தி தன்னை அறிமுகப்படுத்திக் கொள்வதற்கு காரணம் இச்சுந்தரத்தோளுடையான் தன் தந்தை காலத்திலேயே கி. பி, 1476-க்கு முன்பிருந்தே தன் தந்தையால் இளவரசுப்பட்டம் சுட்டப்பட்டு தந்தைக்குத் துணையாக பாண்டியநாட்டு ஆட்சிப்பொறுப்பில் பங்கேற்றிருக்க வேண்டும்; பேரும் புகழும் பெற்று விளங்கியிருக்கவேண்டும் இதனால்தான் ஸ்ரீரங்கநாச்சியார்பெயர் பெற்று விளங்கிய தன் மகனையும் கூறி தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கின்றார்

இச்சுந்தரத்தோளுடையானையும் திருமாலிருஞ்சோலை நின்றானையும் ஒருவர்[81] எனக் கொள்ள முடியாது. திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயனைக் குறிப்பிடும்போது எந்தக் கல்வெட்டும் அவனை 'சுந்தரத்தோளுடையான்' என்று குறிப்பிடவில்லை. மேலும் இவனது பட்டப்பெயர்களை அடுக்கிக்கூறும் பட்டியலில் கூட இப்பெயர் இடம்பெறவில்லை. கி.பி.1468-ம் ஆண்டைச் சார்ந்த சேவலூர் கல்வெட்டு 'சுந்தரத்தோளுடையான் சந்தி' என்று இவனொரு சந்தியினை ஏற்படுத்தியதைத் தெரிவிக்கின்றது.[28] இச் சந்தியை 'சுந்தரத்தோளுடை

யரான் என்ற தன் மகனது பெயராலேயே திருமாலிருஞ்-சோலை நின்றான் தோற்றுவித்திருக்கவேண்டும், இதற்குப் பிறகு தன் மகனுக்கு இளவரசுப்பட்டம் சூட்டி நாட்டைத் தன்னோடு சேர்ந்து ஆளச் செய்திருக்கவேண்டும். சேவலூர் கல்வெட்டில் குறிப்பிடப்படும் மாவலிவாணாதிராயன் திருமாலிருஞ்சோலை நின்ற மாவலிவாணாதிராயன் ஆன உறங்காவில்லிதாசன் ஆவான். ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டில் குறிப்பிடப்படும் இவனது மகன் சுந்தரத்தோளுடையார் மழவராயனே நெக்கோணம் கல்வெட்டில் (கி. பி 1483) குறிப்பிடப்படும் சுந்தரத்தோளுடையான் மஹாவலிவாணாதிராயன் ஆவான்.

திருமாலிருஞ்சோலை நின்ற மாவலிவாணாதிராயன் கி. பி. 1477 வரை உயிருடன் இருந்திருக்கின்றான் கி. பி. 1477-ல் தன் மகன் இளவரசனாக இருந்த காலத்தில் 'சுந்தரத்தோளநல்லூர்' என்ற ஊரைச்சூடிகொடுத்த நாச்சியாருக்குத் தானமாக அளித்திருக்கின்றான். அதற்குப்-பிறகு இவனது கல்வெட்டுக்கள் கிடைக்கவில்லை.

திருமாலிருஞ்சோலை நின்ற மாவலிவாணாதிராயன் என்றழைக்கப்பட்ட தன் தந்தை இறந்தபிறகு கி. பி. 1477-க்குப் பிறகு, சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயர் குலத்திற்கு வாரிசாக 'சுந்தரத்தோளுடையார் மழவராயர்,என்ற தன் பெயரை 'சுந்தரத்தோளுடையார் வாணாதிராயர் என்று மாற்றிக்கொண்டு பாண்டிய நாட்டின் வடபகுதியை விஜயநகர வேந்தர்க்குக் கீழ் தொடர்ந்து ஆண்டிருக்க வேண்டும் என்பதே பொருத்தமுடையதாகப்படுகிறது. சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் (கி.பி.1468-1488)

இவன் காலத்தில் இரண்டாம் விருபாக்கரும் (கி. பி. 1465-1485) சாளுவ நரசிம்மரும் (கி. பி. 1485-1490) விசயநகரப்பேரசின் வேந்தர்களாக விளங்கினார்கள். இவர்கள் விசயநகரப்பேரரசு முழுவதையும் கட்டிகாக்கும் வல்லமை

படைத்தவர்களாக விளங்கவில்லை. இது வாணாதிராயர்கள் ஆட்சி பாண்டியநாட்டில தொடர்ந்து தன்னிச்சையாக தழை பெற வாய்ப்பளித்தது. இதே காலத்தில் தென்பாண்டி நாட்டை அரிகேசரி பராக்கிரமபாண்டியனை அடுத்து ஆண்ட சடையவர்மன் குலசேகரபாண்டியனும் (கி. பி. 1419-1473) அழகப்பெருமாள் பராக்கிரம பாண்டியனும் (கி. பி. 1473-1506) சிறப்புமிக்க மன்னர்களாக விளங்கவில்லை. இவன் தன்னை 'பாண்டிய குலாந்தகன்'[83] என்று அழைத்துக் கொள்வதால் இவனுக்கும் இப்பாண்டியருக்கும் இடையே போர் நடைபெற்று அதில் இவன் வெற்றிபெற்றிருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறது.

இவனது கல்வெட்டுக்கள் கி பி. 1483 முதல் 1488 முடிய நெக்கோணம், குன்னத்தூர், மேட்டுப்பட்டி, ஸ்ரீவில்லிபுத்தூர் முதலிய இடங்களில் காணப்படுகின்றன.

| ஊர் | காலம் | மாவட்டம் |
|---|---|---|
| நெக்கோணம்[84] | கி. பி. 1483 | புதுக்கோட்டை மாவட்டம் |
| குன்னத்தூர்[85] | கி. பி. 1487 | மதுரை மாவட்டம் |
| மேட்டுப்பட்டி[86] | கி. பி. 1488 | அண்ணா மாவட்டம் |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[87] | ...... | காமராசர் மாவட்டம் |
| ஸ்ரீவில்லிபுத்தூர்[88] | ....... | காமராசர் மாவட்டம் |

சுந்தரத்தோளுடையான் என்பது திருமாலிருஞ்சோலை திருமொழியில் ஆண்டாள் திருமாலுக்குச்சூட்டும் பெயர்களில் ஒன்றாக வருகின்றது. அழகர்கோயில் அழகருக்கு இன்றும் இப்பெயர் உள்ளது. இவ்வழகர் மீது பற்றுக் கொண்ட திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயன் தன் மகனுக்கும் சுந்தரத்தோளுடையான் என்று பெயர் வைத்திருப்பதில் வியப்பொன்றுமில்லை

பிற்காலப்பாண்டியர் காலத்தில் கூட கண்டதேவன் சுந்தரத்தோளுடையான்[89] சுந்தரத்தோளுடையான் திரு

வனை அடைச்சான்[90] ஏறு சேவகன் சுந்தரத்தோளுடையான்[91] என்று சிலர் இப்பெயரினைக் கொண்டவர்களாக விளங்கியிருக்கின்றனர். அக்காலத்தில் ஸ்ரீவில்லிபுத்தூருக்கு அருகில் இருந்த விழுப்பனூர் பெருமாள்கோயில் 'சுந்தரத்தோள் விண்ணகர்' என்று அழைக்கப்பட்டிருக்கின்றது[92]

சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் பட்டப் பெயர்கள் பல பூண்டு விளங்கினான்

'மூவராயகண்டன்
ராசமீசுவர கண்டன்
மதியாதார் மணவாளன்
சமரகோலாகலன்
வீரகஞ்சுகன்
வேதியர் காவலன்
புவனேகவீரன்
பூபாலகோபாலன்
பட்டமானங்காத்தான்
மதுராபுரி மஹாநாயகன்
வீரபிரதாபன்'[93]

என்ற தந்தைக்குரிய பட்டப்பெயர்களோடு புதிதாக பின் வரும் சில பட்டப்பெயர்களைத் தனக்கென்று புனைந்து கொண்டு விளங்கினான்.

ராஜவிபாடன்
பராராஜதண்டதரன்
நவகண்டவரகண்டன்
சேதுமூலரக்ஷாதுரந்தரன்
மானபூஷணன்
ராஜபுஸ்கவன்
வழுதிசேகரன்
பாண்டியகுலாந்தகன்

கருடகேதநன்
கங்காகுலோதமன்
ராஜகுலஸர்ப்ப கருடன்
அழகர் தம் சிறுதந்தன்[94]

இவற்றில் காணப்படும் 'மாதபூஷணன்' என்ற பட்டப் பெயர் அரிகேசரி பராக்கிரம பாண்டியனுக்குரிய பட்டப் பெயராகும், சுந்தரத்தோளுடையான் இதனைத் தன் தந்தைகாலத்தில் இப்பாண்டியனோடு நடந்த போரில் கலந்து கொண்டு வெற்றி பெற்றதன் நினைவாக வைத்துக் கொண்டிருக்கலாம் 'வழுதிசேகரன் என்பது பாண்டியரைப் போலவே பட்டம் புனைந்து கொண்டு விளங்கியதைக் காட்டுகின்றது. 'சேதுமூலரக்சாதுரந்தரன்' என்பது பிற் காலத்தில் சேதுபதிகளுக்குரிய பட்டப்பெயராக விளங்கிற்று. இது மறவர் பகுதிகளான சேதுநாடும் இவனுக்குக்கீழ் தொடர்ந்து இருந்து வந்ததைக் காட்டுகின்றது. 'கருட கேதநன்' என்பதும் 'ராஜகுல ஸர்ப்பகருடன்' என்பதும் இவனது வைணவப்பற்றையும், வலிமையையும் காட்டும் பட்டப்பெயர்களாகும்.

தந்தையைப் போன்றே இவனும் அழகர்கோயில் அழகர் மீது அளப்பரிய அன்புபூண்டு விளங்கியிருப்பதை 'அழகர் தம் சிறுதத்தன்' என்ற இவனது பட்டப்பெயர் உணர்த்து கின்றது. இவனது தெக்கோணம் கல்வெட்டு 'சுபமஸ்து என்ற சொல்லோடு தொடங்கிஅடுத்து 'அழகர் திருவுள்ளம் என்ற சொற்றொடரோடு தொடர்ந்து செல்வதும் இக் கருத்தை வலியுறுத்துகின்றது.

தந்தையைப் போன்றே இவனும் 'புவனேகவீரன், 'சமரகோலாகலன்' என்ற பட்டப்பெயர்களை ஒருபுறமும் மற்றொருபுறம் கருடனையும் பொறித்த காசுகளை வெளியிட்டிருக்கவேண்டும்.

மகன் பிறப்பு முகம் கண்டது

இச்சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயனுக்கு மகன் ஒருவன் சகவருடம் 1405-ல் (கி. பி. 1483ல்) பிறந்தான். இவனுக்கு திருமாலிருஞ்சோலை நின்றான் என்ற தன் தந்தையின் பெயரையே பிறப்பு நாமமாகச் சூட்டினான். இம்மகன் பிறந்தவுடன் அவனது முகங்கண்ட முதல் நாள் பொழுதில் அவனது நலனுக்காக பட்டமானங் சேத்த வளநாட்டு பிரமதேயம் திருநெற்குன்றமான (நெக்க்காணம்) புவனேகவீரநல்லூரில் இருந்த எல்லாச்சமூகதினர்க்கும் அவ்வூரில்இருந்தநிலங்களைத் தானமாகஅளித்தான்[95] என்று நெக்கோணம் கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இறைப்பணியும் கலைப்பணியும்

சுந்தரத்தோளுடையானைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புக்கள் அதிகம் நமக்குக் கிடைக்கவில்லை. இதனால் இவன் செய்த இறைப்பணிகளைப் பற்றியும் கலைப் பணிகளைப் பற்றியும் அதிகம் அறிந்துகொள்ள இயலவில்லை. ஸ்ரீவில்லிபுத்தூரில் உள்ள ஆண்டாள்கோவிலின் அழகிய அர்த்தமண்டபம், கருவறை இவன்கட்டியது ஆகும்[96] இதன் முன்னர் உள்ள மகா மண்டபமும் இவனால் கட்டப்பட்டதே ஆகும்[97]

"சுபமஸ்து நாச்சியார் சூடிக் கொடுத்தருளிய நாச்சியார் மகாமண்டபம் சுந்தரத்தோளுடையார் ஸார்வ்வபௌம மகாபலி பாணாதிராஜா"

இக்கல்வெட்டு ஆண்டாள்கோவில் மகாமண்டபத்தின் தென்புறம் பொறிக்கப்பட்டுள்ளது[98]

இவ்வாணாதிராயன் காலத்தில் வாழ்ந்த அழகர் தெய்வச்சிலைப் பெருமாளென்பவனும் திருமாலிருஞ்சோலையை சார்ந்த தாசி அலங்காரவல்லியும் இப்பணிக்கு உதவியிருக்கின்றதை மேலே கண்ட கல்வெட்டிற்கு அருகில் பொறிக்கப்பட்டுள்ள

'அழகர் தெய்வச்சிலை
ப்பெருமாள் சதாசேவை'
'அலங்காரவல்லி
யார் திருமாலிருஞ்
சோலை (தா)ஸிசதா
சேவை

என்ற கலவெட்டு வாசகங்கள் உறுதிப்படுத்துகின்றன.[99]

**நடுகல்**

மதுரையிலிருந்து சிவகெங்கை செல்லும் வழியில் வரிச்சியூர் என்ற ஊர் உள்ளது. இவ்வூரின் தென்புறம் ஒருமைல் தூரத்தில் குன்னத்தூர் என்ற ஊர் அமைந்துள்ளது. இவ்வூர்ச் சிவன் கோவிலுக்கு அருகே ஒரு நடுகல் காணப்படுகின்றது. இந்நடுக்கல் சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் காலத்தில் கி. பி. 1487-ல் நாட்டப்பட்ட நடுகல்லாகும். இதில் ஒரு வீரன் மற்றொரு வீரனை வீழ்த்துவது போன்ற புடைப்புச் சிற்பம் காணப்படுகிறது. இந்த வாணாதிராயனின் பெயரையும் கல்நடப்பட்ட காலத்தையும் ஆண்டையும் மட்டுமே இதில் பொறிக்கப்பட்ட எழுத்துக்களின் மூலம் அறிந்துகொள்ள முடிகின்றது[100] மற்ற செய்திகளை அறியமுடியவில்லை. இவ்வாணாதிராயன் காலத்தில் இப்பகுதியில் நடந்த போரில் இவ்வூரில் வீரமரணம் அடைந்த வீரன் ஒருவனுக்காக இக்கல் நடப்பட்டிருக்கவேண்டும்.

**திருமலையன் திம்மரச்சிநாயக்கர்**

இவன் தொண்டைமண்டலத்தைச் சார்ந்தவன். இவ்

வாணாதிராயன் காலத்தில் இவ்வாணாதிராயனுக்குக் கீழ் ஆட்சிபுரிந்த குறுநிலமன்னன் ஆவான். மதுரை மாவட்டம் நிலக்கோட்டை வட்டத்தைச் சார்ந்த அணைப்பட்டி என்னும், ஊர் சோழவந்தானிலிருந்து மட்டப்பாறை வழியாக நிலக் கோட்டை செல்லும் வழியில் அமைந்துள்ளது. இவ்வணைப் பட்டிக்கு அருகே 'சித்தர்மலை' 'மகாலிங்கமலை' என்று அழைக்கப்படும் ஒரு சிறிய குன்று உள்ளது. இதன் உச்சியில் கருவறை அர்த்தமண்டபம் மகாமண்டபம் முதலியவற்றுடன். கூடிய சிவன்கோயில் ஒன்றுஉள்ளது. இங்குள்ள இறைவனை 'மகாலிங்கசுவாமி' என்று இங்குள்ள மக்கள் அழைக்கின்றனர் இக்கோயில் சுவரில் காணப்படும் கி பி.1488 ஆம் ஆண்டைச் சார்ந்த வாணாதிராயன் கல்வெட்டில் இத்திருமலை திம் மாச்சி நாயக்கன் குறிப்பிடப்படுகின்றான் இக்கோயிலுக்கு இவன் அளித்த தானத்தைப்பற்றி இக்கல்வெட்டு தெரிவிக் கின்றது[101]

சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் தந்தையைப்போன்று மிகுந்த சிறப்புடன் விளங்காவிடினும் தந்தைவிட்டுச் சென்ற பாண்டிநாட்டுபபகுதிகளைத் தொடர்ந்து கட்டிக்காத்துவந்தான். இவனைப்பற்றித் தெரிவிக்கும் கல்வெட்டுக்களில் மேட்டுப்பட்டி கல்வெட்டே காலத்தால் பிந்தியதாகும். கி, பி. 1488-க்குப் பிறகு இவன் தொடர்ந்து ஆட்சி புரிந்தானா இல்லையா என்பது ஐயத்திற்கு இடமாய் உள்ளது. இக்காலத்தைச் சார்ந்த இவன பெயர் பொறித்த கல்வெட்டுக்கள் எதுவும் கிடைக்கவில்லை.

## வாணாதிராயர்கள் (கி, பி. 1488-1515)

கி. பி. 1488-க்குப் பிறகு விசயநகர வேந்தர்களுக்குக் கீழ் இவர்கள் பாண்டிய நாட்டைத் தொடர்ந்து ஆட்சிபுரிய, விசயநகர வேந்தர்கள் இவர்களை அனுமதித்தார்களா என்ற ஐயம் எழுகின்றது. இரண்டாம் விருபாக்ஷர்க்குப்

(கி, பி. 1465–1485) பிறகு விசயநகரப் பேரரசில் பெரும் அரசியல் மாற்றங்கள் நிகழ்ந்தன. விசயநகரப் பேரரசில் சாளுவ வம்சம் என்ற புதிய வம்சமே பழைய வம்சத்தை ஒழித்துவிட்டு பதவிக்கு வந்தது. சாளுவ நரசிம்மர் (கி. பி. 1485-1490) இரண்டாம் விருபாக்சரிடமிருந்து அரியணை யைக் கவர்ந்து ஆட்சி நடத்தினார். நரசிம்மரின் மறைவிற்குப் பிறகு அரியணையேறிய அவரது மகன் திம்மாவிடமிருந்து அவரது அமைச்சர் நரசநாயக்கர். (கி.பி.1490-1503) விசய நகர ஆட்சிப்பொறுப்பைப் பறித்து தாமே ஆட்சி நடத்தினார். இக்காலத்தில் இவர் பாண்டிய நாடு உட்பட பல்வேறு பகுதி களின் மீதுபடையெடுத்துச் சென்று அவற்றைத்தனது நேரடி ஆளுகைக்குக் கீழ் கொண்டு வந்தார். நரசநாயக்கர் இறப் பிற்குப் பிறகு அவரது மகன் துளுவ வம்ச வீரநரசிம்மர் (கி. பி, 1503-1589) விசயநகர வேந்தரானார். அவருக்குப் பிறகு பெருவலிமைபடைந்த கிருஷ்ணதேவராயர் (கி. பி. 1509-1529) விஜயநகர வேந்தரானார்.[103]

விசயநகரத்தில் இக்காலத்தில் நடைபெற்ற இம்மாற்றங் கள் எல்லாம் கண்டிப்பாக வாணாதிராயர்களைப் பாண்டிய நாட்டில் தொடர்ந்து அமைதியாய் ஆட்சிபுரியவியலாது தடைப்படுத்தியிருக்கவேண்டும் புதிது புதிதாய் முளைத்த விசயநகர வேந்தர்களின் நம்பிக்கையை வாணாதிராயர்கள் பெற முடியாது தவித்திருக்கவேண்டும். இவர்கள் இக்காலத் தில் பாண்டியநாட்டின் எந்தப்பகுதியிலிருந்து ஆட்சி நடத் தினார்கள் என்பது தெரியவில்லை. கிருஷ்ணதேவராயா விசயநகர வேந்தராகஅரியணையேறிய சில ஆண்டுகளுக்குப் பின்னர் வாணாதிராயர்கள் பாண்டியநாட்டில் மீண்டும தலை தூக்கலாயினர். மதுரையில் நாயக்கர் ஆட்சி வேரூன்றும் வரை இவ்வாழ்வு நீடித்தது.

கிருஷ்ணதேவராயர் ஆட்சிக்காலத்தில் கி பி. 1515-ல் இருந்து கி பி, 1533 முடிய வாழ்ந்த, 'இறந்தகாலம் எடுத்த

சுந்தரத்தோளுடையான் மாவலி வாணாதிராயன்' என்ற வாணாதிராயனின் கல்வெட்டுக்கள் பல மறவர்நாட்டுச் சீமையில் காணப்படுகின்றன.

## இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மகாவலி வாணாதிராயன் (கி. பி. 1515-1533)

கி. பி. 1488-க்குப் பிறகு வாணாதிராயர்களின் அரசியலில் ஒரு வீழ்ச்சி ஏற்பட்டது. அதன் பிறகு கி. பி. 1515-ம் ஆண்டிலிருந்து மீண்டும் தலைதூக்கினார்கள். இத்தாழ்வைப் போக்கி வாணாதிராயர் குலத்திற்கு வாழ்வைத் தந்தவன் இந்த 'இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான்' ஆவான். இக்காரணத்தினால் இவன் தன்னை இறந்தகாலம் எடுத்தவன் என்று அழைத்துக்கொண்டான். இவனுக்கு முன்னர் ஆண்ட சுந்தரத்தோளுடையான் மாவலி வாணாதிராயனிடமிருந்து தன்னை வேறு படுத்திக் காட்டவும் 'இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மாவலி வாணாதிராயன்' என்று தன்னை அழைத்துக் கொண்டான். இவனுக்கும் அவனுக்கும் உள்ள உறவு என்ன?

நெக்கோணம் கல்வெட்டு (கி. பி. 1483) சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயனுக்குத் 'திருமாலிருஞ்சோலைநின்றான்' என்ற பெயரில் ஒரு மகன் பிறந்திருந்ததைத் தெரிவிக்கின்றது.[103] கி.பி. 1488-க்குப் பிறகு ஏற்பட்ட குழப்பத்தில் இவன் என்ன ஆனான் எங்கு போனான் என்பது தெரியவில்லை. இவனே கி. பி 1515-ல் தன் பிறந்த நாமத்தைவிட்டு விட்டு தந்தையின் பெயரினைச் சூட்டிக் கொண்டு 'இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன்' என்ற பெயரில் அரியணையேறி இருக்கவேண்டும். காளையார் கோவில் கல்வெட்டு ஒன்று இவனை 'திருமாலிருஞ்சோலை நின்ற மாவலிவாணா-

திராயர்' என்று குறிப்பிடுவது இதனைத் தெளிவாக்குகின்றது[104] இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையானும் திருமாலிருஞ்சோலை நின்ற மாவலிவாணாதிராயரும் ஒருவர் என்ற உண்மையை உணர்த்துகின்றது.

இவனது கல்வெட்டுக்கள் மறவர்நாட்டுச் சீமையில் பின்வரும் ஊர்களில் காணப்படுகின்றன.

| ஊர் | காலம் | மாவட்டம் | |
|---|---|---|---|
| திருப்புல்லாணி[105] | கி. பி. 1515 | இராமநாதபுரம் | மாவட்டம். |
| திருப்புல்லாணி[106] | கி. பி. 1518 | ,, | ,, |
| திருப்புல்லாணி[107] | கி. பி. 1518 | ,, | ,, |
| திருப்புல்லாணி[108] | கி. பி. 1528 | ,, | ,, |
| காளையார் கோவில்[109] | கி. பி. 1530 | ,, | ,, |
| காளையார் கோவில்[110] | கி. பி. 1532 | ,, | ,, |
| தேவிபட்டினம்[111] | கி. பி. 1533 | ,, | ,, |
| தேவிபட்டினம்[112] | கி. பி. 1533 | ,, | ,, |

வாணாதிராயர் ஆட்சி வடபாண்டி நாடு முழுவதும் பரவியிருந்த நிலைமாறி மிகவும் சுருங்கிப் போய் மறவர் நாட்டில்' மட்டும் விளங்கியதை இக்கல்வெட்டுப் பட்டியல் காட்டுகின்றது. இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் இப்பகுதிகளுக்கு அரசனாக விளங்கினான் என்பதை 'சுந்தரத்தோளுடைய மாவலிவாணாதிராயர் பிருதிவி-ராஜ்யம் பண்ணி அருளா நின்ற' என்ற கல்வெட்டு வாசகம் ஒன்று நமக்குத் தெளிவாகத் தெரிவிக்கின்றது,[113]

இக்கல்வெட்டுக்களில் இவனது பெயர் பின்வருமாறு பலவாறாகக் குறிப்பிடப்படுகின்றது.

1. சுந்தரத்தோளுடையான் மகாபலி வாணாதிராயர் கி.பி. 1515-திருப்புல்லாணி[114]

2 இறந்தகாலம் எடுத்த மகாபலி வாணாதிராயநாயக்கர் கி. பி. 1518-திருப்புல்லாணி[115]

3. மகாபலி வாணாதிராயநாயக்கர் கி. பி. 1518-திருப்புல்லாணி[116]

4. இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மகாபலி வாணாதிராயர்-கி. பி. 1530-காளையார் கோவில்[117]

5. திருமாலிருஞ்சோலை நின்ற மகாபலி வாணாதிராயர் கி. பி. 1532-காளையார் கோவில்[118]

இவன்
'மகாமண்டலேஸ்வரன்
மூவராயகண்டன்
புவனேக வீரன்
சமரகோலாகலன்
பட்டமானங்காத்தான்
ஸத்தியபாலன்
சேதுமூலபுரந்தரன்[119]
'சேதுமூல இலங்காபுரந்தரன்
பூபாலகோபாலன்[120]

என்ற தனது முன்னோர்களது பட்டப்பெயர்களையே பூண்டு விளங்கியிருக்கின்றான். இவற்றில் 'ஸத்தியபாலன்' என்பது மட்டுமே இவனுக்கு உரிய மற்ற வாணாதிராயர்களுக்கு இல்லாத பட்டப் பெயராகும்.

இவனது முன்னோர்களது கல்வெட்டைப் போலவே திருப்புல்லாணியில் காணப்படும் இவனது கல்வெட்டு 'அழகர் திருவுள்ளம்' என்று முடிகின்றது.[121] இது இவன்

தன் முன்னோரைப் போலவே அழகரிடத்து அன்பு கொண்டு வைணவனாக விளங்கியதைக் காட்டுகின்றது.

## இறைப்பணியும் கலைப்பணியும்

இவ்வாணாதிராயன் திருப்புல்லாணி கோயில் தெய்வச்-சிலைப் பெருமாளுக்கு 'இறந்தகாலம் எடுத்தான் சந்தி' என்ற ஒருசந்தியை ஏற்படுத்தினான். அதனை நடத்துவதற்காக இமயனீசுரத்தில் இருந்த குணப்பன்ஏந்தல் நிலங்களை நிவந்தமாக அளித்தான்.[122] இதே கோயிலில் உள்ள இவனது சிதைந்து போன மற்றொரு கல்வெட்டு இவன் இக்கோயிலுக்கு அளித்த கொடை ஒன்றினைப் பற்றித் தெரிவிக்கின்றது.[123]

காளையார்கோவில் திருக்கானப்பேருடைய நாயனார் காளையார் சோமநாதருக்கு திருப்பணிமாற்று உள்ளிட்டு வேண்டும் நித்தியநிவந்தங்களுக்காக 'சுந்தரத்தோளுடை-யான் சந்தி' என்று தன் பெயரில் சந்தி ஒன்றினை ஏற்படுத்-தினான். இதற்காக திருத்தியூர்முட்டத்தைச் சார்ந்த வெற்றியூர், மேலையூர், கீழையூர் பகுதிகளில் இருந்த நிலங்கள் தானமாக அளிக்கப்பட்டன.[124]

பாண்டிய நாட்டில் விசயநகர வேந்தர் காலத்திற்கு முன்பிருந்த மகமதியர் ஆட்சிகாலத்தில் காளையார்கோவில் திருச்சுற்றில் இருந்த செல்லப்பிள்ளையார் கோவில் இடிந்து போய்திருப்பணி ஒன்றும் இல்லாமல்கிடந்தது. இவ்வாணாதிராயர்காலத்தில் ஏழகப்பெருந்தெருவானவீரபாண்டியபுரத்து கழனிவாசலுடையான் அடைக்கலங்காத்தார், சித்புரநாதர் ஆகியோர் சேர்ந்து பிள்ளையாருக்குப் புதிதாகத் திருமேனி ஒன்றினைச் செய்து வைத்தனர். இடிந்துபோன கோயிலை எடுத்துக் கட்டினர். அக்கோயிலுக்குப் பூசைக்கு வேண்டும் பொருள் செலவிற்காக நிலவந்தங்கள் பலவற்றை அளித்-

தனர்[125] அச்செல்லப்பிள்ளையார் கோயில் இன்று இக்காளையார் கோவில் இறுதித் திருச்சுற்றில் தென்மேற்கு மூலையில் 'செல்லப்பிள்ளையார் கோயில்' என்ற பெயரில் கிழக்குப் பார்த்து அமைந்துள்ளது. இதுபோன்று மகமதியார் காலத்தில் இடிந்து போய் கிடந்த காளையார்கோயில் திருச்சுற்றும், திருமடைப்பள்ளியும் இவ்வாணாதிராயனின் ஆட்சிக்குச் சற்றுமுன்பு கி. பி. 1511-ல் எடுத்துக் கட்டப்பட்டது. வாணாதிராயர் ஆட்சி மகமதியர் ஆட்சியால் வாழ்விழந்த வைதீகமதம் மீண்டும் தழைக்க வழிவகுத்தது என்பதை இவை காட்டுகின்றன.

இச்சுந்தரத்தோளுடையான் தந்த தர்மதானப்பட்டயத்தின்படி தேவிபட்டனத்து 'கடலடைத்த பெருமாள்' கோவிலுக்கு ஏகாந்த ராம நம்பி சாகளூர் சுப்பிரமணியன் திருவேங்கடமுடையான் சில நிவந்தங்களை அளித்ததைத் தேவிபட்டனத்து கல்வெட்டு ஒன்று தெரிவிக்கின்றது.[126]

ஆவலப்பநாயக்கர் கலங்காததண்டநாயக்கர்

இச்சுந்தரத்தோள் மாவலி வாணாதிராயனுக்குக் கீழ் குறுநில மன்னனாக இருஞ்சிறை வளநாட்டு பண்ணையார் கோட்டையை ஆண்டவன். இவ்வாணாதிராயனை 'நமக்கு ஆண்டவர் இறந்தகாலம் எடுத்த மஹாபலிவாணாதிராய நாயக்கர் என்று குறிப்பிடுகின்றான்[127]

அந்தம்பரகண்டன்

உரிகோலசுருத்தாணன்

பாஷைக்குத் தப்புவராயகண்டன்

சேனைமாவலிதாஸன்

என்று பலபட்டப்பெயர்கள் இவனுக்கு இருந்திருக்கின்றன[128] 'சேனை மாவலிதாஸன்' என்ற இவனது பெயர் வாணாதிராயனிடம் கொண்ட பற்றினையும், அடக்கத்தையும்காட்டு

கின்றது. இவன் வாணாதிராயனின் படைத்தலைவருள் ஒருவனாகச் சிறந்து விளங்கியிருக்க வேண்டும் என்பதையும் காட்டுகின்றது.

இவன் திருப்புல்லாணி தெய்வச்சிலைப்பெருமாளுக்குத் திருவிடையாட்டமாக வடதலை செம்பினாட்டுப் பெருங்கிளி நல்லூர்க்குத் தென்புறத்தில் இருந்த மடைகழிஏந்தல்பள்ளன் குளமான தெய்வச்சிலைநல்லூரை அளித்திருக்கின்றான்[129]

## அதிகாரிகள்

இவ்வாணாதிராயனின் கல்வெட்டுக்கள் மூலம் அவனது அரசியல் அதிகாரிகள் பெயர்கள் சிலதெரியவருகின்றன. திருவீதிராயம(ர) வலிங்கராயநம்பி, திருப்பரங்குன்றம் ஆண்ட பிள்ளை திருமேற்றளி சேதிராயன், சீரங்கள் மணவாள தீநபாதராயர், இளையநாயன் பூமன் ஆகியோர் காளையார் கோவிலில் உள்ள இவ்வாணாதிராயனின் தன்மசாதன ஆவணத்தில் கையெழுத்திட்டுள்ளனர்.[130] மேலும் இங்குள்ள மற்றொரு ஆவணத்தில் எழகப்பெருந்தெருவாணவீரபாண்டிய புரத்து கழனிவாசலுடையான் அடைக்கலங்காத்தார், சிதம்பரநாதன் ஆகியோர் குறிப்பிடப்பட்டுள்ளனர்.[131]

## வாணர் அரசியல் (கி. பி. 1378-1533)

வாணாதிராயர்கள் பாண்டிய நாட்டில் மிகச்சிறந்து விளங்கிய காலம் இவ்விசயநகரவேந்தர் காலமேயாகும். பாண்டியர்காலத்தில் பாண்டியர்களுக்கு அதிகாரிகளாகப் பணிபுரிந்த வாணாதிராயர்கள் இக்காலத்தில் முடிசூடி ஆட்சிநடத்தும் பேறு பெற்றார்கள். ஆனால் தனியாணை நடத்தும் சக்கரவர்த்திகளாக இவர்கள் விளங்கவில்லை. விசயநகர வேந்தர்களுக்கு அடிபணிந்த சிற்றரசர்களாக பாண்டிய நாட்டின் வடபகுதியிலிருந்து ஆட்சிநடத்தினார்கள் சில சமயங்களில் விசயநகரப்பேரரசில் வலிமை வாய்ந்த

பேரரசர்கள் இல்லாத காலங்களில் மட்டும்மிகுந்த சுதந்திரத்துடன் சுயாட்சி படைத்தவர்களாக விளங்கினார்கள். அவ்வேளைகளில் தங்களது தனித்தன்மையை நிலைநாட்டிக் கொண்டார்கள்,

அரசனும் இளவரசனும்

அரசனே நாட்டில் அதிகாரம் படைத்தவனாக விளங்கினான். தந்தைக்குப்பின் பட்டதரசியின் மகன் ஆட்சிக்கு வந்தான், பட்டத்தரசியும் நாட்டில் மிகுந்த செல்வாக்குடன் விளங்கினாள். ஸ்ரீவில்லிபுத்தூரில் செங்கநாச்சியார் என்ற வாணர்குலதேவி தானே ஒரு சாசனத்தை நேரடியாக வெளியிட்டிருப்பது அவளது சிறப்பையும் பெருமையையும் பெண் குலத்திற்கு வாணர்கள் அளித்த உரிமையினையும் காட்டுகின்றது. இளவரசர்கள் ஆட்சிப் பீடத்தில் ஏறும்போது தன் பிறந்த நாமத்தைதவிட்டு வேறொரு பெயர் பூண்டு ஆட்சிப் பீடத்தில் ஏறினார்கள். சுந்தரத்தோளுடையான் மழவராயன் என்பவன் தன் பிறந்த நாமத்தை மாற்றிக்கொண்டு சுந்தரத் தோளுடையான் மாவலி வாணாதிராயன் என்ற பெயர் பூண்டு ஆட்சிபுரிந்திருக்கின்றான். இக்காலத்தில் வாழ்ந்த வாணாதிராயர் பெயர்கள் இவர்களது வைணவப்பற்றைக் காட்டும் வகையில் வைணவப் பெயர்களாகவே உள்ளன.

அரசனது பட்டத்தரசி அல்லாத மற்றமனைவியரிடத்துப் பிறந்த பிள்ளைகள் நாட்டில் அமைதியை ஏற்படுத்த ஆங்காங்கே இருந்த சிற்றூர்களுக்கும் பேரூர்களுக்கும் தலைவராய் இருந்துநாட்டின் அமைதியைக் காத்துவந்தார்கள். காரையூர் கல்வெட்டு ஒன்று வாணாதிராயா பிளளை ஒருவனுக்குப் பாடிக்காவல் பிரமாணம் செய்து வைத்ததைத் தெரிவிக்கின்றது.[132]

அரசசின்னமும், கொடியும்

பாண்டிய நாட்டில் இருந்த வாணாதிராயர்களுக்கு பெருமாளின் பெரிய திருவடியான கருடனே அரசசின்னமாக விளங்கிற்று. அக்கருடனே இவர்களது கொடியிலும் பொறிக்கப்பட்டு இவர்களதுகொடி 'கருடக்கொடி' என்று அழைக்கப்பட்டது. 'கொடியில் சிறந்தது கருடக்கொடி அக்கருடக்கொடி புலி, வில்,கயல் பொறித்த மூவேந்தர் கொடியைக்காட்டிலும் உயர்ந்தது' என்ற பொருளில் அமைந்துள்ள பாடல் ஒன்று கல்வெட்டில் காணப்படுகின்றது.

சென்னிப் புலிக்கொடியும் தென்னர் கயல் கொடியும்
பின்னும் கழல் பிறையோன் விற்கொடியும்–மன்னும்
வருகைக் கொடைத் திருமால் மாவலி வாணந்தன்
கருடக்கொடியே கொடியாம் காண்.[123]

இவர்களது அரசசின்னமாகிய கருடன் இவர்கள் வெளியிட்ட காசுகளின் பின்புறமும் பொறிக்கப்பட்டது. வாணாதிராயன் ஒருவன் 'கருடகேதனன்' என்று தன்னை அழைத்துக்கொண்டிருக்கின்றான். இவ்வாணர்களின் தலைநகரான திருமாலிருஞ்சோலைப் பெருமாள்கோயிலில் கருடன் பொறித்த முத்திரை ஒன்று உள்ளது. கோயிலில் கதவைச் சாத்திய பின்பு பூட்டுகளின் மீது களிமண்ணை அப்பி அதன் மீது கருடன் பொறித்த இம்முத்திரையோடு காளை பொறித்த முத்திரையையும் சேர்த்துப் பூட்டிற்கு முத்திரை வைக்கும் வழக்கம் இன்றும் இருந்து வருகின்றது. கருட முத்திரையிடும் இவ்வழக்கம் இவ்வாணாதிராயர்கள் காலத்திலிருந்து தொடங்கிய வழக்கமாக இருக்கவேண்டும். வாணாதிராயர்களுக்குப் பிறகு நாயக்கர் ஆட்சி இப்பகுதியில் ஏற்பட்டது. அவர்கள் காலத்திலிருந்து காளைமுத்திரையை

இக்கருட முத்திரையோடு சேர்த்து இடும் வழக்கம் வந்திருக்கவேண்டும்.

குறுநிலமன்னர்கள்

விசயநகர வேந்தர்களுக்குக் கீழ் அரசர்களாக விளங்கிய இவ்வாணாதிராயர்க்குக் கீழ் சில குறுநிலமன்னர்கள் இருந்திருக்கின்றார்கள். அவர்கள் தாங்கள் இருந்த பகுதிக்குத் தலைவர்களாய் விளங்கி வாணாதிராயர்களுக்கு வேண்டிய உதவியை செய்து வந்திருக்கின்றனர். மதுரை மாவட்டத்தில் உள்ள மேட்டுப்பட்டியில் திருமலையான் திம்மாச்சி நாயக்கனும்[134] இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள மண்ணையர் கோட்டையில் ஆவலப்பநாயக்கனும்[135] இருந்து இவர்களுக்குக் கீழ் ஆட்சிபுரிந்திருக்கின்றனர். மண்ணையர் கோட்டை நாயக்கன் தனக்குத் தலைவனாய் இருந்த வாணர்குல அரசனை 'நமக்கு ஆண்டவர்' என்று அழைத்துக்கொண்டு 'மாவலிதாஸன்' என்று பட்டப்பெயரும் பூண்டு மாவலி வாணனுக்கு சேனைத்தலைவனாய் பணிபுரிந்திருக்கின்றான்.[136]

அரசியல் அதிகாரிகள்

மன்னனது உறவினர்களில் பலர் அரசியல் அதிகாரிகளாக விளங்கியிருக்கின்றனர். ஸ்ரீவில்லிபுத்தூர் கல்வெட்டு ஒன்றில் 'திருமந்திரஓலைநாயகம்' ஸ்ரீரங்கநாதப்பிரியன் என்ற ஓர் அரசியல் அதிகாரி குறிப்பிடப்படுகின்றான்.[137] விசயநகரவேந்தர் காலத்தில்வாழ்ந்த இவ்வாணாதிராயர்கள் கல்வெட்டுக்கள் இக்காலத்தில் இருந்த அரசியல் பதவிகள் பற்றி அறிய போதுமான குறிப்புக்களை நமக்குத் தரவில்லை.

இக்காலத்தில் இருந்த வாணாதிராயர்கள் அரசு மிகுந்த வலிமை வாய்ந்த அரசாக இருக்கவில்லை. இதனால்

ஆங்காங்கே இருந்த அரசியல் தலைவர்கள் அதிகாரத்தைப் பகிர்ந்துகொள்வதில் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டதையும், பின்னர் சமாதானப்படுத்தப்பட்டதையும் குடுமியான் மலைக் கல்வெட்டு ஒன்றும்[138] பூவாலைக்குடிக் கல்வெட்டு ஒன்றும்[139] தெரிவிக்கின்றன.

குடுமியான்மலைக்கல்வெட்டு கம்பணர் காலத்தில் அரசியல்தலைவர்களுக்கிடையேநடந்தசண்டை ஒன்றினைப் பற்றித் தெரிவிக்கின்றது. கோனாட்டு பகைத்தலைப்பாடி காவலான கீழைக்குறிச்சி ஊராளிகளில் 'வழித்துணையான மாவலிவாணாதிராயன்' சோழக்கோன் பறையர் மகன் சூருண்டாரும் சேர்ந்து நெருஞ்சிக்குடி என்ற ஊரில் இருந்த பள்ளர்களைத் துன்புறுத்தி அவர்களது செல்வத்தை அழித்து அவர்களைப் பிடித்துக்கொண்டு போனார்கள். இதனால் நெருஞ்சிக்குடி ஊரார் பறம்பையூர் செருந்நாநம்புசெய்வார் பாண்டியனார் மகன் வன்னியர் திருச்சிராப்பள்ளி உடையார் உதயப்பெருமாள் ஆகியோர் உதவியைநாடினர். இதனால் தாற்கும் சிற்றன்னவாசல் செங்குளத்திற்கு அருகே போர் மூண்டது. அப்போரில் நம்புசெய்வார் மகன் திருச்சிராப்பள்ளி உடையாரும் மாவலிவாணாதிராயர் 'மச்சுனன் சிலம்பனும்' இறந்து போனார்கள். அப்போருக்குப் பின்னர் அவர்களுக்கிடையே இருந்த பகைநீடித்தது கம்பணன் ஆட்சிக்குப்பிறகு இவர்கள்தங்கள் பகைதீர்ந்து செய்துகொண்டஒப்பந்தத்தை-யேகுடுமியான்மலைக்கல்வெட்டு தெரிவிக்கின்றது. இப்பெரும் போருக்கும், நீண்டநாட்கள் இவர்களுக்குள் பகை தீராது நின்றமைக்கும் காரணம் வாணாதிராயர்கள் முழுஅதிகாரம் படைத்த வலிமைவாய்ந்த அரசர்களாக ஆரம்பகாலத்தில் விளங்கவில்லை என்பதேயாகும்.

பூவாலைக்குடிக் கல்வெட்டு வாணாதிராயர்கள் படிப்-படியாக வளர்ந்து நிலையான ஆட்சிப்பொறுப்பைப் பெற்று

சற்று வலிமைவாய்ந்த அரசனாக விளங்கிய திருமாலிருஞ்சோலை நின்றான் காலத்தில் அரசியல் தலைவர்களுக்கிடையே நடைபெற்ற சச்சரவு பற்றித் தெரிவிக்கின்றது. பஞ்சவராயர், நரசிங்கத்தேவர், சோழக்கோனார், பல்லவராயர் முதலிய அரசியல் அதிகாரிகளுக்கிடையே வலங்கை, இடங்கை தனத்தைப் பகிர்ந்துகொள்வதில் தகராறு ஏற்பட்டது. பின்னர் அந்தத் தகராறினை அரசனது ஆணைப்படி சிலதலைவர்களும் சில கிராமச்சபையாரும் சேர்ந்து தீர்த்து வைத்ததைக் காட்டுகின்றது.

### வாணர்கால நாட்டுப்பிரிவுகள்

பாண்டியநாடு இக்காலத்தில் மண்டலம், சீர்மை, நாடு கூற்றம், பற்று என்று பலபிரிவுகளைக் கொண்டு விளங்கியது. சீர்மை, பற்று என்ற நிலப்பிரிவுகளை முற்காலப்பாண்டியர் கல்வெட்டுக்களில் காண்பது அரிது, ஒருசில இடங்களில் மட்டும் பற்று என்ற பிரிவு பயன்படுத்தப்பட்டுள்ளது. சீர்மை என்ற நாட்டுப்பிரிவு இவ்வாணாதிராயா காலத்தில் பாண்டிய நாட்டிற்கு வந்திருக்கவேண்டும். 'சீர்மை' என்ற சொல் விசயநகரவேந்தர் கல்வெட்டுக்களில் அதிகமாகக் காணப்படும் நாட்டுப்பிரிவின் பெயராகும். 'பற்று' என்பது தொண்டை நாட்டில் அதிகமாகக் காணப்படும், இது நாட்டை விட மிகச்சிறிய நிலப்பிரிவைக் குறிக்கவும் நாட்டை விடப்பெரிய நிலப்பரப்பைக் குறிக்கவும் வழங்கியது பாண்டியநாடு முழுவதும் பாண்டிமண்டலம் என்று அழைக்கப்பட்டது.[140] வாணாதிராயர்களது ஆட்சியின் ஆரம்பகாலத்தில் மதுரையைச் சுற்றியிருந்த பகுதி மட்டும் மதுரை மண்டலம் என்றும், உறங்காவில்லிதாஸன் ஆன மஹாவலிவாணாதிராயர்சீர்மை என்ற மதுரை மண்டலம்' என்றும் அழைக்கப்பட்டிருக்கின்றது[141] இதனால் சீர்மையும் மண்டலமும் ஒரே அளவுள்ள நிலப்பிரிவாக இக்காலத்தில் கருதப்பட்டது என்று கொள்ளலாம்.

புதுக்கோட்டைப் பகுதி பட்டமானங்காத்த மண்டலம் என்று அழைக்கப்பட்டிருக்கின்றது.[142] பட்டமானங்காத்தான் என்பது வாணாதிராயனின் பட்டப்பெயராகும்.

முட்டநாடு[143], பொன்னமராவதிநாடு[144], கானநாடு[145], வடதலைச்செம்பிநாடு[146] முதலிய நாடுகளும் வீரநாராயண வளநாடு[147] விருதராஜபயங்கரவளநாடு[148] கேரளசிங்கவள நாடு[149] மதுரோதையவளநாடு[150], இருஞ்சிறைவளநாடு[151], முதலிய வளநாடுகளும் மிழலைக்கூற்றம்[152] திருக்கானப்பேர் கூற்றம்[153] முதலிய கூற்றங்களும் முட்டம் எனற பெயரில் கீழைத்திருத்தியூர் முட்டமும்[154] இவர்கள் கல்வெட்டுக்களில் குறிப்பிடப்படுகின்றன. பற்று என்ற பெயரில் தேனூர்ப் பற்றும்[155] குராயூர்ப்பற்றும்[156], திறளில்பற்றும்[157] இவாகளது கல்வெட்டுக்களில் குறிக்கப்பெறுகின்றன.

நாடும். வளநாடும் ஒரே அளவைக் குறிக்கும் நிலப் பிரிவாக இருந்திருக்கின்றன. விருதராசபயங்கரவளநாடு 'கானநாடான விருதராஜ பயங்கர வளநாடு' என்று ஒரு கல்வெட்டில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது[158] நாடுகளையும் கூற்றங்களையும், தன்னகத்துக்கொண்டு விளங்கிய பெரு நிலப்பரப்பு, 'வளநாடு'[159] என்ற பெயரிலும் இக்காலத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கின்றது. திருப்பத்தூர் வட்டத்திலுள்ள பெருச்சிக்கோயில்பகுதி கேரளசிங்கவளநாட்டில் அடங்கி யிருந்தது.[160], கேரளசிங்கவளநாடும், மதுரோதையவள நாடும் இருஞ்சிறைவளநாடும் பாண்டியர்காலத்திலிருந்தே இருந்துவந்த வளநாட்டுப் பிரிவுகளாகும்.

திருத்தியூர் முட்டம், மிழலைக்கூற்றம்,[161] திருகானப் பேர் கூற்றம்[162], என்ற நிலப்பிரிவுகளும் 'பாண்டியர் காலத்தி லிருந்தே தொன்றுதொட்டு பாண்டிநாட்டில் வழங்கி வந்திருக்கின்றன.

குராயூர்ப்பற்றும், திறளில்பற்றும், வீரநாராயணவள நாட்டில் இருந்தன[163] தேனூர்ப்பற்று பொன்னமராவதி நாட்டில் இருந்தது.[164]

மண்டலங்கள் :

1. பாண்டிமண்டலம் — பாண்டியநாடு முழுவதும்.
2. (வாணாதிராயர் சீர்மை ஆன) மதுரை மண்டலம் — மதுரைப்பகுதி
3. பட்டமானங்காத்த மண்டலம் — புதுக்கோட்டைப்பகுதி

வளநாடுகள் :

1. வீரநாராயண வளநாடு (மதுரை மாவட்டம்)

ஊர்கள் : குராயூர்ப்பற்றில் — சொக்கன் ஏந்தல் ஆன சுந்தரத்தோளநல்லூர்.

திறளில்பற்றில் - மாங்குடி ஆன சுந்தரத்தோளநல்லூர், சமரகோலாகலநல்லூர்புவனேகவீரநல்லூர்.

2. கானனாடான விருதராஜபயங்கரவளநாடு : (புதுக்-கோட்டைப்பகுதி)

ஊர் : திருநெற்குன்றமான (நெக்கோணம்) புவனேகவீர-சதுர்வேதிமங்கலம்

3. கோளசிங்கவளநாடு : (திருப்பத்தூர், சிவகெங்கை வட்டங்கள்)

ஊர் : கீழைத்திருத்தியூர் முட்டத்து — வெற்றியூர், மேலையூர், கீழையூர்

4. மதுரோதைய வளநாடு : (மதுரை முகவை மாவட்டப் பகுதி)

ஊர் : திருப்பரங்குன்றம்.

5. இருஞ்சிறைவளநாடு : பழைய முகவைமாவட்டம் தென் கிழக்குப்பகுதி

ஊர் : மண்ணையர்கோட்டை

நாடுகள் :

| நாடு | ஊர் | பகுதி |
|---|---|---|
| 1. முட்டநாடு | திடியன் | உசிலம்பட்டி வட்டம், மதுரை மாவட்டம், |
| 2. பொன்னமராவதி நாடு | ஏனாதியான வீரகஞ்சுகநல்லூர் | புதுக்கோட்டை மாவட்டம், |
| 3. வடதலைச் செம்பிநாடு | இயமனீசுரம் . மடைகழிஏந்தல் பெருங்கிளிநல்லூர் தெய்வச்சிலைநல்லூர் | முகவை மாவட்டம். |

கூற்றங்கள் :

| கூற்றம் | ஊர் | பகுதி |
|---|---|---|
| 1. திருக்கானப்பேர் கூற்றம் | திருக்கானப்பேர் | காளையார்கோவில் பகுதி முகவை மாவட்டம் |
| 2. மிழலைக்கூற்றம் | | புதுக்கோட்டை, அறந்-தாங்கிப்பகுதியில் வெள்ளாற்-றிற்கு தெற்கேயும் பாம்பாற்றுக்கு வடக்கேயும் உள்ள பகுதி |

பற்றுக்கள்

| பற்று | நாடு | பகுதி |
|---|---|---|
| 1. தேனூர்ப்பற்று | பொன்னமராவதிநாடு | புதுக்கோட்டை மாவட்டம் |

2. குராயூர்பற்று — வீரநாராயண வளநாடு — மதுரை மாவட்டம்

3. திறளில்பற்று—வீரநாராயண வளநாடு—மதுரை ,,

ஊர்கள்

மண்டலங்களும் வளநாடுகளும் வாணாதிராயர்கள் பெயரைப்பெற்று விளங்கியதைப் போன்று பாண்டியநாட்டில் பல ஊர்கள் இவர்களது பட்டப்பெயர்களைக் கொண்டு விளங்கின ஏனாதி என்ற ஊர் வீரகஞ்சுகநல்லூர் என்றும் சொக்கன் ஏந்தல் என்ற ஊரும் மாங்குடி என்ற ஊரும் சுந்தரத்தோளநல்லூர் என்றும் பெயர் மாற்றம் பெற்று விளங்கின. இவை தவிர சமரகோலாகலநல்லூர், புவனேகவீரநல்லூர் என்ற பெயரில் வீரநாராயண வளநாட்டில் வாணாதிராயர்களின் பட்டப்பெயர்களைப் பெற்று சில ஊர்கள் விளங்கியிருக்கின்றன.

வாணாதிராயர்கள் ஆட்சிசெய்து மறைந்ததை நினைவூட்டும் வகையில் இன்னும் சில ஊர்கள் பாண்டியநாட்டில் அவர்கள் பெயரைத தாங்கி நிற்கின்றன. விராலிமலைக் கருகில் வாணத்துராயன்பட்டி என்ற ஊர் உள்ளது. சிவகங்கை வட்டத்தில் வாணக்கருப்பு மாவலிக்கோட்டை. உறங்கானபட்டி, உறங்காபுரி, திருமாலிருஞ்சோலை என்ற ஊர்கள் உள்ளன. புதுக்கோட்டை மாவட்டத்தில் வாணத்துராயன் கோட்டை என்ற ஊர் இருக்கின்றது.

அளவைகள்

பாண்டியர் காலத்தில் இருந்த முகத்தல், நீட்டல், நிறுத்தல், முதலிய அளவைப் பெயர்கள் இவ்வாணாதிராயர் காலத்திலும் தொடர்ந்து வந்திருக்கின்றன. அங்குலம், கோல் போன்ற சில அளவுகள் வாணாதிராயர்களின் பெயரைக்

கொண்டு விளங்கின. அழகர்கோவிலில் 'திருமாலிருஞ்சோலை மாவலிவாணாதிராயன் மாத்ராங்குலம்' என்ற அங்குலமும்[165], வாணாதிராயன்கோல் என்ற கோலும்[166] வழக்கில் இருந்திருக்கின்றன.

## வரிகள்

மாவடை, மரவடை, பட்டடைப்பதி[167] ஆன்அமஞ்சி ஊதியம்[168], பாடிக்காவல்[169] பாசிப்பாட்டம், வெட்டிப்பாட்டம், பஞ்சுபீலி, சந்திவிக்கிரபேறு இலாஞ்சினைப் பேறு, செக்கிறை தறியிறை, தட்டொலி தட்டாரப்பாட்டம், வி(க்கிர)பதி, பொன் வரி, அச்சு காரிய ஆராய்ச்சி[170] என்ற பலவரிகள் இவ்வாணாதிராயர்களால் அரசவருவாயாக வசூலிக்கப்பட்டிருக்கின்றன. இவை அரசின் 'வாசற்கணக்கு'[171] என்றும் இறைக்காம்[172] என்றும் அழைக்கப்பெற்று 'உட்குடி, புரக்குடி' என்று வகைப்படுத்தப்பட்டன.[173]

## நாணயங்கள்

இவர்கள் வெளியிட்ட காசுகள் பற்றி சில குறிப்புகளை முன்பே கண்டோம். இங்கே அவற்றைப்பற்றி சற்று விரிவாகக் காணலாம். தமிழகத்தில் கிடைத்துள்ள காசுகளில் புவனேக வீரன், சமரகோலாகலன், என்று பெயர் பொறித்துள்ள காசுகளைப் பற்றி ஆராய்ச்சி செய்த எலியட்டும்,[174] தேசிகாசாரியும்[175] இக்காசுகள் பாண்டியர் காசுகளாக இருக்கலாமென்று குறித்துச் சென்றுள்ளனர். வட்டவடிவில் பிற்காலப்பாண்டியர் காசுகளைப் போன்றே அமைந்த இச்செப்புக்காசுகள் இன்றும் மதுரை முகவை புதுக்கோட்டை மாவட்டப்பகுதிகளில் அதிகமாகக் கிடைக்கின்றன. இவற்றில் மீன் ஒன்றின் மீது கருடன் அமர்ந்திருப்பது போன்று வெளியிடப்பட்ட காசு ஒன்றினை எந்த அரசன் வெளியிட்ட காசு என்று கூறாது இவ்வாணாதிராயர்கள் பாண்டியர்கள் மீது வெற்றிகொண்டதன் நினைவாக வெளியிட்டிருக்கவேண்டும். இது வாணாதிராயர் காசாக

இருக்கவேண்டும் என்று முதன் முதலில் பேராசிரியர் மகாலிங்கம் குறிப்பிட்டுச் சென்றுள்ளார்[176] அதன்பிறகு இக்காசுகளின் எழுத்தமைதியைக்கொண்டு இவை கி. பி. 14-15ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் கருத்து வெளியிட்டார்[177] திரு. நடனகாசிநாதன் அவர்கள் 'இவை பாண்டியர் காசுகள் அல்ல. 14, 15ஆம் நூற்றாண்டில் மதுரை - இராமநாதபுரம் பகுதியில் ஆண்ட சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் காசுகளாக இருக்கலாம்' வாணாதிராயர்கள் விசயநகர மன்னர்களின் சமயமான வைணவத்தைத் தழுவியிருக்க வேண்டும். அதனால்தான் அவர்கள் காசுகளில் கருடனைப் பொறித்துள்ளனர்,[178] என்ற கருத்தினை வெளியிட்டார். அதன்பிறகு இவ்வாணாதிராயர்கள் காசுகளை ஆறுவகையாகப் பிரித்து விரிவான ஆய்வுக்கட்டுரை ஒன்றினை டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் எழுதி எழுதிவெளியிட்டுள்ளார்[179]

வகை ஒன்று : தலை: ஒருமீன். அதன் மீது கருடன்அமர்ந்து காணப்படுகின்றது.
பூ: சமரகோலாகலன் என்று பெயர் எழுதப்பட்டுள்ளது. எழுத்துக்களின் இடையில் கோடு உள்ளது.

வகை இரண்டு : தலை: கருடன், சங்கு, சக்கரமும் உள்ளன,
பூ: 'சமரகோலாகலன்' என்று பொறித்துள்ளது. எழுத்துக்களின் இடையில் கோடு உள்ளது.

வகை மூன்று : தலை: கருடனும், சங்கும், சக்கரமும் உள்ளன.
பூ: 'சமரகோலாகலன்' என்று தமிழ்எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளது. இடையில் கோடு இல்லை. வகை 1,2ஐ விட காலத்தால் முற்பட்டதாகத் தெரிகிறது.

வகை நான்கு : தலை: அமர்ந்த கருடன் சங்கும் சக்கரமும் உள்ளன. கருடனுக்கு மேல் அழகிய குடை ஒன்று உள்ளது.
பூ: 'புவனேகவீரன்' என்று பொறிக்கப்பட்டுள்ளது.

வகை ஐந்து : தலை: கருடன் உள்ளது. சங்கும் சக்கரமும் உள்ளன.
பூ: 'புவனேகவீரன்' என்று பொறிக்கப் பட்டுள்ளது.

வகை ஆறு : தலை: கருடன் உள்ளது, சங்கும் சக்கரமும் உள்ளன.
பூ: இரண்டு மீன்கள் ஒன்றை ஒன்று பார்த்த நிலையிலும் இடையில் செண்டும் உள்ளன. எழுத்துக்கள் ஏதும் இல்லை.

ஆனால் மேற்கண்டவாறு வகைப்படுத்திய இக்காசுகள் 'புவனேகவீரன் சமரகோலாகலன், ராஜகுலஸர்ப்பன், கருடகேதன் என்ற பட்டப்பெயர்களைக் கொண்ட நெக்கோணம் கல்வெட்டில் குறிப்பிடப்படும் சுந்தரத்தோளுடைய மாவலிவாணாதிராயனால் வெளியிடப்பட்டிருக்க வேண்டும் என்றும் இவனுக்கு திருமாலிருஞ்சோலை நின்றான் என்ற பெயரும் உண்டு என்றும் திருமாலிருஞ்சோலை நின்றானும் சுந்தரத்தோளுடையானும் ஒருவரே[1·0] என்றும் கொள்வதற்கில்லை.

சேவலூர் கல்வெட்டில் குறிப்பிடப்படும் வாணாதிராயனும், நெக்கோணம் கல்வெட்டில் குறிப்பிடப்படும் வாணாதிராயனும் ஒருவரல்லர். சேவலூர் கல்வெட்டில் குறிப்பிடப்படும் வாணாதிராயன் 'திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயர் உறங்காவில்லி தாசனான சமரகோலாகலன் என்ற முப்பெயரினைக் கொண்டவன்.

கி. பி. 1428 முதல் 1477 முடிய பாண்டியநாட்டில் ஆட்சி புரிந்தவன். இவனுக்குப் பிறகு ஆட்சிபுரிந்தவனே நெக்கோணம் கல்வெட்டில் குறிப்பிடப்படும் சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன். இவன் 1488 முடிய ஆட்சிபுரிந்தவன் ஆவான். இக்காசுகளில் பெரும்பாலானவை கி. பி. 1428 முதல் 1477 முடிய பாண்டியநாட்டில் ஆட்சிபுரிந்த திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயர் உறங்காவில்லி தாசனான சமரகோலாகலனால் வெளியிடப்பட்டிருக்க வேண்டும். சில காசுகள் இவனுக்குப்பின் 1488 வரை ஆட்சி புரிந்த சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயனால் வெளியிடப்பட்டிருக்கவேண்டும் என்று கருதுவதே பொருத்தமாகப்படுகின்றது. வாணாதிராயர் காசுகள் பற்றி இனிவரும் புதிய கருத்துவிளக்கங்கள் இதற்கு வழிகாட்டட்டும்.

### சமயமும் சமுதாயமும்

பாண்டியர்கள்காலத்தில் பாண்டியர்களைப்போல சைவர்களாக விளங்கிய இவ்வாணாதிராயர்கள் காலத்திற்குயேற்ப தமது சமயத்தை வைணவமாக மாற்றிக்கொண்டார்கள். தமது ஆண்டார்களாகிய விசயநகரவேந்தர்களைப்போன்றே சிறந்த வைணவபற்றுடன் விளங்கினார்கள். தீவிரவைணவர்களாக இவர்கள் விளங்கிய போதும் சைவத்தையும் போற்றி வந்திருக்கின்றார்கள் மதுரை மீனாட்சியம்மன் கோவிலுக்கும் காளையார் கோவிலுக்கும் பலதிருப்பணிகள் இவர்களது காலத்தில் செய்யப்பட்டிருக்கின்றன.

வைணவ ஆச்சாரியர்களில் ஒருவராகிய மணவாளமாமுனிகளிடத்தில் பற்றுக்கொண்டு விளங்கிய சீடர்களில் ஒருவன் மஹாபலிவாணாதிராயன். இவன் மதுரை கூடலழகர் திருமாலிருஞ்சோலையழகர், திருமோகூர் காளமேகப் பெருமாள் முதலிய வைணவத் திருக்கோயில்களுக்குப் பல

திருப்பணிகளைச் செய்திருக்கின்றான் என்று ஆறாயிரப்படி குருபரம்பரைப் பிரபாவம் கூறுகின்றது.[181]

மதுரை முகவை மாவட்டத்தில் இருந்த வைணவக் கோயில்கள் இவ்வாணாதிராயர்கள் காலத்தில் சிறப்புற்று விளங்கின. அவற்றிற்கு வேண்டிய திருப்பணிகள் இககாலத்தில் செய்யப்பட்டிருக்கின்றன.

வைணவ சமயத்தவர் மடங்களை வைத்தும் தமது சமயத்தைத் தங்குதடையின்றிப் பரப்பினார்கள். மதுரை மாவட்டத்திலுள்ள புளியங்குடியில் 'அப்பன் திருவேங்கடநாதன் மடம்' என்ற ஒரு வைணவ மடம் இக்காலத்தில் இருந்தது.[182]

மேலும் இக்காலத்தில் தாடிக்கொம்பு பெருமாள் கோயிலில் வைணவ சம்பந்தமான இதிகாசமும், புராணமும், இராமானுசரின் ஸ்ரீபாசியமும், நம்மாழ்வாரின் திருவாய்மொழியும், ஆளவந்தாரின் வரலாறும், கூரத்தாழ்வாரின் சுந்தரராசதவமும் (சுந்தரபாகுஸ்தவம்) பெருமாள்மாயவறான வரலாறும், இராமாயணமும், பாகவதமும் பொதுமக்கள் கேட்க அவர்களுக்காகப் படிக்கப்பெற்றிருக்கின்றன.[183]

சமுதாயத்தைப் பொறுத்தவரையில் சாதிப்பிரிவுகள் பல இக்காலத்தில் இருந்தன. வலங்கை, இடங்கை போன்ற பிரிவுகள் தொடர்ந்து மக்களிடையே இருந்துவந்தன.[184] குடவர், கோவனவர், பூவிடுவார், தலைமுழுவார், தண்டெடுப்பார், அணுக்கர், கணக்கர் என்று பல்வேறு தொழில் செய்தோர் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயிலில் பணிபுரிந்ததைக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[185]

வாணர் வளர்த்த கலை

இறைவன் மீது ஆழ்ந்த நம்பிக்கையும் பற்றும் கொண்டு விளங்கிய வாணாதிராயர்கள் அவன் மீது தாங்கள் கொண்ட

அன்பையும், பக்தியையும் வெளியிட இடிந்துபோன கோயில்களை இக்காலத்தில் புதுப்பித்திருக்கிறார்கள். புதியதாக மண்டபங்களையும், திருமேனிகளையும் செய்வித்திருக்கின்றார்கள். கலையழகுமிக்க பொருட்களை வழிபாட்டிற்கென்று பல கோயில்களுக்கு அன்போடு அளித்திருக்கின்றார்கள் பாண்டிய நாட்டில் மகமதியர் படையெடுப்பால் இடிந்துபோன கோயில்களைப் புதுப்பித்து வைதிக சமயத்திற்கு வாழ்வு கொடுத்திருக்கின்றார்கள்.

இவர்கள் கலைப்பாணி ஹம்பியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட விசயநகர வேந்தர்களின் கலைப்பாணியைப் பிரதிபலிப்பதாய் அமைந்திருக்கின்றது. பாண்டியர் காலத்தில் அரசியல் அதிகாரிகளாக இருந்து பாண்டிய நாட்டில் இவர்கள் செய்த கலைப்பணிகள் பல. அவற்றை விட இவர்கள் (இக்காலத்தில்) பாண்டியநாட்டில் அரசர்களாயிருந்து செய்த கலைப்பணிகள் பல. அவை இன்றும் நம் பார்வைக்குக் கிட்டுவதாய்பொலிவுடன் பாண்டியநாட்டில் பல இடங்களில் காணப்படுகின்றன. காளையசர்கோவில், மதுரை. ஸ்ரீவில்லிபுத்தூர், அழகர்கோவில் போன்ற இடங்களில் இவர்கள் பல கலைத்திருப்பணிகளைச் செய்வித்திருக்கின்றார்கள்.

காளையார் கோவில்

முகவை மாவட்டம் சிவகங்கையிலிருந்து தொண்டி செல்லும் சாலையில் அமைந்துள்ளது காளையார் கோவில். இவ்வூர்ச் சிவன்கோவிலின் இறுதித்திருச்சுற்றில் தென்மேற்கு மூலையில் கிழக்குப் பார்த்த நிலையில் விநாயகருக்கு என்று எடுக்கப்பட்ட சிற்றாலயம் ஒன்று உள்ளது. இதனை இன்று செல்வவிநாயகர் கோவில் என்று மக்கள் அழைக்கின்றனர். இதன் கருவறையைச் சுற்றி வர பன்னிரு தூண்களுடன் கூடிய சிறிய மண்டபம் கட்டப்பட்டுள்ளது, கருவ

றையின்உட்புறம் மேலிருகரங்களில் அங்குசத்தையும் பாசத்தையும் பற்றி கீழிருகரங்களில் ஒடிந்த கொம்பையும், மோதகத்தையும் ஏந்தி இடம்புரி விநாயகர் அமர்ந்திருக்கின்றார்.

இவ்விநாயகர் கோயிலே இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் கல்வெட்டில் குறிக்கப்படும் செல்லப்பிள்ளையார் கோயிலாக இருக்க வேண்டும். செல்லப்பிள்ளையாரே பிற்காலத்தில் செல்வப்பிள்ளையாராக மாற்றப்பட்டிருக்கின்றார். மகமதியர் படையெடுப்பில் இடிந்துபோய்கிடந்த இவ்விநாயகர் கோயில் இவ்வாணாதிராயர் காலத்தில் எடுத்துக்கட்டப்பட்டு, பிள்ளையார்க்குப் புதிதாக திருமேனியும் செய்து வைக்கப்பட்டிருக்கின்றது.[186] வாணாதிராயர் காலத்தில் செய்துவைக்கப்பட்ட செல்லப்பிள்ளையார் திருமேனி இன்றும் காளையார்கோயிலில் செல்வப்பிள்ளையார் கோவிலில் காட்சியளிக்கின்றது. ஆனால் இச்சிற்றாலயத்தின் பழைய கட்டடப்பகுதிகளை நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் புதுப்பித்துவிட்டார்கள்.

செல்லப்பிள்ளையார் கோயிலைப்போலவே காளையார் கோயிலின் திருச்சுற்றுமதிலும், திருமடைப்பள்ளியும், மகமதியர் காலத்திற்குப் பிறகு இடிந்து சரிந்து கிடந்தன. அவையும் இவ்வாணாதிராயன் காலத்திற்கு சற்று முந்திய காலத்தில் புதுப்பிக்கப்பட்டிருக்கின்றன[187] அதன்பிறகு இவற்றை நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் புதுப்பித்திருக்கின்றார்கள்.

மதுரை மீனாட்சிசுந்தரரேசுவரர் கோயில்

மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் திருப்பணிகள் பல இவ்வாணாதிராயர்களால் செய்யப்பட்டிருப்பதைத் திருவாலவாய்வுடையார் கோயில் திருப்பணிமாலை தெரிவிக்கின்றது.

குலசேகரன் மண்டபம்

குலசேகரபாண்டியன் கட்டிய மாமண்டபம் ஒன்று மதுரைக்கோயிலில் இருந்தது. காலப்போக்கில் அது இடிந்து போகவே இதனைத் திருமாலிருஞ்சோலை மாவலிவாணாதிராயன் புதுப்பித்ததாக இத்திருப்பணிமாலை தெரிவிக்கின்றது.

மன்னன் குலசேகரபாண்டியன் செய்த மாமண்டபம்
பின்னொரு காலத் தரைகுறை தீர்த்துப் பிறங்கச்செய்து
பொன்னின் றிருவா பரணம் பலபுதி தாகத்தந்தான்
மன்னும் புகழ்திரு மாலிருஞ்சோலை மகாவலியே[188]

இக்குலசேகரன் செய்த மாமண்டபம் தற்போது மதுரைக்கோயிலில் இல்லை. இக்குலசேகரன் மாமண்டபம் நடராசர் எழுந்தருளியிருக்கும் சந்நிதி மண்டபத்தைக் குறித்தது என்பர்[189] இப்பாடலில் குறிப்பிடப்படும் திருமாலிருஞ்சோலை மகாவலி திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயனாக (கி. பி. 1428-1477) இருக்க வேண்டும்.

ஆறுகால் பீடம்

சொக்கநாதர்சன்னதியில் மகாமண்டபத்திற்கு முன்பாக வாசலில் வேலைப்பாடு மிக்க ஒரு சிறிய முகமண்டபம் உள்ளது. இதனை ஆறுகால்பீடம் என்று அழைப்பர். இதுவே சொக்கநாதர் சன்னதிக்கு முகப்பு வாயிலாக அமைந்துள்ளது தென்புறமும் வடபுறமும் பக்தர்கள் ஏறி உள்ளே செல்ல பக்கவாட்டில் படிக்கட்டுகளுடன் அழகிய இருவாயில்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. வேலைப்பாடு மிக்க ஆறுதூண்கள் இம்மண்டபத்தை அணிசெய்கின்றன. இதன் கிழ்புறம் அதிட்டானத்தில் கோயிலுக்கு வருவோர்கள் கண்டு களிக்கும் வண்ணம் அழகிய ஆடல் மகளிரின் நடனங்களும் அவர்கள்

நடனத்திற்கேற்ப பல்வேறு இசைக்கருவிகளைக் கொண்டு இன்னிசை முழக்கும் ஆடவர் உருவங்களும் பெண்டிர் உருவங்களும் சிற்பங்களாக சிறப்புற செதுக்கப்பட்டிருக்கின்றன. விசயநகரவேந்தரின் கலைப்பாணியைப் பிரதிபலிக்கும் இம்மண்டபத்தை 'சுந்தரமாவலி வாணாதிராயன்' என்ற வாணாதிராயன் புதுப்பித்ததாகத் திருப்பணிமாலை கூறுகின்றது இவன் திருமாலிருஞ்சோலை நின்றாறுக்குப் பிறகு ஆடை சுந்தரத்தோளுடைய மாவலி வாணாதிராயனாக இருக்கவேண்டும். திருப்பணிமாலை இப்பீடம் பாண்டியன் குலசேகரனால் அமைக்கப்பட்டு காலப்போக்கில் இடிந்து போய் இவ்வாணாதிராயனால் புதுப்பிக்கப்பட்டது என்று கூறுகின்றது.[120]

'பாரூசூழ் சுடரிலைவேற் குரிசில் குலசேகரபாண்டியன் செய்த ஆறுகாறபீடத்திற்கு சிலபழைய தைபபுதித வழகிற்செய்து'

## திருக்காவணப்பத்தி

சொக்கர் சன்னதியில் உள்ள திருக்காவணப்பத்தியை இவ்வாணாதிராயன் புதுப்பித்து விளங்கச் செயதான் என்று திருப்பணிமாலை கூறுகின்றது. சொக்கர் சன்னதியில் உள்ள உற்சவநாயனார் மண்டபமே இத்திருக்காவணப் பத்தியாக இருக்கவேண்டும் என்பர்[121]

'வீறுசேர் நாயகர் சந்நிதித்திருக்கா வணப்பத்தி
விளங்க வைத்தான்
தேறுநீர்க் கடலுலகென் சுந்தரமா வலி
கீர்த்திச் செல்வன்றானே'[122]

## மீனாட்சி சன்னதி

அங்கயற்கண்ணி சன்னதியில் உள்ள முதல் திருச்சுற்று மண்டபத்தையும் சன்னதிக்கு முன்பாக உள்ள மகாமண்டபத்தையும், அதிலுள்ள பள்ளியறையையும் கட்டியவன் திருமாலிருஞ்சோலை மாவலிவாணாதிராயனே என்று மதுரைத் திருப்பணிமாலை மொழிகின்றது.

மந்திரமிக்க யற்கண்ணி சந்நிதி மாமண்டபஞ்
செந்திரு வம்மை முதற்பிரா கரரத் திருமண்டபம்
சுந்தரப்பள்ளி யறைவகுத் தான்றுன்ன லார்வணங்க
வந்தரு ளுருந்திரு மாலிருஞ்சோலை மகாவலியே 193

தல்லாகுளம் - பெருமாள் கோயில்

மதுரையிலிருந்து அழகர்கோயில் செல்லும் பாதையில் அமைந்துள்ள தல்லாகுளம் பிரசன்ன வெங்கடாசலபதி பெருமாள்கோயிலின் வெளித்திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் நான்கு அடி உயரமுள்ள அழகிய சக்கரம் பொறிக்கப்பட்டுள்ள கல் ஒன்று நடப்பட்டுள்ளது. அதில் கி. பி. 15-16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த எழுத்தில் 'அழகர் திருவுள்ளம்' என்ற வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. பெருமாள் கோயிலுக்காக நிலம் விடப்பட்டு அவற்றின் எல்லையைக் குறிக்க நடப்பட்ட திருவாழிக்கல்லாக இது இருக்கவேண்டும் இது இப்பெருமாள் கோயிலுக்கு இக்காலத்தில் வாழ்ந்த வாணாதிராயர்களால் நிலம் விடப்பட்டு அதன் எல்லையைக் குறிக்க நடப்பட்டிருக்கவேண்டும். இன்று இக்கல் முதலில் இருந்த இடத்திலிருந்து எடுத்து வரப்பட்டு மக்கள் வழிபடும் பொருளாக உள்ளது. இக்கல் வாணர்கள் இக்கோயிலுக்குப் பல திருப்பணி செய்திருப்பதை உய்த்துணர வைக்கின்றது. ஆனால் அவற்றின் தடயங்களை இன்று இக்கோயிலில் காணவியலவில்லை.

ஆனால் ஒன்றைமட்டும் இங்கு கூறலாம். இன்று இக்கோயிலில் காணப்படும் பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவி முதலியோரின் உற்சவத் திருமேனிகள் இவ்வாணர்காலமாகிய கி.பி. 15-16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்

ஸ்ரீவில்லிபுத்தூர்-ஆண்டாள் கோவில்

ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோவில் வாணாதிராயர்கள் ஆட்சிக்காலத்தில்மிகுந்தசிறப்புடன் விளங்கிற்று. வாணர்குல

அரசர்களும், அரசியரும் இக்கோயிலுக்கு பல அழகிய ஆபரணங்களையும், வழிபாட்டிற்கென்று பல திருவிடை-யாட்டங்களையும் அளித்திருக்கின்றதை இக்கோயில் சுவரில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. ஆண்டாள் கோயிலின் அர்த்த மண்டபத்தையும், மாமண்ட பத்தையும் புதுப்பித்துக் கட்டியவன் சுந்தரத்தோளுடை-யான் மாவலி வாணாதிராயன் ஆவான்[154] இவனே ஆண்டாள்கோயிலின் கருவறையையும், புதுப்பித்துக் கட்டியிருக்கின்றான். ஆண்டாள் கோயிலின் கருவறை அர்த்த மண்டபம், மகாமண்டபங்களில் பிற்காலப்பாண்டியர்கால அதிட்டானப்பகுதிகளைத்தவிர்த்து மேல் உள்ள பகுதிகள் மட்டும் வாணாதிராயர்களால் புதுப்பித்து அழகிய முறையில் கட்டப்பட்டிருக்கின்றன. இவற்றில் உள்ள பழைய கல்வெட்-டுக்கள் நிறைந்த அதிட்டானப்பகுதி எவ்வித சிதைவும் இல்லாமல் அப்படியே காட்சியளிக்கின்றது.

ஆண்டாள் கோயிலின் கட்டடப்பாணி விசயநகர கலைப் பாணியைத்தழுவியது. அதன் அர்த்தமண்டபத்திலும் மகாமண்டபத்திலும் காணப்படும் சிற்ப வேலைப்பாடுகள், கழுத்தினை ஒன்றோடு ஒன்றாக பிணைத்துக் கொண்டு நிற்கும் அன்னங்கள், சிம்மங்கள், அவற்றின் மீது துதிக்கை-களைப் பிணைனிக் கொண்டு நிற்கும் யானைகள் முதலிய-வற்றைக் கொண்டு விளங்கும் கற்சாளரங்கள், பொங்கி-வழியும் கும்பபஞ்சரங்கள், அரைத்தூண்கள், தேவகோட்டங்கள் ஆகியன, நிறைந்து விளங்கும் சுவர், ஆகியவை கண்பார் கண்ணையும் கருத்தையும் கவர்வன ஆகும்,

அழகர்கோவில்

ஆண்டாள் கோயிலைப் போன்றே அழகர்கோயிலும் வாணாதிராயர் காலத்தில் சிறப்புற்று விளங்கியது. வாணாதிராயர்களின் நிவந்தங்களால் நிறைந்து விளங்கிற்று.

அம்மி

உறங்காவில்லிதாசனான திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலி வாணாதிராயன் அழகருக்கு வாசனைத்திரவியங்கள் அரைக்க அழகிய அம்மி ஒன்றைத் தன் பெயர் பொறித்து அளித்திருக்கின்றான்[135] இது இன்றும் அழகர்கோயிலில் காட்சிக்குரியதாய் விளங்குகின்றது.

விமானம்

சோமசந்தவிமானம் என்று அழைக்கப்படும் அழகர் கோயில் சுந்தரராசப்பெருமாள் கோயிலின் கருவறை கி. பி. 1464-ல் இவ்வாணாதிராயர்களால் புதிப்பித்துக் கட்டப்பட்ட தேயாகும்[136] வட்டவடிவில் அமைந்த இவ்வேசர விமானத்தை பாண்டிய நாட்டில் வேறு இடத்தில் காண்பது அரிது. இவ்விமானம் வாணாதிராயர்கள் பாண்டியநாட்டின் கட்டடக் கலை வரலாற்றுக்கு அளித்த ஒரு மாறுபட்ட கலைப்படைப் பாகும்,

வாணாதிராயர்கள் அழகர்கோயிலில் இருந்த பழைய விமானத்தின் பகுதிகளைப் பிரித்து எடுத்துவிட்டு இவ்விமானத்தைப் புதுமையாக ஆக்கியிருக்கின்றார்கள். இதன் அர்த்தமண்டபத்தை வடபுறமும் தென்புறமும் கொடிகளுடன் கூடிய சன்னல்கள் அலங்கரிக்கின்றன, வட்டமான கருவறையை விருத்த குமுதமும், யாளிவரியும் அணிசெய்கின்றன. சுவரினைச் சுற்றி ஆங்காங்கே கற்சாளரங்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன. சன்னல்களின் கண்கள் கொடிகளையும், சிறிய சிறிய சதுரங்களையும் கொண்டு வேலைப்பாடுடன் உருவாக்கப்பட்டிருக்கின்றன. அக்கொடிகளின் மீது நர்த்தனகிருஷ்ணன், வேணுகோபாலன், இராமர் போன்ற தெய்வ உருவங்கள் அழகிய முறையில் செதுக்கப்பட்டுள்ளன

இவ்விமானத்தை மேலும் அணி செய்யும் வகையில் சுவரில் ஆங்காங்கே அரைத்தூண்கள் நிற்கின்றன. கபோதத்தில் உள்ள கூட்டில் பழைய விமானத்தில் இருந்த உருவங்கள் சில எடுத்து வைக்கப்பட்டிருக்கின்றன.

கூடலூர் சிவன்கோயில்

மதுரை மாவட்டம் கம்பத்துக்கு அருகிலுள்ள கூடலூரி லுள்ள பிற்காலப் பாண்டியர்காலச் சிவன்கோயில் இவ் வாணாதிராயர் காலத்தில் திருப்பணி செய்யப்பட்டிருக் கின்றது. இதனை உறுதிப்படுத்தும் வகையில் இக்கோயில அர்த்த மண்டபத்தில்'அடியேன் வாணாதிராயன் சதாசேவை என்ற கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது.

பிற

மதுரையில் உள்ள கூடழலகர் பெருமாள்கோயில், திரு மோகூர் காளமேகப்பெருமாள்கோயில் விமானங்களும், புதுமண்டபத்திற்கு முன்புள்ள ராயர்கோபுரத்திற்கு அருகி லுள்ள எழுகடல் குளமும் இவ்வாணாதிராயர் காலக் கட்டடப் பணிகளாகும். அழகர்கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், கூடலழகர் பெருமாள்கோயில், திருமோகூர் காள மேகப் பெருமாள்கோயில் முதலிய கோயில்களின் உள்ள பல செப்புத்திருமேனிகள் இவ்வாணாதிராயர்கள் காலத்தில் செய்து அளிக்கப்பட்டவையே ஆகும். அழகர்கோயிலில்உள்ள 15-16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த 'பெருமாள் செப்புத்திரு மேனிஒன்றுஇன்றும்வாணர்குலஅரசர்பெயரை நினைவூட்டும் முறையில் 'சுந்தரத்தோளுடையான்' என்று பெயர் கொண்டு விளங்குவது குறிப்பிடத்தக்க செய்தியாகும். மதுரைப் பல கலைக்கழகத்திற்குத் தென்புறமுள்ள வடபழஞ்சி என்ற ஊர் மூவராயகண்டன்பேட்டை என்ற பெயரில் இவ்வாணாதி ராயர் காலத்தில் மதுரையிலுள்ள கோயில் ஒன்றிற்கு அளிக்கப்பட்டதை அங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கின்றது[19]

# மதுரை நாயக்கர்காலம்

(கி. பி. 16-17ம் நூற்றாண்டு)

கி. பி. 1529ல் பாண்டியநாட்டு மதுரையில் ஒரு புதிய மாற்றம் ஏற்பட்டது. இறந்தகாலம்எடுத்த சுந்தரத்தோளுடையான் மறவர்நாட்டை ஆண்டு கொண்டிருந்த காலத்தில் மதுரையிலிருந்து சந்திரசேகரபாண்டியன் ஆட்சிபுரிந்து கொண்டிருந்தான். அவனை வீரசேகரன் என்ற சோழ மன்னன் முறியடித்து மதுரையை விட்டுத் துரத்தினான். சந்திரசேகரபாண்டியன் அப்போது விசயநகரப் பேரரசின் பேரரசனாக விளங்கிய கிருஷ்ணதேவராயனிடம் சென்று சரணடைந்தான், தன்னுடைய இராச்சியத்தை தனக்கே திரும்ப வழங்குமாறு அவனிடம் வேண்டிக்கொண்டான். கிருஷ்ண தேவராயன் உடனே தன்னுடையபடைத்தலைவன் நாகம நாயக்கரை வீரசேகரனை வென்று மதுரையை சந்திரசேகரனுக்கு அளிக்கும்படி ஆணையிட்டான். மதுரைசென்று வீரசேகரனைவென்ற நாகமநாயக்கன் பாண்டிய அரசை சந்திரசேகரனுக்கு அளிக்காது காலந்தாழ்த்தினான். அதனை அறிந்த கிருஷ்ணதேவராயன் தனக்கு அடைப்பக்காரனாய் பணிபுரிந்து கொண்டிருந்த நாகமநாயக்கனின் மகன் விசுவநாதநாயக்கனை நாகமனை அடக்கிச் சிறைபிடித்து வருமாறு ஆணையிட்டான். விசுவநாதநாயக்கன் தந்தை என்றும் பாராது சென்று நாகமனை வென்று சிறைப்படுத்தி விசயநகரவேந்தன் முன்னர் கொண்டு வந்து நிறுத்தினான். விசுவநாதனின் வீரத்தையும் கடமை உணர்வையும் கண்டு பாராட்டிய கிருஷ்ணதேவராயன் பாண்டியனை விட்டுவிட்டு கி. பி. 1529ல் இருந்து விசுவநாதனையே தனது பிரதிநிதியாய் மதுரையிலிருந்து பாண்டிய நாட்டை ஆளும்படி அனுமதி அளித்தான்[1] அதுமுதல் ஏற்பட்ட விசுவநாதனின் பரம்பரையின மதுரை நாயக்கர் ஆட்சி கி. பி. 1736 வரை நீடித்தது.

விசுவநாதநாயக்கர் காலம் (கி. பி. 1529-1564)

இவ்விசுவநாத நாயக்கரின் மதுரை ஆட்சி கி. பி. 1533 வரை மறவர் சீமையை ஆண்ட இறந்த காலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயனைப் பாதித்ததாகத் தெரியவில்லை. கி. பி. 1533 வரை வேறு இடையீடு இல்லாமல் அப்பகுதியிலிருந்து ஆட்சிபுரிந்து வந்தான் என்பதை அவனது கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. ஆனால் நாகரி எழுத்தில் எழுதப்பட்ட நாங்குனேரி செப்பேடு ஒன்று விசுவநாதநாயக்கன் பாண்டியரையும் வாணாதிராயரையும் போரில் புறங்கண்டதாகத் தெரிவிக்கின்றது. விசுவநாதன் அரியணை ஏறியபோது பாண்டிய நாட்டில் இருந்த குறுநில மன்னர்கள் எதிர்ப்புத் தெரிவித்ததையே இச்செப்பேடு தெரிவிக்கின்றது எனலாம்.[2]

விசுவநாதநாயக்கர் நாட்டில் இவ்வெதிர்ப்பைச் சமாளித்து குழப்பத்தை ஒழித்து அமைதியை நிலைநாட்டு-வதற்கு எழுபத்திரண்டு பாளையப்பட்டுக்களை ஏற்படுத்-தினான். இதன்படி மதுரை நாயக்கர் ஆட்சியில் இருந்த நிலப்பரப்பு எழுபத்திரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு எழுபத்திரண்டு தலைவர்களுக்குக் கீழ் இருந்தது. எழுபத்-திரண்டு பாளையப்பட்டுத் தலைவர்களும் தமது வருவாயில் ஒருபகுதியை நாயக்கமன்னர்க்கும் மற்றொரு பகுதியை படைக்கும், பிறிதொரு பகுதியை தமது சொந்தச் செலவிற்-கும், செலவிடவேண்டும். இவர்கள் அவசரகாலத்தில் நாயக்க மன்னர் வேண்டியபோது அவர்களுக்குப் பொருளும் படையும் கொடுத்து உதவவேண்டும்[3] இறந்தகாலம் எடுத்த சுந்தரத் தோளுடையானுக்குப் பின் வந்த வாணாதிராயர்கள் இப்-பாளையப்பட்டுத் தலைவர்களில் ஒருவராக விளங்கினர். நாயக்க மன்னர்களுக்குக் கீழ் மறவர் நாட்டின் ஒரு பகுதியை ஆட்சிபுரிந்து வந்தனர்.

வலிவாணாதி மகாபலிவாணாதிராயர்

இவ்விசுவநாதநாயக்கர் காலத்தில் வாழ்ந்த மற்றொரு வாணாதிராயன் வலிவாணாதிமகாபலிவாணாதிராயர் என்பவன் ஆவான். இவன் கி. பி. 1554 ஆம் ஆண்டைச் சார்ந்த ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில் கல்வெட்டு ஒன்றில் குறிப்பிடப்படுகின்றான். இவ்வாண்டாள் கோயி-லுக்கு இவன் அளித்த நிவந்தத்தைப் பற்றி இது தெரிவிக்-கின்றது.[4]

கிருஷ்ணப்ப நாயக்கன் காலம் (கி. பி. 1564-1572)

கர்னல் மெக்கன்சி சேகரித்த ஓலைச் சுவடிகளில் ஒன்று இந்நாயக்கன் காலத்தில் வாழ்ந்த வாணாதிராயன் ஒரு-வனைப் பற்றித் தெரிவிக்கின்றது. 'மணிவிவாணாதிராயர்' என்ற இவனது பெயர் சுவடியில் குறிப்பிடப்படுகின்றது. இக்காலத்தில் கொல்லபட்டிபாளையபட்டின் தலைவனாய் இருந்தவன் சுந்தரபாண்டிய கஜலப்ப நாயுடு என்பவன் ஆவான். கிருஷ்ணநாயக்கன் காலத்தில் இவனுக்குப் பிறகு இவன் மகன் அப்பனகஜலப்ப நாயுடு கொல்லப்பட்டி பாளையப்பட்டிற்குத் தலைவனாகி பரமக்குடியைத் தனது தலைநகராகக் கொண்டு ஆட்சி நடத்தினான். இவன் காலத்தில் மறவர் சீமையில் இருந்த 'மணிவிவாணாதிராயன் தும்பிச்சி நாயக்கன் என்ற மற்றொரு பாளையக்காரனோடு சேர்ந்து கொண்டு போரில் இவனைத் தோல்வியடையச் செய்ததாக இச்சுவடி தெரிவிக்கின்றது.[5]

வீரப்பநாயக்கன் காலம் (கி. பி. 1572-1595)

கிருஷ்ணப்ப நாயக்கன் காலத்தில் 'தும்பிச்சி நாயக்கன் தனியுரிமை பெறக்கருதி மதுரை நாயக்க அரசை எதிர்க்க முற்பட்டு தோல்வியடைந்தான். இதே போன்று வீரப்ப நாயக்கன் ஆட்சி காலத்திலும் ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது.

மறவர் நாட்டில் இருந்த வாணாதிராயன் ஒருவன் வீரப்ப நாயக்கன் ஆட்சியை எதிர்த்து சுயாட்சி பெறக் கருதி, மானாமதுரையிலும், காளையார்கோயிலிலும் இருந்த கோட்டைகளைப் பழுதுபார்த்து பலப்படுத்திப்பக்கத்திலுள்ள சிற்றூர்களைக் கைப்பற்றிக் கொண்டு கலகம் செய்து வந்தான். இதனை அறிந்த வீரப்பநாயக்கன் உடனே தனது படைகளை அவ்விடங்களுக்கு அனுப்பி வாணாதிராயன் படைகளைப் புறங்கண்டு வாணாதிராயனின் கலகத்தையும் அடக்கினான். அவனது நாடும் கைப்பற்றப்பட்டது."

இவ்வாணாதிராயனின் கலகத்தினால் மறவர் நாட்டு ஆட்சிப்பொறுப்பை பாண்டிய நாட்டில் நீண்ட காலமாக ஆட்சிப்பொறுப்பில் இருந்த வாணர்குலம் இழந்தது. பாண்டியநாட்டில் இறுதியாகப் பெற்றிருந்த ஒரு பாளையப் பட்டின் தலைவராக இருக்கக்கூடிய பேற்றையும் இழந்தது. அதன்பிறகு மறவர் நாட்டுப்பகுதியில் இருந்த வாணாதிராயர்கள் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை.

### மறவர்நாடு

இந்நிலையில் மறவர்நாடு அரசன் இல்லாது 'தடியெடுத்தவன் தண்டல்காரன்' என்று தக்க தலைவர்கள் இல்லாது குழப்பங்கள் நிறைந்து கிடந்தது. இராமேஸ்வரம் சென்ற பக்தர்கள் வழிப்பறி செய்யப்பட்டு அவதிக்குள்ளாயினர். இதனால் கி. பி. 1601-ல் இருந்து கி.பி. 1609 வரை ஆட்சிபுரிந்த முத்துக்கிருஷ்ணப்பநாயக்கர் தனது காலத்தில் 'சடைக்கத்தேவர்' என்ற மறவர்குலத்தோன்றலை மறவர் நாட்டின் தலைவனாக்கி, மறவர் நாட்டின் ஆட்சிப்பொறுப்பை அவனிடம் ஒப்படைத்து, மறவர் நாட்டில் மலிந்திருந்த குழப்பத்தை ஒழித்து அமைதியைஏற்படுத்தினான். சடைக்கத் தேவரும் அவருக்குப் பின்வந்தவர்களும் தம்மை சேது-காவலர்கள் என்று கூறிக்கொண்டு மறவர் நாட்டின் ஆட்சிப்-

பொறுப்பை ஏற்று ஆட்சிபுரிந்துவந்தார்கள்[7] விசயநகரவேந்தர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாய் விளங்கி வந்த வாணாதிராயர்களோ விசயநகரவேந்தர்களின் மண்டலாதிபதிகளான மதுரைநாயக்கரின் நம்பிக்கையை மதுரையில் அவர்கள் ஆட்சிக்கு வந்த சிறிது காலத்திற்குள்ளாகவே தமது செய்கையால் இழந்தனர். பதவியும் பறிபோய் அது சேதுபதிகளிடம் ஒப்படைக்கப்பட்டது. இதனால் பாண்டிநாட்டில் தொடர்ந்து இருந்துவந்த இவ்வாணர்குலத்தின் அரசியல் வாழ்விற்கு ஒடுக்கம் ஏற்பட்டது.

திருமாலிருஞ்சோலை வாணாதிராயர்கள்

இதன்பிறகு வாணாதிராயர்களின் தலைநகராக விளங்கிய திருமாலிருஞ்சோலையில் பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இருந்த வாணர்குலம் பற்றி அங்குள்ள சில கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இவர்கள் கி.பி. 15-16-ம் நூற்றாண்டுகளில் மதுரைப்பகுதியில் ஆட்சிபுரிந்த வாணாதிராயர்களின் வழிவந்தவர்களாக இருக்கவேண்டும்.

சுந்தரத்தோள் உடையரர் மாவலி வாணாதிராயர்

இவன் விசயநகரவேந்தன் வீரவேங்கடதேவ மகாராயர் காலத்து அழகர்கோயில் கல்வெட்டு ஒன்றில் (கி. பி. 1589) குறிப்பிடப்படுகின்றான். இக்காலத்தில் மதுரையிலிருந்து ஆண்ட நாயக்கமன்னன் வீரப்பநாயக்கன் ஆவான். இவ்வாணாதிராயன் அழகர்கோயிலில் பன்னிரு வைணவர்களுக்கு அன்னதானம் செய்யவும் தங்குவதற்கு இலவசமாக இடமளிக்கவும் ஏற்பாடு செய்தான். அதற்காக கவுண்டன்பட்டி என்ற இராமானுசநல்லூர் தானமாக விடப்பட்டு அவ்வூரிலிருந்து வரும் அரச வருமானம் செலவிடப்பட்டது[8]

அழகர்கோயில் நிர்வாகத்தில் ஒழுங்குமுறை

சிறிதுகாலம் கழித்து வீரவேங்கடத்தேவ மகாராயர் ஆட்சிக்குப்பிறகு விசயநகர ஆட்சிக்கு வந்த இராமராஜ திருமலைதேவ மகாராஜா ஒருமுறை அழகர்கோயிலில் வந்து தங்கினார். அப்போது அவர் முன்னிலையில் அழகர்கோயில் நிர்வாக ஊழியர்களான சமான்யர், சோழியர் என்ற இரு பிரிவினர்க்கு இடையே, உரிமைபற்றியும், ஒழுகவேண்டிய நெறி பற்றியும் எழுந்த தகராறு தீர்த்துவைக்கப்பட்டது.[9] அதன்படி இது குறித்த செயல்களில் அழகர்கோயிலை வாணாதிராயர்கள் தலைநகராகக்கொண்டு ஆண்டகாலத்தில் வகுத்து பின்பற்றபட்ட நெறிமுறைகளையே மீண்டும் தொடர்ந்து பின்பற்ற வேண்டும் என்று முடிவுஎடுக்கப்பட்டது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

இதன்மூலம் வாணாதிராயர் பாண்டியநாட்டு அரசியல் விவகாரத்தில் மட்டுமின்றி, அவர்கள் தலைநகராகக் கொண்டு ஆண்ட அழகர்கோயில் போன்ற பெருங்கோயில் நிர்வாகத்திலும் தலையிட்டு ஒழுங்குமுறையை ஏற்படுத்தி னார்கள் என்பது தெரியவருகின்றது. பிற்காலத்தில் இவ்வொழுங்குமுறை சீர்குலைந்தமையால் விசயநகரவேந்தன் தலையிட்டு அதனை ஒழுங்குபடுத்திப்பழைய நிர்வாகத்தைக் கொண்டுவர வேண்டியதாயிற்று. அதன்படி இருபத்து நான்குகாணியாட்சி நிர்வாகஸ்தர்கள் நியமிக்கப்பட்டார்கள்

1. திருப்பதி காணியாட்சி பத்துப்பேர்கள்
2. நம்பிமார் நிர்வாகம் நான்குபேர்கள்
3. திருமலை ஆண்டார் முதலியார் தோளப்பர் இரண்டு பேர்கள்
4. சாமான்யபட்டர் இரண்டுபேர்கள்
5. சோழியபட்டர்கள் இரண்டு பேர்கள்.
6. கோயில்கணக்கு இரண்டு பேர்
7 கைக்கோளர் ஒருவர்

8. சாமான்யர் கணக்கு சோதிப்பராயர் ஒருவர் ஆகமொத்தம் இருபத்து நான்கு பேர்கள்.

இவை தவிர மேலும் 'ஸ்ரீபத்மதாரர்கள்' என்பவர்கள் முப்பது பேர் நியமிக்கப்பட்டார்கள் இதில் பதினைந்து பேர்கள் சாமான்யராகவும் பதினைந்து பேர்கள் சோழியரா கவும் இருந்தார்கள். 'பரிசாரகர்' பத்துப்பேர்கள் நியமிக்கப் பட்டார்கள். இதில் ஐவர் சாமான்யராகவும் ஐவர் சோழியர் களாகவும் நியமிக்கப்பட்டார்கள்.

மாவலிவாணாதிராயன் அப்பன்திருப்பதி

அழகர்கோயிலுக்குச்செல்லும் வழியில் அமைந்த 'அப்பன் திருப்பதி' திருவேங்கடமுடையான் கோயில் கி. பி. 1606-ல் திருப்பணி செய்யப்பட்டது. அத்திருப்பணிக்கு ஆகும்பொருள் செலவிற்காக பண்ணணப்பச்சேரி என்ற கிராமத்தை மாவலி வாணாதிராயன் ஒருவன் தானமாக அளித்தான். அதன்படி திருவேங்கமுடையான் திருமேனி புதிதாகச் செய்து வைக்கப் பட்டது.[10] கோயிலின் வழிபாட்டிற்கு வேண்டும் பொருளும் அத்தானத்திலிருந்து தரப்பட்டது[10] அத்தானத்தை அளித்த வாணாதிராயனைப்பற்றி வேறு விவரங்கள் அறிந்துகொள்ள இயலவில்லை. மதுரை நாயக்கமன்னர்கள் காலத்திலும் இவ்வாணாதிராயர்கள் தொடர்ந்து பாண்டியநாட்டு அரசிய லில் அதிகாரிகளாகச் சிறப்புற்று விளங்கினாகளா என்பது போன்ற செய்திகளை இனிவருங்காலங்களில் கிடைக்கும் கல்வெட்டு போன்ற சான்றுகள்தான் தெளியவைக்க-வேண்டும்.

காளை மாவலிவாணாதிராசா-வெள்ளிக்கலசப்பானை

இந்நாயக்கர் காலத்தில் வாழ்ந்த காளைவாணாதிராசா என்ற வாணாதிராயன் வெள்ளிக்கலசப்பானை ஒன்றினை அழகர்கோயில் அழகருக்கு அளித்துள்ளான். அவனது பெயரையும் அக்கலசப்பானையின் நிறையினையும் அதில் பொறித்துள்ளான்[11]

"சுவாமி ஆண்டவன் அழகருக்கு காளைமாவலிவாணா-திராசா உபயம், வெள்ளிக்கலசபானை தூக்கம் அளஉயஉ மதுரை விரகன் படிக்கு வீ. களசய பணவடை ரு"

இவ்வெள்ளிக்கலசப்பானையை அளித்தகாளை வாணா-திராசா எம்மன்னன் காலத்தில் வாழ்ந்தவன் என்பது தெரிய-வில்லை. இவன்காளை என்ற அடைமொழியோடு குறிக்கப்-படுதலால் காளையார்கோயில் பகுதியிலிருந்து வந்தவனாக இருக்கவேண்டும் எனலாம் இவனது பெயர் மதுரை ஸ்தலத்தார் வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ள காளைசோம-னாதன் என்ற வாணாதிராயன் பெயரை நினைவூட்டுகின்றது ஆனால் அவனும் இவனும் ஒருவனா என்பதைத் துணிந்து சொல்வதற்கில்லை.

நாயக்கர்கால வாணாதிராயர்கள்

மதுரை நாயக்கர்காலப் பாளையப்பட்டின் தலைவர்களாக விளங்கிய இவ்வாணாதிராயர்கள் காலம் குழப்பம் மிகுந்த-தாகக் காணப்படுகின்றது. ஆங்காங்கே கிடைக்கும் சில சான்றுகள் இவர்கள் வாழ்வைப் பற்றி விரிவாக அறிந்து கொள்ள துணைபுரியவில்லை. கி. பி. 1577-ஆம் ஆண்டு ஊனையூர் கல்வெட்டில் சூரைக்குடிக்கு அரசன் மாவலிக்கு விருந்திட்டதாக கூறிக்கொள்கின்றான்[12] மதுரை நாயக்கர்-காலத்தின் ஆரம்பத்தில் வாழ்ந்த இறந்த காலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் இந்நாயக்-கர் ஆட்சியின் விளைவால்தம்மை 'மாவலிவாணாதிநாயக்கர்-என்று அழைத்துக் கொண்டிருக்க வேண்டியதாயிற்று. பதினோறாம் நூற்றாண்டிலிருந்து பாண்டியநாட்டில் வாழ்ந்த வாணாதிராயர்கள் இக்காலத்தில் பாண்டியநாட்டில் தொடர்ந்து தங்களது உரிமையை நிலைநாட்டி பலபோரிலும் பூசலிலும் ஈடுபட்டு இறுதியில் இந்நாயக்க மன்னர்கள்முன்னர் நிற்கமாட்டாது தோல்வியைத்தழுவ வேண்டியதாயிற்று.

## அடிக்குறிப்புகள்

### இயல் ஒன்று : முன்னுரை


1. Hultzsch ., — Epigraphia IndicaVol.XVIIIP.3
2. Eilot. Sir Walter., — Coins of southern India, London 1885.
3. Subramania Aiyar, K.V., — Historical sketches of Ancient Deccan Volumes, Modern printing works. Madras-1917.
4. Rangachariya, V., — A Topographical list of the Inscriptions of the Madras Presidency (3 Volumes) Madras 1919.
5. Sathyanatha Aiyar, R., — History of the Nayaks of Madura
6. Nilakanta Sastri., K. A., — Pandyan Kingdom 1 Luzac.and Co, London.1929

   2. A History of South India-From Prehistoric times to the fall of Vijayanagar, Oxford University Press, Madras-1955.
7. சதாசிவப் பண்டாரத்தார். தி.வை — 1. பிற்காலச்சோழர் சரித்திரம். அண்ணாமலைப் பல்கலைக்கழகம். அண்ணாமலைநகர் 1957, 1958.

   2. பாண்டியர் வரலாறு, கழகவெளியீடு திருநெல்வேலி-1940

3. தமிழிலக்கிய வரலாறு 13,14,15 நூற்றாண்டுகள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர்

8. இராமச்சந்திர தீட்சிதர், வி.ரா., மூன்றாம் குலோத்துங்கன் பி. வரதாச்சாரி கம்பெனியார் சென்னை-1041, 1946.

9 Mahalingam.T.V., 1. The Banas in South Indian History. Journal of Indian History Vol XXIX, Aug. 1951

2.(Ed) Summaries of Historical Manuscripts in the Meckenzie collection (Tamil and Malayalam) Madras University. 1972

10. Devakunjari.D. Madurai (Through the ages SAHER. Madras-1979

11. பரந்தாமனார் அ.கி, மதுரை நாயக்கர் வரலாறு, அல்லி நிலையம், சென்னை-1960

12. Husaini, S.A., History of the Pandya Country, Selvi Padippakam, Karaikudi-1962,

13 Krishnasamy,A., The Tamil country under Vijayanager Annamalai University. Annamalainager-1964.

14. Govindasamy M.S., 1. TheRole of Feudatories in Pallava Histroy, Annamalai

University, Annamalainagar 1965

2. The Role of Feudatories in Later Chola History, Annamalai University 1979

15. Balambal, V., Feudatories of south India.

16. நாகசாமி, இரா., 'புவனேகவீரன்காசு' கல்வெட்டு காலாண்டுஇதழ், இதழ்ஆறு. இராட்சச ஆண்டு' தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை.

2. Tamil Coins-A study, Institute of Epigraphy, Tamil nadu state Dept. of Archaeology, Madras - 1981.

17. இராமன், K. V., பாண்டியர்வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

18. Kasinathan, Natana., 'Coins of samarakolahala and Bhuvanekavira' prof. K.A. Nilakanta Sastri felicitation volume (PP.322 324)

19. ஜெயச்சந்திரன் A. V., வாணாதிராயர்கள் தொடர்பாக மதுரை வரலாற்றுக் கழகத்தில் படித்த கட்டுரை

20. முத்துக்கோனார் வாணாதிராயர்கள் தொடர்பாக மதுரை வரலாற்றுக் கழகத்தில் படித்த கட்டுரை.

21. விசயலெட்சுமி V. கலிபாடும்கல், கல்வெட்டு, காலாண்டு இதழ் இதழ்மூன்று, ஆனந்த ஆண்டு தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை. சென்னை.

22. இராசகோபால், சு. 'பாண அரசர்கள் - முதலாம் - மகேந்திரவர்மன் காலம் வரை' தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, திருச்சிமாவட்டக் கருத்தரங்கில் படிக்கப் பெற்ற கட்டுரை 1982.

## இயல் இரண்டு: பாண்டியர் காலம்

1. அ. கி. பரந்தாமனார், மதுரைநாயக்கர் வரலாறு பக். 123
2. ARE. 216 of 1938/39.
3. தென்கரை சிவன்கோயில் வடபுற அதிட்டானத்திலுள்ள கல்வெட்டு வெளியிடப்பெறாதது.
4. Prof. T. V. Mahalingam-'The Banas in South Indian History' Journal of Indian History, PP. 153-154, Aug 1951
5. Pudukottai state Inscriptions No. 673.
6. PSI No. 676.
7. PSI No. 653.
8. PSI No. 675.
9. PSI No. 677.
10. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக். 100-104.

11 Prof T. V. Mahalingam, Journal of Indian History, Vol XXIX Aug. 1951, PP. 293.

12. PSI No. 653.

13. PSI No. 678.

14. Ibid.

15. Journal of Indian Histoty Vol, XXIX Aug 1951 PP. 253-294

16. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார் — பாண்டியர் வரலாறு பக். 108-109

17. திருமதி. வி. விசயலட்சுமி எம். ஏ., கல்வெட்டு இதழ் ஆனந்த ஆண்டு, இதழ் 3

17A. ARE. 247 of 1941/42

17B. ARE. 255,258 of 1941/42

17C. ARE. 259 of 1941/42

17D. வி. ரா. இராமச்சந்திர தீட்சிதர், மூன்றாம் குலோத்துங்கன் பக். 57.

18. S. I. I. Vol. VIII No. 106

19 PSI No. 652

20. கள்ளங்காடு கல்வெட்டுக்கள் நேரில் படிக்கப்பட்டவை மதுரை மாவட்டம் மேலூர்வட்டம் வஞ்சிநகரத்துக் கர்ணம் திரு. மாணிக்கவாசகம் முதல் முதலில் கண்டு துறைக்குத் தெரிவித்தார் இவை இன்னும் வெளியிடப் படவில்லை.

21. Ibid

22. S. I. I. Vo1 No. V No. 414.

23. கள்ளங்காடு கல்வெட்டுக்கள்

24. S. I. I. Vo1 V No. 414
25. S. I. I. Vo1 V No. 301
26. S. I, I.Vo1 V No. 301, ARE 192 of 1943/44
27. ARE 311 of 1927/28
28. PSI No, 690
29. ARE 194 of 43/44
30, S' I. I. Vo1. V No. 301
31. S. I. I. Vo1. V. No. 301
32, ARE 192 of 1943/44

கிருஷ்ணன் கே. ஜி. 'திருவெம்பாவை' சாதாரி மதுரைக் கோயில் கும்பாபிசேகமலர் (1963) பக் 209-214

33. ARE 187 of 1943/44
34. ARE 311 of 1927/28
35. PSI No. 690
36. Alagarkoil Inscripti8n
37. Ibid
38. PSI No. 656.
39. ARE 194 of 1943/44
40. S. I. I. Vo1. V. No. 459.
41. PSI No. 492.
42. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, 'பக்,' 135-139
43. ARE 188 of 1943/44.
44. ARE 104 of 1916.
45. ARE 639 of 1917.
46. ARE 21 of 1931/32.
47. ARE 58 of 1916.
48. ARE 21 of 1931/32.
49. ARE 58 of 1916.
50. S. I. I. Vo1. VIII No. 403.
51. ARE No. 575 of 1922
52. ARE 188 of 1943/44.

53. ARE 46 of 1922.
54. ARE 1922 Part II Para 36.
55. ARE 46 of 1922.
56. PSI. No. 380.
57. ARE 430 of 1907.
58. PSI No. 375.
58A. இக்கல்வெட்டை கண்டறிந்தவர் தொல்லியல்துறை மாணவர் (1981-82) திரு. மாடசாமி ஆவார்.
59. PSI No. 375.
60. ARE 430 of 1907.
61. ARE 1905 Part II Para 45,
62. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், தமிழிலக்கிய வரலாறு 13, 14, 15 ஆம் நூற்றாண்டுகள்.
63. தஞ்சைவாணன்கோவை, பாடல் எண், 42, 112.
64. Ibid No. 4.
65. Ibid No. 3
66. Ibid No. 146.
67. Ibid No. 168.
68. Ibid No. 16.
69 Ibid No 227.
70 Ibid No 178.
71 Ibid No 356.
72 Ibid No 28
73 Ibid No 203
74 Ibid No 226
75 Ibid No 26
76 Ibid No 91
77 Ibid No 12
78 Ibid No 24
79 Ibid No 29
80 Ibid No 105
81. இச்சுவடி களவாய்வில் அறியப்பட்டது. இவ்வாய்வின் போது உடனிருந்தவர்கள் திரு. மா. சந்திரமூர்த்தி, பதிவு அலுவலர், தொல்பொருள் ஆய்வுத்துறை கீழடி

உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்கள் திரு. மா. பால சுப்பிரமணியம், திரு. திருவாசகம் முதலியோர் ஆவார்கள்.

82. தஞ்சைவாணன் கோவை பாடல் எண். 36

83. Ibid No. 16

84. Ibid No. 198

85 Ibid No 2

86 Ibid No 17

87 Ibid No 40

88 Ibid No 42

89 Ibid No 48

90 Ibid No 24

91 Ibid No 9

92 Ibid No 45

93 Ibid No 65

94 Ibid No 178

95 Ibid No 230

96 Ibid No 7

97 Ibid ARE 698 of 1916

98. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக் 140-142

99. தஞ்சைவாணன்கோவை, பாடல் எண். 5

100 Ibid No 106

101 Ibid No 18

102 Ibid No 55

103 Ibid No 71

104 Ibid No 53

105 Ibid No 266

106. ARE 286 of 1921
107. ARE 480 of 1922
108. ARE 418 of 1922
109. தஞ்சைவாணன் கோவை, பாடல் எண். 183
110. Ibid No. 356
111. PSI No. 380
112. தஞ்சைவாணன் கோவை, பாடல் எண். 359
113. ARE 373 of 1959/60
114. ARE 375 of 1959/60
115. ARE 306 of 1949/50
116. Ibid
117. PSI No. 624
118. Ibid
119. ARE 328 of 1923
120. ARE 4184 of 1958/59
121. ARE 309 of 1927/28
122. ARE 258 of 1963/64
123. ARE 10 of 1931/32
123A. ARE 13 of 1931/32
123B. இக்கல்வெட்டு தொல்லியல்துறைமாணவர் (1981-82) திரு. துரைபாண்டியனால் கண்டறியப் பெற்றது.
124. ARE 104 of 1916
125. ARE 216 of 1938/39
126. கள்ளங்காடு கல்வெட்டுக்கள், நேரில் படிக்கப்பட்டவை.
127. ARE 58 of 1966
128. ARE 311 of 1927/28
129. S. I. I. Vol. V No. 301
130. ARE 580 of 1966

131. ARE 430 of 1907

132 கள்ளங்காடு கல்வெட்டுக்கள், நேரில் படிக்கப்பட்டவை

133. ARE 188 of 1943/44

134. ARE 484 of 1958/59

135. ARE 1922 Part II Para 36

136. கள்ளங்காடு சிவன்கோயில் கல்வெட்டு

137. ARE 311 of 1927/28

138. ARE 104 of 1916

139. ARE 46 of 1922

140. ARE 430 of 1907

141. ARE 188 of 1943/44

141A. ARE 1923 para 35

142. கள்ளங்காடு சிவன்கோயில் கல்வெட்டு

143. PSI No. 492

144. தஞ்சைவாணன் கோவை, பாடல் எண், 359

145. PSI No. 380

146. PSI No. 452

147. ARE 188 of 1943/44

148. ARE 58 of 1916

149, ARE 639 of 1917

150. ARE 311 of 1927/28

150A. ARE 13 of 1931/32

151. PSI No. 656

152. ARE 373 of 1959/60

153. ARE 187 of 1943/44

154. ARE 194 of 1943/44

155. ARE 58 of 1916

## இயல் மூன்று, மகமதியர் காலம்


1. Wassaf in Elliot and Dowson The History of India as told by its own Historians London, 1871 Vol. III PP 53-54
2. S. I. I. Vol. VIII No. 247
3. தி. வை. சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக் 134-141
4. South India and her Muhammaden invaders by K. S. Krishna swamy Aiyangar Calcutta, 1923
5. K. A. N. Nilakanda Sastri, The Pandyan Kingdon, PP 245-246
6. மதுரைத்தலத்தார் வரலாறும் மதுரைக்கோயில் திருப்பணி மாலையும்-மதுரைத்தமிழ்ச்சங்கம் வெளியீடு
7. Ibid
8. ARE 64 of 1916
9. தி. வை சதாசிவப்பண்டாரத்தார், பாண்டிய வரலாறு பக்-154


## இயல் நான்கு: விசயவேந்தர்காலம்


1. Rangachariya, A Topographical list of inscriptions of the Madras Presidency PP 1173 Nos. 124, 129, 132.
2. தி. வை. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக்-154-155
3. மதுரை, தலத்தார் வரலாறு-மதுரை தமிழ்ச்சங்கம் வெளியீடு
4. Prof. T. V. Mahalingam. 'The Banas in South Indian History, Journal of Indian History PP. 300
5. ARE 567 of 1904; S. I. I. Vol. VIII 318; ARE 141 of 1903
6. மதுரை தலத்தார் வரலாறும் திருப்பணிமாலையும்-மதுரை தமிழ்ச்சங்கம் வெளியீடு

7. Pudukottai State Inscriptions Vol.Nos. 1461,1462, 1463 1464

8. டி. எஸ். இராமலிங்கம், இந்தியவரலாறு பக் 281-292

9. மதுரைதலத்தார் வரலாறு, மதுரைதமிழ்ச்சங்கம்வெளியீடு.

10. ARE 1923 para 41.

11. ARE 219 of 1928/29

12. ARE 572 of 1926.

13. Rangachariya. A Topographical list of inscriptions of the MADRAS Presidancy-Srivilliputhur-1788.

14. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு நேரில் படிக்கப்பெற்றது.

15. ARE 298 of 1955/56

16. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு, நேரில் படிக்கப்பெற்றது.

17. ARE 307 of 1929/30.

18. PSI 671

19. PSI 715

20. PSI 815

21. ARE 250 of 1890.

22 ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு நேரில் படிக்கப்பெற்றது.

23. Ibid.

24. Rangachariya, A Topographical list of inscriptions of the Madras Presidency Srivilliputhur-No. 178A.

25. ARE 319 of 1961/62

26. South Indian Temple Inscriptions No, CXXI Vol. II No. 880

27. ARE 572 of 1926

28. PSI. 671

29. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள் கோயில் கல்வெட்டு, நேரில் படிக்கப்பெற்றது.
30. Ibid
31. ARE. 258 of 1955/56
32. ARE 307 of 1929/30
33. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள் கோயில் கல்வெட்டு நேரில் படிக்கப்பெற்றது.
34. PSI 671.
35. ARE 250 of 1890
36. ARE 216 of 1938/39
37. ARE 373 of 1959/60
38. ARE 13 of 1931/32
39. S. I. I. Vol. VII No. 145
40 ARE 572 of 1926
41. Prof. T. V. Mahalingam 'The Banas in South Indian History, Journal of Indian History PP 301 Vol. XXIX Aug. 1951.
42. ARE 440 of 1916
42A. Prof. T. V. Mahalingam 'The Banas in South Indian History, Journal of Indian History PP. 301-302 Vol. XXIX Aug. 1951
43. Rangachariya, A Topographical list of inscriptions of the Madras Presidency, Srivilliputhur-No. 178B
44. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள் கோயில் கல்வெட்டு, நேரில் படிக்கப்பெற்றது.
45. ARE 577 of 1926
46. T. Desikachari-Dravidian Coins PP 16-17.
47. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள் கோயில் கல்வெட்டு, நேரில் படிக்கப்பெற்றது.

48. ARE 572 of 1976

49. Kanchipuram S. I. I. Vol IV 318: PSI 671.

50 S. I I. Vol, IV 318.

51. PSI 671

52. S I. I. Vol IV No. 348.

53. Ibid

54. Journal of Indian History-Vol xxlx Aug. 1951 PP 303

55. Ibid PP 302-303

56. ARE 572 of 1926

57. Rangachariya, A Topographical list of inscriptions of the Madras. Presidency Srivilliputhur-178B

58. ARE 577 of 1926

59. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு நேரில் படிக்கப்பெற்றது.

60. Rangachariya, A Topographical list of inscriptions of the Madras Presideney Srivilliputhur-178

61. South-Indian Temple Inscriptions No. cxxl Vol, II No, 880

62. ARE 219 of 1928/29

63. ARE 309 of 1929/30

64. S. I. I. Vol IV No, 348

65. PSI No. 671

66. PSI No 671

67 SII Vo IV No. 348

68 ARE 298 of 1955/56

69 ARE 85 of 1929

70 PSI No 815

71 PSI No 815
72 PSI No 715
73 PSI No 715
74 Ibid
75 ARE 577 of 1926
76 S. I. I. IV No 348
77. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு நேரில் படிக்கப்பெற்றது.
78. டாக்டர் இரா. நாகசுவாமி யாவரும் கேளிர் பக் 102
79 S. I. I. Vol. V No 521
80. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு நேரில் படிக்கப்பெற்றது.
81. டாக்டர் இரா. நாகசுவாமி, கல்வெட்டு இதழ் 6 இராச்சச ஆண்டு, ஆடித்திங்கள்.
82 PSI No. 671
83 PSI No 672
84 Ibid
85 ARE 228 of 1964/65
86 ARE 44 of 1908
87 ARE 583 of 1926
88 ARE No 584 of 1926
89 PSI No 504
90 S. I. I. Vol VIII No 447
91 ARE 225 of 1954/55
92 ARE 382 of 1961/62

93. PSI No. 672
94. Ibid
95. PSI No. 672
96. ARE 583of 1926 ARE 568 of 1926
97. ARE 584 of 1926
98. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு மகா மண்டபத்தின் தென்புறச் சுவரில் உள்ளது
99. Ibid
100. ARE 228 of 1964/65
101. ARE 44 of 1908
102. டி. எஸ், இராமலிங்கம், இந்தியவரலாறு பக் 266-268
103. PSI No. 172
104. S. I. I. Vol. VIII No. 183
105. S. I. I. Vol. VIII No. 395
106. S I. I. Vol VIII No. 399
107. ARE 113 of 1903
108. ARE 109 of 1903
109. S. I. I. Vol VIII No. 180
110. S. I. I. Vol VIII Nol 183
111. S. I. I. Vol VIII No. 407
112. ARE 121 of 1903
113. S. I I. Vol VIII No. 180
114 S. I. I. Vol VIII 395
115 S. I I. Vol VIII 399
116 ARE 113 of 1903
117 ARE 585 of 1902
118 S I. I Vol VIII No. 183
119 S I. I, Vol VIII No. 180
120 S. I. I. Vol VIII No. 183
121 S I. I. Vol VIII No. 399
122 S I. I. Vol VIII No. 395
123 ARE 109 of 1903
124 S. I. J. Vol VIII No. 180
125 S I. I. Vol VIII No 125

126 S I I Vol VIII No 126
127 S I I Vol VIII No 399
128 Ibid
129 Ibid
130 S I I Vol VIII No 180
131 S I I Vol VIII No 183
132 PSI No 715
133 PSI No 674
134 ARE 44 of 1908
135 S I I Vol VIII 399
136 Ibid
137 ARE 577 of 1926
138 PSI No 960
139 PSI No 815
140 S I I No IV 348
141 ARE 577 of 1926
142 PSI No 672
143 ARE 579 of 1926
144 PSI No 671
145 PSI No 672
146 S I I Vol VIII No 395
147 S I I Vol IV No 348
148 PSI No 672
149 S I I Vol VIII No 180
150 S I I Vol VIII No 180
151 S I I Vol VIII No 391
152 S I I Vol IV No 348
153 S I Vol VIII No 180
154 S I I Vol VIII No 180
155 PSI No 671
156. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு தேரில் படிக்கப்பெற்றது.
157 Ibid
158 PSI No 672
159. தி வை. சதாசிவப்பண்டாரத்தார் பாண்டியர் வரலாறு பக்-170

160 S I I Vol VIII No 180

161 S I I Vol IV No 348

162 S I I Vol VIII No 180

163 ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு நேரில் படிக்கப்பெற்றது.

164 PSI No 671

165 ARE 85 of 1929

166 M E R 31 of 1932

167 ARE 577 of 1926

168 PSI No 671

169 PSI No 671

170 S I I Vol IV No 348

171 Ibid

172 PSI No 671

173 Ibid

174 Elliot-Coins of Southern India

175 T. Desikachari-Dravidian coins PP 16-17

176 T. V. Mahalingam-Journal of History Vol XXIX 1951

177 நேரில் கேட்டது

178. N. Kasinathan, K. A. Nilakanda Sastri Felicitation Vol. PP 321-324

179. டாக்டர் இரா. நாகசுவாமி, கல்வெட்டு இதழ் 6 இராச்சச ஆண்டு, ஆடித்திங்கள்.

180 Ibid

181 குருப்பரம்பரை பிரபாவம் ஆருயிரம்படி பெரிய திருமுடியடைவு பக்-45

182 ARE 298 of 1955/56

183 South Indian Temple Inscriptions Vol II No 880

184 PSI No 815

185 ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோயில் கல்வெட்டு. நேரில்படிக்கப்பெற்றது.

186 S I I Vol VIII No 183

187 S I I Vol VIII No 182

188. மதுரை திருவாலயுடையார் திருக்கோயில் திருப்பணி மாலை பாடல் எண். 20

189 Ibid

190 Ibid no 21

191 Ibid

192 Ibi

193 Ibid No 22

194 ARE 583 of 1926; ARE 584 of 1926

195 ARE 219 of 1928/29

196 ARE 307 of 1929/30

197 225 of 1940/41

## இயல் ஐந்து : மதுரை நாயக்கர் காலம்

1. டாக்டர் மா. இராசமாணிக்கனார் தமிழக வரலாறு பக்-160-161
2. M E R 1906 186 and 1909 P 119
3. R Sathyanatha Iyer History of Madura Nayakas PP 52-60
4. Rangachariya A Topographical List of inscriptions of the Madras presidency Srivilliputhur 177A
5. Mahalingam T.V.Menuscripts Collections No 26Geneological Account of Gajjalappa Naidu of Gollapatti
6. அ. கி பரந்தமனார் மதுரை நாயக்கர் வரலாறு பக் 124-125
7. டாக்டர் மா. இராசமாணிக்கனார் தமிழகவரலாறு பக்-166
8. M E R 91 2f 1929
9. ARE 1 of 1931/32; M E R 1 of 1932
10. ARE 12 of 31/32
11. K N Radhakrishna Tirumalirunjolai malai Stala puran PP 129 and 249
12. g P S No 758

பின்னிணைப்பு

# வாணாதிராயர் வழங்கிய செப்பேடு

மதுரை மாநகரிலிருந்து இராமநாதபுரம் செல்லும் தேசிய நெஞ்சாலையில் நாற்பத்தாறு கிலோமீட்டர் தொலைவில் மானாமதுரை உள்ளது. மானாமதுரையின் நடுவே வைகையாறு ஓடி இவ்ஊர்பகுதிகளை இரண்டாகப் பிரிக்கின்றது வைகையாற்றின் கிழ்புறம் அமைந்த ஊர்பகுதி கீழ்கரை என்றும் மேல்புறம் அமைந்தபகுதி மேல்கரை என்றும் அழைக்கப்படுகின்றன. கீழ்கரைப்பகுதியில் பிற்காலப்பாண்டியர்காலத்தில் எடுத்துக்கட்டப் பெற்ற சிவன்கோயில் ஒன்று உள்ளது. மேல்கரைப்பகுதியில் இதே காலத்தினைச் சார்ந்த பெருமாள்கோயில் ஒன்று உள்ளது. இக்கோயிலின் தென்மேற்கே அமைந்துள்ள கன்னார்தெரு பகுதியில் முத்துமாரியம்மன்கோயில் என்றழைக்கப்படும் மாரியம்மன்கோயில் ஒன்று உள்ளது. இக்கோயிலுக்கென்று வாணாதிராயர் காலத்தில் செப்பேடு ஒன்று வழங்கப் பட்டிருக்கின்றது. இச்செப்பேடு தற்போது இக்கோயிலோடு தொடர்புடைய பண்டாரச் சமுகப்பிரிவினைச் சார்ந்த ஒருவரிடம் உள்ளது. இது இதுவரை வெளியிடப்பெறாத செப்பேடாகும்.

மானாமதுரை பண்டைக்காலத்திலிருந்து வரலாற்றுச் சிறப்புடன் விளங்கிய ஊராகும். முதல்சடாவர்மன் குலசேகரன் (கி. பி. 1190-1216) காலத்தில் இவ்வூர் 'மானவீரமதுரை' என்று அழைக்கப்பட்டிருக்கின்றது.[1] கி. பி. 10-ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த பாண்டிய மன்னன் சோழன் தலைகொண்ட வீரபாண்டியனுக்குரிய பெயராக 'மானவீரன்' என்ற பெயர் விளங்கியிருப்பதால்[2] இப்பெயரின் அடிப்படையில் இவ்வூர் மானவீரன்மதுரை என்று அழைக்கப்பட்டிருக்கலாம். பாண்டியர் காலத்திற்குப்

பிறகு இவ்வூர் 'வானரவீரைமதுரை' என்று அழைக்கப்பட்டு தற்போது மானாமதுரை என்று மருவி வழங்குகின்றது.

மானாமதுரை பிற்காலப்பாண்டியர் காலத்திற்குப் பின்னர் விசயநகர வேந்தர்க்குக் கட்டுப்பட்டு ஆண்ட வாணாதிரயர் ஆளுகைக்கு கீழ் விளங்கியுள்ளது. பழங்குறிப்புக்கள் வீரப்பநாயக்கன் (கி. பி. 1572-1595) காலத்தில் வாணாதிராயர் குலத்தினைச் சார்ந்த ஒருவன் மானாமதுரையைப் பலப்படுத்தி நாயக்கருக்கு எதிராகப் போராடியிருக்கின்றான் என்று குறிப்பிடுகின்றன.[3] தற்போது கிடைத்துள்ள செப்பேடு மானாமதுரையிலேயே வாணாதிராயர் பற்றி கிடைத்த முதல் சான்றாகும். பிற்காலப் பாண்டியர் காலத்திற்குப்பிறகு வாணாதிராயர் வழிவந்தோர் மானாமதுரையை தமது உறைவிடங்களில் ஒன்றாகக்கொண்டு கோட்டை முதலியன கட்டி வழ்ந்துள்ளர் என்பதை இது உறுதிப்படுத்துகின்றது. மாரியம்மன் வழிபாடு பற்றி தமிழகத்தில் கிடைத்த செப்பேடுகளில் இது பழமையான செப்பேடாகும். இதுவரை விசுவநாத நாயக்கன் காலத்தினைச் சார்ந்ததாகக் சொல்லப்படும் வீரபாண்டி மாரியம்மான் செப்பேடு ஒன்றும் இராமநாதபுரம் இராஜகுலமாரியம்மன் பற்றிய செப்பேடு ஒன்றும் தமக்குக் கிடைத்துள்ளன.[4] இவையிரண்டும் மானாமதுரைச் செப்பேட்டிற்குப் பிற்பட்ட காலத்தினைச் சார்ந்தவையாகும் கி.பி.15-ஆம் நூற்றாண்டில் மாரியம்மன் வழிபாடு பாண்டிய நாட்டுப்பகுதியில் சிறப்புடன் விளங்கியிருக்கின்றது என்பதை மானாமதுரை மாரியம்மன் செப்பேடு காட்டுகின்றது.

செப்பேட்டின் அமைப்பு

இச்செப்பேடு ஒரே ஏடாக உள்ளது. இதன் அளவு 24.3 செ. மீ X 11. 8செ.மீ. ஆகும். செப்பேட்டின் இருபுறமும் சீரானமுறையில் செப்பேட்டின் செய்தி நாற்பத்தேழுவரிகளில்

எழுதப்பெற்றுள்ளன. வரிகள் நேராகவும் எழுத்துக்கள் ஒரேமாதிரியாகவும் காணப்படுகின்றன. செப்பேட்டின் பக்கவாட்டில் தாமரைவடிவில் இதழ் வெட்டப்பட்டுள்ளது. அதில் மொட்டுபோன்றபகுதியில் துளை ஒன்று இடப் பெற்றுள்ளது. இச்செப்பேட்டினை எழுதியவன் திருமாலிருஞ் சோலை அழகர் எனபவன் ஆவான். அவனது ஒப்பம் செப் பேட்டின் இறுதியில் காணப்படுகின்றது.

வாணாதிராயர்கள் பற்றி பாண்டியநாட்டில் கிடைத்த செப்பேடுகளில் இதுவே முதற்செப்பேடாகும் இச்செப்பேடு ஆண்டியேந்தல் என்ற பகுதி 'ஆராக்கியதானமாக' 'மாரியம்மன் திருவிளையாடல்யேந்தல்' என்றபெயரில் சர்வமானியமாக மாரியம்மனுக்கு அளிக்கப்பட்டதையும் மாரியம்மனுக்கு மண்டபம்கட்டியதையும் பூசைக்குவேண்டியது செய்ததையும் தெரிவிக்கின்றது. செப்பேடு தொடக்கத்தில் சகஆண்டினையும் அடுத்து வாணாதிராயனின் பட்டப் பெயர்களையும் எடுத்துக்கூறுகின்றது. தொடர்ந்து தானம் வழங்கப்பட்ட தன் நோக்கம், தானம் வழங்கப்பட்ட பொருள் பற்றிய விளக்கம், தானத்தினைக் காப்பவர்பெறும் பயன், அழித்தவர் அடையும் தீமை ஆகியவற்றையும் நிரல்பட எடுத்துக்கூறுகின்றது. செப்பேட்டின் இறுதியில் செப்பேட்டை எழுதியவர் பெயரும் ஒப்பமும் கலித்துறை பாடல் ஒன்றும் காணப்படுகின்றன.

காலம்

செப்பேடு எழுதப்பெற்ற காலமாக சகஆண்டு குளஅயசா குரோதி ஆண்டு, ஆனிமாதம், பதினேழாம்,தேதி குறிப்பிடப் படுகின்றது. இதில் வரும் சகஆண்டினைக் கணக்கில் கொண்டால் இச்சகஆண்டு கி. பி. 1264ல் வரும் ஆங்கில ஆண்டோடு ஒத்துப்போகின்றது. இக்காலத்தில் பாண்டி

நாட்டில் இச்செப்பேட்டில் குறிப்பிடப்படும் வாணாதிராயர் ஆட்சி இல்லை. இவர்கள் கி.பி.15-16ஆம் நூற்றாண்டிலேயே இப்பகுதிகளில் ஆட்சிபுரிந்திருக்கின்றனர் என்று அவர்களது கல்வெட்டுக்கள் நமக்கு தெரிவிக்கின்றன.[5] மேலும் செப்பேட்டின் எழுத்தமைதி கி.பி.15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் காணப்படுவதால் இவ்வாண்டுக்குறிப்பு தவறாக எழுதப்பெற்றிருக்க வேண்டும் எனத்தோன்றுகின்றது. செப்பேட்டில் குறிப்பிடப்படும் சக ஆண்டு 1384 என்று எழுதுவதற்குப் பதிலாக இரண்டாவதாக வரும் எண் எழுத்தான '3' விடப்பெற்று 1386 என்று எழுதப்பெற்றிருப்பதாகத் தோன்றுகின்றது. எனவே இதில் குறிப்பிடப்படும் சக ஆண்டை 1386ஆம் ஆண்டாகக்கொள்வோமானால் இச்செப்பேடு கி. பி.1464-ஆம் ஆண்டில் எழுதப்பெற்றதாகக் கொள்ளலாம் தமிழ் ஆண்டினைக் கணக்கிட்டு பார்த்தால் குரோதி ஆண்டு கி. பி. 1484லேயே வருகின்றது. 1264-ல் வரவில்லை. எனவே இச்செப்பேடு 1464 அல்லது 1484ஆம் ஆண்டில் எழுதபெற்றிருக்கலாம் இக்காலப்பகுதியே வாணாதியர் பாண்டியநாட்டில் ஆட்சி புரிந்த காலமாகும் மேலும் இச்செப்பேட்டில் குறிப்பிடப்படும் வாணாதிராயனின் கல்வெட்டுக்களும் இப்பகுதியில் காணப்படுவது[6] இம்முடிவை வலியுறுத்துகின்றது. இச்செப்பேட்டில் காலக்குறிப்பு தவறுதலாக குறிப்பிடப்பட்டிருக்கின்றது எனக் கருதாலம்.

## செப்பேடு குறிக்கும் வாணாதிராயன்

இச்செப்பேட்டில் வாணாதிராயர் தலைமுறை வழி குறிப்பிடப்படவில்லை. சுந்தரத்தோள் மாவலி வாணாதிராயன் என்ற ஒருவன் மட்டும் குறிப்பிடப்படுகின்றான். இவன் திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலி வாணாதிராயன்என்ற வாணாதிராயனின் மகனாவான் இவன் ஆட்சி புரிந்த காலம் கி. பி.15

ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்.[7] பாண்டிய நாட்டில் இவனது ஆட்சி இன்றைய மதுரை, இராமநாதபுரம், புதுக் கோட்டை ஆகிய மாவட்டப்பகுதிகளில் இருந்திருக்கின்றது. இவனது கல்வெட்டுக்கள் நெக்கோணம் (கி.பி. 1483) [8]மதுரை மாவட்டத்தில் குன்னத்தூர் (கி.பி. 1487) [9] மேட்டிப்பட்டி (கி.பி.1488)[10] இராமநாதபுரமாவட்டத்தில் ஸ்ரீவில்லிபுத்தூர்[11] ஆகிய இடங்களில் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டுக்களிலும் இவன் இச்செப்பேட்டில் குறிப்பது போன்று சுந்தரத் தோளுடையான் மாவலிவாணாதிராயன் என்றே குறிப்பிடப் படுகிறான். எனவே இச்செப்பேட்டை சுந்தரத்தோளுடை யான் மாவலிவாணாதிரயனுக்குரியதாகக் கொள்ளலாம்.

*சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன்*

செப்பேட்டில் காலக்குறிப்பினை அடுத்து சுந்தரத்தோளு டையான் மாவலிவாணாதிரயனின் பட்டப்பெயர்களாகப் பின்வரும் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

| | |
|---|---|
| மகாமண்டலேஸ்வரன் | பரராசதெண்டதாம் |
| மூவராயகண்டன் | (மரண ஆவுணன்) |
| மதியாத மன்னர்மணவாளன் | கெருடகேதனன் |
| சுமரகோலாகலன் | கெங்காத்துலோத்துபவன் |
| வீரசஞ்சுகன் | இரணியகெற்பாவத்தாரனவன் |
| வேதியர்காவலன் | (வைத்துஷணி(பா) துரந்தரன் |
| புவனேகவீரன் | சேதுமூலாடசாதுரநதாரணன் |
| பூபாலகோபாலன் | அழகர்தன்சிறுதத்தன் |
| பட்டமானங்காத்தான் | அழகர்சரணாலையன் |

இவற்றில் காணப்படும் பட்டபெயர்கள் பல இவனது கல் வெட்டுக்களிலும் காணப்படுகின்றன.[12] அழகர்சரணாலையன் இரணியகெற்பாவதாரணன், (வைத்துஷலி(பா) துரந்தரன் என்ற பெயர்கள் கல்வெட்டுக்களில் காணப்படாத இச்செப்

பேட்டில் குறிக்கப்பெறும் இவ்வாணாதிராயனுக்குரிய புதிய பட்டப்பெயர்களாகும்.

இவன் காலத்தினைச்சார்ந்த வாணாதிராயர்கள் பாண்டிய நாட்டு அழகர்கோயிலான திருமாலிருஞ்சோலையைத் தலைநகராகக் கொண்டு அங்குள்ள சுந்தரராசபெருமானிடம் அளவிறந்த அன்புகொண்டு ஆட்சிபுரிந்தவர்கள் ஆவார்கள். எனவே தங்களை அழகர்தன் சிறுதத்தன் என்று அழைத்துக்கொண்டார்கள். இச்செப்பேட்டில் இவ்வாணாதிராயன் அழகர்சரணாலையன் என்றும் தன்னை அழைத்துக்கொண்டிருக்கிறான், மேலும் இக்கால வாணாதிராயர் கல்வெட்டுக்கள் பல அழகர் திருவுள்ளம் என்று முடிவதையும் 13 தொடங்குவதையும் 14 மாபாகக்கொண்டுள்ளன. இச்செப்பேடும் செய்தியின் முடிவில் அழகர்திருவுள்ளம்" என்றே முடிவடைகின்றது. இவையெல்லாம் இச்செப்பேடு கி.பி. 15–ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வாணாதிராயரால் வெளியிடப்பெற்றது என்பதை உறுதிபடுத்துகின்றது. சேதுமூலாடசாதுரந்தாரணன் என்ற பட்டப்பெயர் சுந்தரத்தோளுடையான் கல்வெட்டுக்களில் சேதுமூலராக்ஷதுரந்தன் என்று குறிப்பிடப்படுகின்றது. மானஆவுணம் என்று செப்பேட்டில் குறிப்பிடப்பெறும் பெயர் மானபூஷணன் என்பதன் தவறானவடிவமாக இருக்கவேண்டும்.

செப்பேட்டுச்செய்தி

சுந்தரத்தோள் மாவலிவாணாதிராயர் காலத்தில் அவனுக்குக் கட்டுப்பட்டு மாணாமதுரையில் இராக்கப்பராசர் என்பவர் அரண்மனைகட்டிக்கொண்டு இருந்திருக்கின்றார். மகளாக விளங்கிய அலங்காரம்மாளுக்கு உடல்நலமின்றி இருந்தமையால் உடல் நலம் பெற மாணாமதுரை மாரியம்மனை வேண்டிக்கொண்டார். தனது மகள் உடல் நலம் பெற்றதும் அம்மகிழ்ச்சியில் மாரியம்மனுக்கு ஆரோகிய

தனமாக ஆண்டியேந்தல் என்ற பகுதியை 'மாரியம்மன் திருவிளையாடல் யேந்தல்' என்றபெயரில் தானமாக அளிக்கச் செய்துள்ளார் மேலும் மாரியம்மனுக்கு மண்டபமும் கட்டுவித்துள்ளார்.

இராக்கப்பராசர் மண்டபம் கட்டுவித்த மாரியம்மன் கோவில் தற்போது முத்து மாரியம்மன் என்ற பெயரில் மானாமதுரை கன்னாரத்தெருவில் விளங்கி வருகின்றது தற்போது இது புதியதாகக் கட்டப்பட்ட சன்னதியுடன் விளங்குகின்றது. இராக்கப்பராசர கட்டுவித்தமண்டபம் தற் போது இங்கு இல்லை. ஆனால் பழைய மாரியம்மன் சிற்பத் தின் தலைமட்டும் இக்கோயில் வெளிப்புறத்தில் உள்ளது

இராக்கப்பராசர் மகளுக்குலந்த நோய் அம்மைநோயாக இருக்கலாம். எனவே தான் இதற்குத் தானமாக வழங்கப் பட்ட நிலப்பகுதி அம்மன் விளையாடியதற்காக விடப்பட்டது என்ற பொருளில் 'மாரியம்மன் திருவிளையாடல் ஏந்தல்' என்று குறிப்பிடப்படுகிறது. ஆண்டியேந்தல் இராக்கப்ப ராசாவின் அரண்மனைக்குக்கிழக்கேயும் தும்பிச்சிகிணற்றிற்கு மேற்கேயும் வண்ணான் ஒடைக்குதெற்கேயும் கோனாப் பள்ளத்திற்கு வடக்கேயும் உள்ளடங்கிய பகுதி என செப்பேட்டில் குறிக்கப்படுகின்றது மானாமதுரையில்இப்பகுதி தற்போது மாரியம்மன்கோவிலுக்கு கிழக்கே சற்றுதூரத்தில் ஆண்டியேந்தல் என்ற பெயரிலேயே உள்ளது இச் செப்பேட்டில் சொல்லப்பட்ட எல்லைகள் இன்னும் இப்பகுதியில் வேறுபெயரில் காணப்படுகின்றன. இராக்கப்ப ராசா அரண்மனை மட்டும் தற்போது சிலதந்த நிலையில் அரண்மனை மேடு, கல்கோட்டை என்று அழைக்கப் படுகின்றது. தும்பிச்சி கிணறு என்பது பரமக்குடிப்பகுதியில் ஆட்சி செய்த தும்பிச்சிநாயக்கன் தலைமுறைப் பெயரை நினைவூட்டுகின்றது வண்ணான்ஒடை இன்று இப்பகுதியி லுள்ள வண்ணான்குளத்திற்கு அருகிலுள்ளது.

ஆண்டியேந்தலைத் தானமாக வைத்துக்கொண்டு பண்டாரசன்னதி அய்யா முன்பாக வானரவீரமதுரை (மானாமதுரை) பச்சைசந்தய்யராகிய காரணகுருவாகிய அய்யாகுமரனும் சொக்கய்யா நமச்சிவாயபண்டாரமும மாரியம்மனுக்கு பூசையும் செய்து வர இச்செப்பேட்டின்மூல ஆணைவழங்கப்பட்டிருக்கின்றது, மேலும் இப்பகுதிகளில் குடிகளாய்இருந்த சுந்தம்பாவண்டன், பொன்னைமூக்கு போவணடன், மாரியப்பன்போவண்டன், அழகாத்திரி போவண்டன், வெண்டிப்போவண்டன், ஆகியோரை சார்ந்தவர்கள் ஆண்டிற் கொருமுறை இதற்காக குடிக்கொரு பணம் கொடுக்கவேண்டும் என ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது இக்குடிப்பணத்தையும் ஆண்டியேந்தல் தானத்தையும் கொண்டு இப்பூசையும் திருவிளக்கும் செய்துகொண்டு வரவேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது. பூசை செய்வோர் இவர்களுக்கு குலக்குருவாய் இருந்துவரவேண்டும் என்று இதில் தெரிவிக்கப்பட்டுள்ளது. போவண்டன் என்று குறிப்பிடப்படும் இவர்கள் தற்போது எந்தச் சமூகத்தினராக விளங்குகின்றனர் என்று திட்டவட்டமாகத் தெரியவில்லை. ஆனால் தமிழ் இடையர்களுள் ஒருபிரிவினர் போகண்டன் என்றழைக்கப்பட்டுள்ளனர்[15] இவர்கள் பாளையக்காரர் களுக்கும் தெய்வத்திற்கும் பல்லக்குத் தூக்கும் பணிபுரிந்திருக் கின்றனர். இச்சமூகத்தினரே செப்பேட்டில்போவண்டன் என்று குறிப்பிடப்படும் சமூகத்தினராக இருக்கலாம்.

இச்செப்பேட்டில் குறிப்பிடப் படும்பண்டார சமூகத்தினரே இன்று தமிழ்நாட்டு கிராமங்களில் பலஇடங்களில் பூக்கட்டு கின்றவர்களாகவும் அம்மன்கோயில்களின் பூசாரியாகவும் விளங்கும். 'பண்டார சமூகத்தினர்' ஆவார்கள். செப்பேட்டில் குறிப்பிடப்படும் மாரியம்மன்கோயில் தற்போதும் இவர்களுக் குரியதாக இவர்களால் வழிபடப்பெறுவதாகவும் உள்ளது குறிப்பிடத்தக்கது இக்கோயிலைச் சுற்றிலும் இப்பண்டார

சமூகத்தினரே தற்போது அதிகமாக வாழ்ந்து வருவதும் குறிப்பிடத்தக்கது. இவர்கள பண்டார சமூகத்திலுள்ள பதினேழு பிரிவுகளில் சங்கமர் சாதியினைச் சார்ந்தவர்கள் ஆவார்கள். கர்நாடகப்பகுதிகளிலுள்ள லிங்காயத்தவர் களோடு தொடர்புடையவர்கள் ஆவார்கள். இவர்களது குடியேற்றம் தமிழ்நாட்டில் கி. பி. 13 ஆம் நூற்றாண்டி லிருந்து ஏற்பட்ட ஹொய்சளர் படையெடுப்பின் போதும் அவர்கள் ஆட்சி தமிழ்நாட்டில் நடைபெற்ற போதும் கி. பி 14.ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு தமிழ்நாட்டில் நடைபெற்ற விசயநகரவேந்தரின் ஆட்சியின்போதும் பெருவாரியாக நடைபெற்றிருக்கவேண்டும். இச்சமூகத்தின் ஒருபிரிவினரே மானாமதுரையில் மேற்கண்ட காலப் பகுதிகளில் குடியேறி மாரியம்மனை வழிபட்டிருக்கவேண்டும். இவர்கள் தற்போது பங்குனி மாதத்தில் இம்மாரியம்மனை முளைப்பாரி எடுத்து வழிபட்டு வருகின்றனர். இவர்கள் தவிர சிவகெங்கைப் பகுதியிலுள்ள ஏழு ஊர்காரர்களும் ஆடி மாதத்தில் வந்து வழிபட்டுச் செல்கின்றனர். இவர்களில் பெரும்பாலோர் தெலுங்குபேசும் நாயுடு சமூகத்தினராக வளையல்கார செட்டிமாராக உள்ளது குறிப்பிடத்தக்கது.

## மாரியம்மன் வழிபாடு

மாரியம்மன் வழிபாடு கர்நாடகம், தெலுங்குப் பகுதிகளிலிருந்து தமிழ்நாட்டிற்கு வந்தது என்று சமூக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்[16] தமிழ்நாட்டில் மாரியம்மன் என்ற பெயரில் கோயில்கட்டி வழிபாடு செய்தது விசயநகரத்திற்கு முன்பு இருந்ததாகக் கல்வெட்டுக்கள் செப்பேடுகள் சான்று காட்டவில்லை. கொடியநோய்களும் பிறநோய்களும் வந்தால் அதனை ஒழிக்க காளி போன்ற தெய்வங்களை வழிபட்டுவந்த நிலையும் அவளுக்கு உயிர்பலி

கொடுத்து வந்த நிலையும் தமிழ்நாட்டில் கி. பி. 14-ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் இருந்துள்ளதைக் கல்வெட்டுக் களும் அயல்நாட்டார் குறிப்புக்களும் காட்டுகின்றன. காளையார்கோவிலுக்கு அருகிலுள்ள வல்லம் என்ற ஊரில் தன் தலைவனுக்கு வந்த நோயினை நீக்க தன்தலையை அரிந்து காளிக்குப் பலி கொடுத்ததைக் குலோத்துங்க சோழன் கல்வெட்டு ஒன்றில் காணமுடிகின்றது. கணணகியுங் கூட கொற்றவை, அறுவர்க்கு இளையநங்கை (சாமுண்டா) காளி, துர்க்கை என்று சிலம்பில் உவமித்துக் கூறப்படுகின்றாள்.[17] அவளை வெப்புநோய் நீங்குவதற்காக மழைவளம்வேண்டி வழிபட்டதை சிலப்பதிகாரம் உரைபெறு கட்டுரையில் காணமுடிகின்றது. கி. பி. 14 – ஆம் நூற்றாண்டிற்குப்பின்னர் மேற்கண்ட தெய்வங்களுக்குரிய தன்மையையும் அதற்காகச்செய்யப்படும் வழிபாட்டினையும் தமிழ்நாட்டிற்கு அப்பாலிருந்து வந்த மாரியம்மன் பிடித்திருக்கவேண்டும். தெலுங்குப் பகுதியிலுள்ள 14ஆம் நூற்றாண்டிற்கு முன்புள்ள கல்வெட்டு ஒன்றிலேயே மாரியினால் ஏற்பட்ட காய்ச்சல் 'மாரிசுரம்' என்று குறிப்பிடப்படுகின்றது.

கி. பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சேந்தன் திவாகரம் 'காடுகாள்' என்ற தாய்த்தெய்வத்திற்கு 'மாரி' என்ற பெயர் இருந்ததைக் காட்டுகின்றது.[18] இக்காடுகாளுக் கென்று சோழர்காலத்தில் கிராமங்களில் கோயில் இருந்துள்ளதைக் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன.[19] இக்காடுகாளின் தன்மைகளில் ஒன்றே பிற்காலத்தில் மாரியம்மனாக தமிழ்நாட்டில் வழிபடப்பெற்றிருக்கலாம் என்றுதோன்றுகின்றது. இக்காடுகாளுக்கு 'வடுகி' என்ற பெயர் இருந்ததையும் 'சேந்தன்திவாகரம்' குறிப்பிடுவதால் இத்தெய்வம் வடுகர் வாழும் தெலுங்கு கர்நாடகப் பகுதிகளிலிருந்து வந்தது என்று கருதுவதற்கு இடமேற்-

படுகின்றது. இத்தெய்வத்தை ஆஸ்டிரிக் பழங்குடிமக்களிட-மிருந்து பெற்ற தாய்த்தெய்வம்[20] எனவும் மாரி என்ற தெய்வம் அம்மைநோயை உண்டுபண்ணுபவள் மழையைத் தருபவள் என்ற கருத்து இந்தியா முழுவதும் நிலவிவருகின்றது எனவும் பலுச்சிஸ்தானத்தில் கூட இந்தத் தெய்வத்தை நாநீ மாரி நாநீ என்று அழைக்கின்றனர் எனவும் இத்தெய்வத்திற்கு ஒரு யாத்திரையும் நடக்கின்றது எனவும் கருதுகின்றனர் [21]

மாரி என்ற சொல்லிற்கு மரணத்தையும் [22] கொடிய நோயையும் [23] தருந்தெய்வம் என்று பொருள் கூறப்படுகின்றது. பிங்கலநிகண்டில் மாரி என்ற சொல்லிற்கு மழை, முகில், மரணம், மது, வடுகி, நோய், புள் என்று கூறப்பட்டிருக்கின்றது. [24] மாரியம்மனை மழையைக் குறிக்கும் 'மாரி' என்ற சொல்லினால் பெயர் பெற்ற தெய்வம் என்று கொள்வதைவிட மரணத்தைக் குறிக்கும் சொல்லின் அடியாக பெயர் பெற்ற தெய்வமாகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகின்றது. அதன் வரலாறும் தன்மையும் இம் முடிவிற்கே நம்மைக் கொண்டு செல்கின்றது. மாரா என்ற சொல்லிற்கு அழிவையும் மரணத்தையும் கொடுக்ககூடியது என்று பொருளாகும். புத்தமத கதைகளில் 'மாரா' என்ற ஆண்பாற்கடவுள் அழிவைக் கொடுக்கக்கூடிய கடவுளாகச் சித்தரித்துக்காட்டப்பட்டிருப்பது [25]இங்கு குறிப்பிடத்தக்கது.

மாரியமமன் வைதீக மதத்தினைச் சார்ந்த பெருந் தெய்வங்களின் பட்டியலில் இடம்பெறவில்லை. வேதகால இலக்கியங்களிலும் இவள்பெயர் குறிப்பிடப்படவில்லை. பிற்காலத்தினைச் சார்ந்த சிற்பசாத்திர நூற்களிலேயே இவள் இடம் பெறுகின்றாள். ஆரியர் அல்லாத இந்திய மக்களுக்குரிய நாட்டுப்புறத்தெய்வமாக இவள் விளங்கியிருக்கவேண்டும். கொடியநோய்கள் தோன்றுவதற்கும்

பரவுவதற்கும் உரிய காரணங்களை அறிவு பூர்வமாக அறிந்து போக்குவதற்கு வழியறியாது அவற்றால் ஏற்படும் மரணத்தை எண்ணிக் கலங்கிய நாட்டுப்புறமக்கள் அச்சத்தின் காரணமாக அவை தங்களையும் மீறிய ஒரு சக்தியின் விளைவாக ஏற்படுகின்றன என்று நம்பினர். இந்நம்பிக்கையின் காரணமாக அச்சக்தியினை ஓர் உருவம் கொடுத்து வழிபடலாயினர். இவ்வழிபாடே மாரியம்மன் வழிபாடாக உருவெடுத்தது எனலாம்.

இவளது வழிபாடு ஆரம்பகாலத்தில் தெலுங்கு கர்நாடகப்பகுதிகளிலேயே சிறப்புடன் விளங்கியிருந்தமைக்குச் சான்றுகள் உள்ளன. கி பி ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்த கன்னடமொழியிலமைந்த ஆதிபுராணத்தில் மாரி போரினால் ஏற்படும் மரணத்தினைக்கண்டு மனமகிழ்ந்து கொண்டாடும் இறப்புத் தெய்வமாக காட்டப்பெற்றுள்ளாள்.[20] கி.பி.12-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கன்னட வசனம் சுடுகாட்டில் இருக்கும் மாரியிடம் மக்கள் சென்று அங்கு அவளுக்கு ஆடுவெட்டிப் பலிகொடுத்து வழிபடுகின்றனர் என்று கூறுகின்றது.[27] மேற்கண்ட கன்னடமொழி சான்றுகள் மாரி என்ற பெயரில் இத்தெய்வம் அங்கு கி பி 12-ஆம் நூற்றாண்டிற்கு முன்பிருந்தே சிறப்புடன் வழிபடப் பெற்றதைக் காட்டுகின்றன. மேலும் இவள் சுடுகாட்டில் உறைந்த தெய்வம் என்றும் உணரமுடிகின்றது. தமிழ் நாட்டில் காடுகாளுக்கு வடுகி, மாரி என்ற பெயர்கள் இருந்துள்ளன. இது மாரியம்மனுக்கும் காடுகாளுக்கும் உள்ள உறவைக்காட்டுகின்றது. இதனால் காடுகாளும் மாரியம்மனும் ஒரே பெண் தெய்வமே என்று கருதும் ஆய்விற்கு கொண்டு செல்கின்றது. தக்க சான்றுகள் கிட்டும் வரை இதனைத் துணிந்து கூறஇயலாது. ஆனால் கி.பி.15-ஆம் நூற்றாண்டிலிருந்தே தமிழ்நாட்டில் மாரியம்மன் என்ற பெயரில் வழிபாடு

செய்யப்பட்டதற்கே இதுவரை நமக்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. இத்தெய்வம் தமிழ்நாட்டிற்கு கி. பி. 15ஆம் நூற்றாண்டிற்கு முன்பு நடைபெற்ற ஹொய்சளர், விசயநகர வேந்தர்கள் படையெடுப்புகளாலும் ஆட்சியினாலும், அக்காலத்தில் கர்நாடகப்பகுதிகளிலிருந்து வந்த குடியேற்றங்களாலும் தமிழ்நாட்டிற்கு வந்து கி. பி. 15ஆம் நூற்றாண்டளவில் தமிழ்நாட்டில் பலர் வணங்கும் தெய்வமாக மாறியிருக்க வேண்டும். இதனைத் தமிழ்நாட்டுநாட்டுப்புறப்பாடல்களும்[26] வலியுறுத்துகின்றன. இன்று தமிழ்நாட்டில் மாரியம்மன் வழிபாடு சிறப்புடன் காணப்படும் சமயபுரம் கி. பி. 13ஆம் நூற்றாண்டில் கண்ணனூர் என்ற பெயரில் ஹொய்சளர் தலைநகராக சிறிது காலம் விளங்கியிருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

மாரியம்மனை இச்செப்பேடு சிறப்புமிக்க தெய்வமாக ஒருபுறம் காட்டியபோதிலும் மறுபுறம் உயர்ந்த இடத்தைப் பெற்ற தெய்வமாக மாரியம்மன் தமிழக மக்களிடையே விளங்கவில்லை. கடைத்தரத்தினைப் பெற்ற தாயாக விளங்கினாள் என்று காட்டுகின்றது. இச்செப்பேட்டில மாரியம்மன்'கடையின மாதாவாகிய மாரியம்மன்' என்று குறிப்பிடப்படுகின்றாள். இதேவேளையில் இச்செப்பேட்டின் இறுதியில் மாரியம்மன் உமையபமையோடு ஒப்பிடப்பெற்று போற்றப்படுகின்றாள். அவளுக்கென்று அளித்த அறத்தை வளர்க்க நினைந்தவர்கள் வானவர் கூட்டத்தில் இருக்கும் பேற்றைப்பெறுவார்கள். அதனை அழிக்க நினைத்தவர்கள் கிழாகிய நரகத்தில் போவார்கள் என்று பின்வரும் கருத்தமைந்த பாடலோடு இச்செப்பேடு முடிவடைகின்றது.

அடுக்களி யாமல் இருநாளில் நெற்கொண்டு அறம் வளர்க்கும்
வடுக்கண்ணி யாள்உமையாள் தனக்கென வாய்த்தஅறம்
எடுக்க நினைத்தவர்வானவர் கூட்டத்தில இருப்பர் இதைக்
கெடுக்க நினைத்தவர் கீழ்வாய் நரகில் கிடப்பவரே.

இம்மாரியம்மனை வெறும் நோயைப்பரப்பும் தெய்வமாக மட்டும் ஒரு சாரார் கொண்டுள்ளனர்[29] ஆனால் நோயை பரப்புவதோடு மட்டுமல்லாமல் அதனை போக்கவும் வல்ல தன்மையும் உடையவள் மாரி என்ற கருத்திற்கு[30] தமிழ் நாட்டில் கிடைத்த பழமைச் சான்றாக இச்செப்பேட்டுச் செய்தியைக் கொள்ளலாம். மேலும் தமிழ்நாட்டில் குறிப்பாக பாண்டிய நாட்டுப்பகுதியில் இராக்கப்பராசா போன்ற உயர் குடி மக்களும், நடுத்தர மக்களும் பிறகும் மாரியம்மனை கி. பி. 15ஆம் நூற்றாண்டிலேயே வழிபடும் நிலைக்கு வந்துள்ளதையும் நமக்கு இச்செப்பேடு காட்டுகின்றது. இம்மாரியம்மன் சென்ற நூற்றாண்டுவரை எருமை, ஆடு, கோழி, முட்டை முதலியன பழியிட்டும் படைத்தும் வழிபடும் அசைவதெய்வமாக விளங்கியுள்ளது.[31] இந்நூற்றாண்டில் அந்நிலைமாறி சைவதெய்வமாக அந்தணர்கள் பூசாரிகளாக இருந்து பூசைசெய்யும் நிலைக்கு உயர்ந்துள்ளது. எல்லா தரத்து மக்களாலும் வழிபடப்பெறுகின்றது. இருந்த போதிலும் மற்றொருபுறம் தமிழ்நாட்டுக்கிராமப்புறங்களில் பல இடங்களில் மாரியம்மனுக்கு அந்தணர் அல்லாதவர்கள் பூசாரிகளாக இருந்து வழிபாடு செய்கின்றனர். குருதிப்பலி கொடுத்து வழிபடுகின்றனர்.

செப்பேட்டு வரிகள் -

(முன்பக்கம்)

1. உ ஸவஸ்தஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 1(3)86 இதன் மே
2. ல்ச் செல்லாநின்ற குறோதி (ஆ)னிமீ யாஉ ஸவஸ்தஸ்ரீம
3. காமண்டலேசுபரன் மூவராயகண்டன் மதியாத மண்ண
4. ர் மணவாளன் சமரகோலாகலன் வீரகஞ்சுகன் வேதியர்.
5. காவலன் புவனேகவீரன் பூபாலகோபாலன் பட்டமான
6. ங்காத்தான் பராசதெண்டதரன் மானஆவுணன் கெருட
7 கேதனன் கெங்காத்துலோத்துப்பன் யிரணியகெற்பாவ
8. தாரணன் வத்துஷஸி (ஷா) துரந்தரன் சேதுமூலாட
சாதுரந்
9 தரன் அ(மு)கர்தன்சிறுத்தன் அழகர்சரணாலையன்
ஸ்ரீ(ம)த்து
10. சுந்தரத்தோழ்மாவலிவாணராசரவர்கள்ராச்சியபரிபாலி
11. னம் பண்ணியருளா நின்ற நாளையில் மாரியம்மன்
கோவி
12. லுக்கு ஸ்ரீ(ம)த்து சுந்தரத்தோழ் மாவிலிவாணராசர்
அவர்களு
13. ம் ஆண்டவர் ராக்கப்பராசா அவர்களும் பட்டையங்
குடுத்தப
14. டிப பட்டையமாவது நமிட மகள் அலங்காரம்மாளுக்கு
ஆரோ
15. க்கியதானம் பண்ணி அதிகசந்தோசமாய்க் கடையின
மாதா
16. வாகிய மாரியம்மனுக்கு மண்டபமுங் கட்டிப் பூசைக்கு
ராக்க
17. ப்பராசா அரமனைக்கிக் கிளக்குத் தும்பிச்சி கிணத்துக்கு
மேற்கு
18. வண்ணான் ஓடைக்குத் தெற்கு கோரைப்பள்ளத்துக்கு
வடக்கு
19. இன்னாங்கெல்லைக்குள்பட்ட ஆண்டியேந்த லாகிய
மாரிய
20. ம்மன் திருவிளையாடல்யேந்தல் யென்றைக்கும் சறுவமா
21. னியமாய்ப்பண்டாரச்சன்னதி அய்யா முன்னுக்குவாளரவீ

22. ரைமதுரைப்பச்சைசந்தய்யராகிய காரணகுருவாகிய அய்
23. யாகுமரன் சொக்கய்யா நமசிவாயபண்டாரம் இவர்களை
24. மாரியம்மனுக்குப் பூசையும் பண்ணிககொண்டு ஆண்டி
25. யெந்தலாகிய சறுவமானிப கிராமத்தையு மாண்டு கொ
26. ண்டு பூறுவிகமாகிய சுந்தபோவண்டன் பொன்னழக்
27. குபோவண்டன் மாரியப்பபோவண்டன் அழகாத்திரி
28. போவண்டன் வெண்டிபோவண்டன் இந்சுவங்கிசததிலுள்
29. ளகுடி வரிசத்திலே குடிவரிசத்திலே குடிக்கொருபணமுங
30. குடுத்துஸ்ரீ(ம)து சுந்தரத்தோழ்மாவலிவாணாதிராசா அவ
31. ர்கள்உண்டுபண்ணிவந்த தற்மக்கிராமத்தையும் ஆண்டு
32. கொண்டு இந்த குடிகாணிக்கையும் வாங்கிக்கொண்டு
33. அம்மனுக்குப் பூசையுந் திருவிழக்கும் வைய்த்துக் கொ
34. ண்டு யெங்களுக்கும் குருவாயிருந்து சந்திராதித்தர் வரைக்கு
35. ம் ஆண்டு வருவாராகவும் இந்த தற்மத்தைப் பரிபாலின
36 ம்பண்ணின பேர்கள் கோடிசிவலிங்கப் பிறதிஷ்ட்டையும்
37. கோடிவிறுமப் பிறதிஷ்ட்டையும் பண்ணின சுகிறத்திலே
38. அடைவார்களாகவும் தற்மத்துக்கு அகிதம் பண்ணினபே
39. ர்கள் கெங்கைக்கரையிலேயும் சேதுக்கரையிலேயும்
40. தங்கள் மாதாபிதாவையும் குருவையும் காராம் பசுவையு
41. ங் கொன்றதோசத்திலேயும் போகக் கடவார்களாகவும் இந்த
42. ப்படிக்கிப் பட்டையமெழுதினேன் திருமாலிஞ்சோலைய
43. ழகற் ஒப்பம் அழகர்திருவிளம்- கலித்துறை உ அடுக்களியாம
44. விருநாளி நெற்கொண்டறம் வளர்க்கும் வடுக்கண்ணியா
45. ன உமையாள் தனக்கொர வாய்த்தறம் யெடுகக நினைத்தவா
46. வானவர் கூட்டத்திருப்ப ரிதைக் கெடுக்க நினைத்தவர் கீள்வா
47. ய் நரகில்க் கிடப்பவரெ உ

அடிக்குறிப்புகள் :

1. சடாவர்மன் குலசேகரனின் திருப்புவனம் செப்பேடு, Epigraphica Indica Vol. 25 p. 11
2. S. I. I. Vol. XIV No. 93
3. Sathyanatha Aiyar, R., History of the Nayaks of Madura, University of Madras, Madras (1980) PP. 4, 56.
4. இச்செப்பேடுகள் பற்றி எனக்குத் தெரிவித்தவர்கள் திரு. இரா. ப. கருணானந்தன், காப்பாளர் இராசராசன் அருங்காட்சியகம் தஞ்சை, திரு. எஸ். எம். கமால் வட்டாட்சியர் இராமநாதபுரம் ஆகியோர் ஆவார்கள். மானா மதுரை வாணாதிராயர் செப்பேட்டை அறிய உதவியவர் திரு. மீ. மனோகரன் சிவகெங்கை ஆவார். இச் செப்பேடு தொடர்பான சில ஆய்விற்கு உதவியவர் நண்பர் திரு. இராசகோபால், பயிற்றுநர் கல்வெட்டுப் பயிற்சி நிறுவனம் மதுரை ஆவார்.
5. வேதாசலம், வெ., பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள்
6. மேற்படி
7. மேற்படி
8. Pudukottai State Inscriptions Vol. Ins. No. 672
9. ARE 288 of 1964-65
10. ARE 44 of 1908
11. ARE 583, 584 of 1926
12. P. S. I. No. 672
13. ARE 250 of 1890
14. P. S. I. No. 671
15. Thurston. E. Castes and Tribes of Southern India, Vol. VI P to S. Cosmo Publications Delhi (1975) P. 207

16. வானமாமலை நா. தமிழர் நாட்டுப்பாடல்கள், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் சென்னை பக். 45
17. சிலப்பதிகாரம், மதுரைக் காண்டம், வழக்குரைத்த காதை, சிலப்பு வரி. 3078-84
18. சேந்தன்திவாகரம், தெய்வப்பெயர் தொகுதி, கழக வெளியீடு சென்னை (1958) பக். 6
19. நாகசாமி இரா. தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள், முதற்பகுதி தமிழ்நாடு அரசுதொல்பொருள் ஆய்வுத்துறை சென்னை-1969, பக். 150-151
20. சாமி. பி. எல். தமிழிலக்கியத்தில் தாய்த்தெய்வவழிபாடு நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிட் சென்னை 1975 பக்-61
21. மேற்படி பக் 72
22. Margaret and James Stanley, Dictionary of Hinduism Allied Publisher Private Limited Bombay P. 183
23. Kittle's Kannada-English Dictionary (4Volumes) Vol. 3, n-m University of Madras (1970) PP. 1314-1315
24. பிங்கலநிகண்டு ஒரு சொற்பல்பொருள்வகை. சூ. 3957
25. Dictionary of Hinduism P. 182
26. Kannada-English Dictionary PP. 1314-1315
27. வசனசாஸ்திரஹய்யா, பதி. திவாகர் ஆர். ஜெகத்குரு. கங்காதரா தர்மவிரசாரசா மண்டலா மூருசாவீரமடம், உறப்பள்ளி (1968) பக் 57 வசனம் 263 (கன்னட மொழியில் அமைந்த நூல்) இந்நூலின் மாரியைப்பற்றி பின்வருமாறு குறிப்பிடப்படுகின்றது. ''மயானத்திற்குச் சென்று மாரியை வழிபட்டு அவளுக்கு ஆட்டை வெட்டிப் பழிகொடுத்து அவ்விறைச்சியை உண்கின்றவர்கள் வீட்டிற்குப்போய் உணவு உண்கின்றவர்களை சைவர்

என்று அழைக்கலாமா'' கன்னட மொழியில் அமைந்த இம்மாரியம்மன் பற்றிய குறிப்புக்களை எனக்கு அறிய உதவியவர் திரு. டாக்டர் பி. வி. குல்கர்னி, கன்னட மொழி விரிவுரையாளர் மதுரைக்காமராசர் பல்கலைக் கழகம் ஆவார்.

28. தமிழர் நாட்டுப்பாடல்கள் பக். 46-47
பாடல்கள்:

1. சமைந்தாள் சமயபுரம்-மாரி
சாதித்தாள் கண்ணபுரம்.
கண்ணபுரத்தில் மாரி
காக்கும் பிரதானி

2. வடக்கேயிருந்தல்லோ-மாரியம்மா
இரண்டு வடுகரோட வாதாடி
தனக்கிசைந்த எல்லையென்று-மாரி
தனித்தடித்தாள் கூடாரம்.

29. Brubaker, Richard L. The Ambivalent Mistress, A study of south Indian Village Goddesses and their Meaning Ph D. Dissertation, University of chikago, 1978, pp. 382 386, 394, cited in Loud, John, A' Ambikvalent Reconsidered Mariamman as Healer' unpublished article, Madurai-1979.

30. Ambikvalenc e Reconsidered Mariyamman as Eealer.

31. Hendry white head D. D: Second Edition, Revised and Enlarged. Asian Educational Services, New Delhi-1983. pp. 80-86.

# ஆவுடையார்கோயில் செப்பேடு

புதுக்கோட்டை மாவட்டம் அறந்தாங்கி வட்டத்தில்அமைந் துள்ளது ஆவுடையார் கோயில். இதன் பழம்பெயர் திருப் பெருந்துறை என்பதாகும். இது சிவபெருமான் குருந்தமரத் தடியில் அமர்ந்து குதிரை வாங்க வந்த மாணிக்கவாசகப் பெருமானை ஆட்கொண்ட இடமாகும். இங்குள்ள கோயில் அவரால் தோற்றுவிக்கப்பெற்ற சிவன்கோயில் என்று சைவர்களால் போற்றப்பெறும்பெருமைபடைத்த தலமாகும். இத்திருப்பெருந்துறையே இன்று ஆவுடையார் கோயில் என்று மக்களால் அழைக்கப்பெற்று வரப்பெறுகின்றது. மிழலைக் கூற்றம் என்ற பண்டைய நாட்டுப்பிரிவில் நடுவில்கூறு என்ற உட்பிரிவில் அமைந்த ஊராக திருப்பெருந்துறை விளங்கியிருக்கின்றது. இங்குள்ள கோயில் மாணிக்கவாசகர் காலத்திற்குப் பிறகு பல திருப்பணிகள் செய்யப்பெற்று கலைச்சிறப்பு வாய்ந்த கோயிலாக இன்று காட்சியளிக் கின்றது. வரலாற்றுச்சிறப்பும் சமயச்சிறப்பும் வாய்ந்த திருப்பெருந்துறைக்கோயில் சிவனை வாணாதிராயன் ஒருவன் வழிபட்டு தானமும் அளித்துள்ளான். அதனை உறுதிப்படுத்தும் வகையில் செப்பேடு ஒன்றினையும் அளித்திருக்கின்றான். தற்போது இச்செப்பேடு மயிலாடு துறைக்கு அண்மையிலுள்ள தருமபுர ஆதீனத்தில் உள்ளது. ஆவுடையார்கோயில் தருமபுரம் ஆதீனத்தின் கட்டுப்பாட்டில அமைந்த கோயிலானமையால் இச்செப்பேட்டை ஆதீனத்தின் தலைமையிடமான தருமபுரத்திற்குக் கொண்டு சென்று பாதுகாத்து வருகின்றனர்.[1]

**காலம்**

இச்செப்பேடு மூவராயர்கண்டன், இராசமீசர்கண்டன், மதியாதமன்னர்மன்னன், சமரகோலாகலன் என்ற பட்டப் பெயர்களைக் கொண்ட வீரப்பிரதாப மாவலிவாணாதி ராயரால்அளிக்கப்பெற்றிருக்கின்றது.பெருமாள்வீரபாண்டிய

தேவர் என்ற பாண்டியமன்னன் ஒருவனை வென்று அவனைப் பாண்டியநாட்டின் வடஎல்லையாகிய வெள்ளாற்றிற்கு வடக்கேயுள்ள சோழமண்டலத்திற்குள் ஓடும்படி துரத்தி திருப்பெருந்துறை சிவனை நேரில் சென்று சேவித்து இச்செப்பேட்டை வழங்கியுள்ளான். இச்செப்பேட்டில் சகஆண்டோ, கலிஆண்டோ குறிப்பிடப்பெறவில்லை. தாதுவருடமும் ஈஸ்வரவருடமும் மட்டுமே குறிப்பிடப் படுகின்றன செப்பேடு தாதுவருடத்திற்குச் செல்லும் ஈஸ்வர வருடத்தில் வழங்கப்பட்டுள்ளது. இதில் குறிப்பிடும் செய்தியைக் கொண்டும் ஈஸ்வரவருடம் வரும் ஆங்கில ஆண்டைக் கொண்டும் இச்செப்பேட்டின் காலத்தைக் கணிக்கலாம்.

இச்செப்பேட்டில் வாணாதிராயர் வென்றதாகக் குறிப்பிடும் வீரபாண்டியன் வாணாதிராயர்கள் ஆட்சிகால மாகிய கி.பி.15ஆம் நூற்றாண்டில் இருந்த மாறவர்மன் வீர பாண்டியனாக இருக்கவேண்டும் இவ்வீரபாண்டியன கி.பி. 15ஆம் நூற்றாண்டில் புதுக்கோட்டை, பழைய இராமநாத புரமாவட்டத்தில் கடற்கரையை ஒட்டியுள்ள பகுதிகளில கி.பி. 1443முதல் 1497முடிய ஆட்சிபுரிந்திருக்கின்றான். புதுக்கோட்டை மாவட்டத்தில் திருமயம்வட்டத்திலுள்ள விராச்சிலையில் கி பி.1449ஜூன்,1449ஜூலை திங்கள்களில் பொறிக்கப்பெற்ற இவனது இரண்டு கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன [2]. இவைதவிர திருவாடனையிலிருந்து இராமநாதபுரம் செல்லும் வழியில் அமைந்துள்ள சனவெளிக்கு அருகமைந்த அறுநூற்றிமங்கலம் இராமநாத புரம் வட்டத்திலமைந்த உத்திரசோசமங்கை போன்ற இடங்களிலும் இவனது கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன [3] எனவே இச்செப்பேடு இவனது ஆட்சிக்காலமாகிய கி.பி. 1443க்கும் 1497க்கும் இடையில் வரும் ஈஸ்வரவருடம்

பொருந்திவரும் ஆங்கில ஆண்டான கி. பி. 1456–1457-ம் ஆண்டிலேயே வெளியிடபபெற்றிருக்க வேண்டும். ஈஸ்வர வருடத்தில் புரட்டாசித் திங்களில் இருபத்தொன்றாம் தியதி இச் செப்பேடு வெளியிடப்பெற்றுள்ளமையால் இது ஈஸ்வர வருடத்தின் பிற்பகுதியில் தொடங்கும் கி. பி. 1457-ஆம் ஆண்டிலேயே வெளியிடப்பெற்றிருக்க வேண்டும் எனலாம்.

திருமாலிருஞ்சோலைநின்றான் மாவலிவாணாதிராயன் செப்பேடு

மாறவர்மன் வீரபாண்டியன் ஆட்சிபுரிந்த காலத்தில் பாண்டியநாட்டுப் பகுதியில் ஆட்சிபுரிந்த வாணாதிராயர்கள் இருவர் ஆவார்கள். அவர்களில் ஒருவன் திருமாலிருஞ்-சோலை நின்றான் மாவலிவாணாதிராயன் ஆவான். இவன் கி. பி. 1428 முதல் 1477 முடிய ஆட்சிபுரிந்தவன் ஆவான். மற்றொருவன் இவனது மகனான சுந்தரத்தோளுடையான் மாவலிவாணாதிராயன் ஆவான். இவன் தந்தையோடும் தனியாகவுமாக கி. பி. 1468 முதல் 1490 முடிய ஆட்சி புரிந்தவன் ஆவான். கி. பி. 15ஆம் நூற்றாண்டில் ஈஸ்வர வருடம் கி. பி. 1456-1457-லேயே வருவதால் இவ்ஈஸ்வர வருடம் வரும் காலத்தில் ஆட்சிபுரிந்த திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயனே இச்செப்பேட்டை வெளியிட்டிருக்க வேண்டும். இவன் 'திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயன் உறங்காவில்லிதாசனான சமரகோலாகலன்' என்று அழைக்கப்பெற்றவன் ஆவான்.[3] இச்செப்பேட்டில் குறிப்பிடப்பெறும் மூவாராயகண்டன், இராசமீசர்கண்டன், மதியாதமன்னர் மன்னன், சமர கோலாகலன் என்ற இவனுக்குரிய பட்டப்பெயர்கள் இவனது கல்வெட்டுக்களிலும் இவனுக்குரியதாகக் குறிப்பிடப் படுகின்றன.[4] இவனது கல்வெட்டுக்கள் ''அழகர் திருவுள்ளம், என்ற சொல்லோடு முடிவது போன்று[5] இச்செப்பேடும்

'அழகர்திருவுள்ளம்' என்ற சொல்லோடு முடிவடைவது குறிப்பிடத்தக்கது சிவன்கோயில் கல்வெட்டாக இருப்பினும் பெருமாள்கோவில் கல்வெட்டாக இருப்பினும்' அழகர்-திருவுள்ளம்' என்ற இவனது வைணவபற்றை விளக்கும் சொற்றொடர் அவனது கல்வெட்டுக்களின் இறுதியில் பெய்யப்பட்டுள்ளது. இம்மரபைப் பின்பற்றிய திருப்பெருந்துறை சிவன்கோயிலுக்கு அளிக்கப்பெற்ற செப்பேட்டின் இறுதிச் சொற்றொடரும் 'அழகர்திருவுள்ளம்' என்ற சொற்றொடரோடு முடிவடைகின்றது. எனவே இச்செப்பேடு திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணாதிராயன் வெளியிட்ட செப்பேடே என்று கூறலாம்.

## பாண்டியன் மீது வாணன் வெற்றி

இத்திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணா-திராயன் மற்ற வாணாதிராயர்களைக் காட்டிலும் வல்லமை படைத்தவன். நீண்டகாலம் ஆட்சிபுரிந்தவன். காஞ்சிபுரம் வரை படையெடுப்பு நடத்தி காஞ்சிகாமாட்சியம்மன் கோயிலுக்குத் தானமளித்தவன்[6] இவனே மாறவர்மன் வீரபாண்டியனை வென்று அவனை பாண்டியநாட்டின் வட எல்லையாக விளங்கிய வெள்ளாற்றிற்கு அப்பால் சோழ-மண்டலத்திற்குள் துரத்தியிருக்க வேண்டும். அவ்வெற்றியின் நினைவாகவே பாண்டியநாட்டின் வடஎல்லையில் மிழலைக் கூற்றத்துப் பகுதியிலிருந்த திருப்பெருந்துறைச் சிவனைச் சேவித்து இச்செப்பேட்டை வழங்கியிருக்க வேண்டும். இம்மாவலிவாணாதிராயனின் தொடக்ககால ஆட்சிக்கல்வெட்டுக்-கள் மதுரையைச் சூழ்ந்த பகுதிகளான ஸ்ரீவில்லிபுத்தூர், புளியங்குளம், அழகர்கோயில் பகுதியிலேயே காணப்படு-கின்றன. இவை கி. பி. 1456க்கு முன் பொறிக்கப்-பெற்றவையாகும். கி. பி. 1456-க்கு முன்பாகப் பொறிக்-கப்பெற்ற இவனது கல்வெட்டுக்கள் புதுக்கோட்டைப் பகுதி

யில் கிடைக்கவில்லை. மாறவர்மன் வீரபாண்டியன் அவனுக்கு முன்னர் ஆட்சிபுரிந்த சடாவர்மன் விக்கிரமபாண்டியன் கல்வெட்டுக்களே புதுக்கோட்டைப் பகுதியில் காணப்படுகின்றன. மாறவர்மன் வீரபாண்டியனின் கி. பி. 1449ஆம் ஆண்டைச்சார்ந்த இரண்டு கல்வெட்டுக்கள் புதுக்கோட்டைப் பகுதியில் காணப்படுவதால் திருமாலிருஞ்சோலை நின்றான். மதுரைப்பகுதியைக கைப்பற்றி ஆட்சிபுரிந்து கொண்டிருந்த போது வீரபாண்டியன் புதுக்கோட்டைப்பகுதியில் ஆட்சி புரிந்திருக்க வேண்டும். வீரபாண்டியனை வாணாதிராயன் கி. பி. 1456-1457-ல் வென்று அப்பகுதியிலிருந்து துரத்தி புதுக்கோட்டைப்பகுதியினை தனது ஆட்சியின்கீழ் கொண்டு வந்திருக்க வேண்டும். இதனை உறுதிப்படுத்தும் வகையில் புதுக்கோட்டைப்பகுதியில் கி. பி. 1456க்குப் பிறகு பொறிக்கப்பெற்ற கல்வெட்டுக்கள் சேவலூர் (கி. பி. 1468) காரையூர் (கி. பி. 1468) பூவாலைக்குடி (கி. பி. 1468) முதலிய இடங்களில் காணப்படுகின்றன.[7] வீரபாண்டியனை பாண்டிய நாட்டைவிட்டு துரத்திய வாணாதிராயனின் வெற்றி தற்காலிகமாகவே இருந்தது. சிறிது காலத்திற்குப் பிறகு வீரபாண்டியன் பாண்டியநாட்டில் நுழைந்து பழைய இராமநாதபுரமாவட்டத்தில் கடற்கரையை ஒட்டிய பகுதி களைக் கைப்பற்றி ஆட்சிபுரிந்திருக்கின்றான். இதனை உறுதிப்படுத்தும் வகையில் அருநூத்திமங்கலம் போன்ற இடங்களில் வீரபாண்டியனின் கல்வெட்டுக்கள் காணப்படு கின்றன. இவ்வீரபாண்டியனின் ஆட்சியே இப்பகுதியில் இருந்தது. திருமாலிருஞ்சோலை நின்றான் மாவலிவாணா- திராயனின் ஆட்சியோ அவனது மகன் சுந்தரத்தோளுடை யான் மாவலிவாணாதிராயனின் ஆட்சியோ இப்பகுதியில் இல்லை என்பதை உறுதிப்படுத்தும் வகையில் இப்பகுதியில் அவர்களது கல்வெட்டுக்கள் காணப்படவில்லை. கி. பி. 1515க்குப் பிறகே இப்பகுதியில் அவர்களுக்குப் பின்னர்

ஆட்சிபுரிந்த வாணாதிராயர்கள் கல்வெட்டுக்கள் கிடைக்கின்றன.[8]

பவித்திரமாணிக்கச்சதுர்வேதிமங்கலம்

இச்செப்பேட்டின் மூலம் திருப்பெருந்துறைக்குப் பவித்திர மாணிக்கச்சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் இருந்தமையை அறியமுடிகின்றது. வேதம்வல்ல பிராமணர்கள் வாழும் சதுர்வேதிமங்கலமாக தனியூர் என்ற தகுதி பெற்ற ஊராக இது விளங்கியிருக்கின்றது. பாண்டியநாட்டில் கீழைக்கடற் கரையில் இருந்த வணிகர் வாழ்ந்த ஊர்கள் சில பவித்திர மாணிக்கபட்டினம் என்று பெயர் பெற்றிருப்பதுபோல[9] அந்தணர் வாழ்ந்த திருப்பெருந்துறை பவித்திரமாணிக்கச் சதுர்வேதிமங்கலம் என்று பெயரிடப்பெற்றிருக்கின்றது. செப்பேட்டில் இவ்வூர் 'மிழலைக்கூற்றத்து நடுவிற்கூறு பிரமதேயம் தனியூர் திருப்பெருந்துறையான பவித்திர-மாணிக்கச்சதுர்வேதிமங்கல(ம்)என்று குறிப்பிடப்படுகின்றது.

வாணாதிராயன் சந்தியும் பிறந்தநாள்பூசையும்

இத்திருப்பெருந்துறை 'நாயனார் ஆளுடையபரமசுவாமிகளை' திருமாலிருஞ்சோலைநின்றான் வீரபாண்டியனை வென்ற பிறகு தனது பெயரால் அவ்விறைவனுக்கு 'மாவலிவாணாதிராயன் சந்தி' என்ற ஒரு சந்தியை ஏற்படுத்தி அச்சந்தியில் பூசைகள் சிறப்புற நடத்திவரும்படி ஏற்பாடு செய்தான். மேலும் திங்கள்தோறும் வரும் அவனது பிறந்த நாட்களில் (நட்சத்திரத்தன்று) விசேசபூசைகள் நடக்கும்படியும் ஏற்பாடு செய்தான். இவற்றிற்கு ஆகும் திருவமுது, கறியமுது, சாற்றுப்படி, திருப்பரிவட்டம், திருமாலை, திருமேற்பூச்சு, திருவிளக்கு முதலிய நித்தியசெலவினங்களுக்காக, திருநாமத்துக்காணியாக பாண்டிய நாட்டில் இருந்த பாப்பார்குடி, வெண்கட்டி என்ற இரண்டு

ஊர்களைத் தானமாக விட்டான். அவ்வூர்களிலிருந்து வரும் வருவாயினைக் கொண்டு இப்பூசைகளை நடத்தும்படி செய்தான்.

திருநாமத்துக்காணியாக விட்ட ஊர்கள்

இவ்விரண்டு ஊர்களையும் வாணாதிராயன் தான் பாண்டியன்மீது பெற்ற வெற்றியினை நினைவூட்டும் வகை யில் பெயரினை இட்டுத் தானமாக அளித்திருக்கின்றான். பாப்பார்குடி என்ற ஊர் 'படையேறவிட்டான் நல்லூர்' என்றும் வெண்கட்டி ஏம்பல் என்ற ஊர் வெள்ளாற்றில் (வென்றராச) நல்லூர் என்றும் மாற்றுப்பெயர்கள் சூட்டப்-பெற்றுத்தானமாக அளிக்கப்பெற்றிருக்கின்றன. செப்பேட்டில் பாப்பார்குடியும்வெண்கட்டியும்'இடையாற்றுநாட்டு பாப்பார் குடியான படையேறவிட்டான் நல்லூரும் தென்களவேழ்வி நாட்டு வேம்பற்றூர் பால் வெங்கட்டி ஏம்பலான வெள்ளாற் றில் (வென்றராச) நல்லூரும் என்று குறிப்பிடப்படுகின்றன.

இவ்வூர்களின் நான்கெல்லைகளும் இச்செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றைக்கொண்டும் இவ்வூர்கள் அமைந்த நாட்டுப்பிரிவுகளைக்கொண்டும் இவை பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டத்தில் மானாமதுரை சிவகெங்கைப் பகுதிகளில் அமைந்த ஊர்கள் என்று கண்டறியமுடிந்தது. இவ்வூர்களுக்கு இன்று மானாமதுரையிலிருந்து புறப்பட்டு, திருப்பாச்சேத்தியினை சேர்ந்து அங்கிருந்து வடக்கேயுள்ள வைகையாற்றினைத்தாண்டி, மேற்காகத்திரும்பினால் வரும் கானூரைக் கடந்து சென்றால் வெண்கட்டியையும் பாப்பார் குடியையும் அடையலாம். இவை தெற்கு வடமேற்காக அடுத் தடுத்து அமைந்த இரண்டு ஊர்களாக இன்றும் பழம்பெயரி லேயே விளங்கி வருகின்றன. இவ்வூர்களுக்கு சிவகெங்கையி லிருந்து வேம்பற்றூர், படமாத்தூர் வழியாகவும் வரலாம்.

இவ்வூர்கள் இரண்டும் வைகையாற்றின் வடகரைப்பாசனத்தால் பயன்பெறும் ஊர்களாக உள்ளன. பாப்பார்குடி இடையாற்றுநாட்டில் அமைந்த ஊராகவும் வெண்கட்டி தென்களவழிநாட்டிலுள்ள வேம்பற்றூரைச் சார்ந்த ஊராகவும் குறிப்பிடப்படுகின்றன இப்பகுதியிலுள்ள ஊர்கள் இப்பகுதியிலுள்ள கல்வெட்டுக்களில் தென்களவழிநாட்டு ஊர்களாகவே குறிப்பிடப்படுகின்றன. இடையாற்றுநாடு என்பது இச்செப்பேட்டின் மூலம் முதன்முதலில் அறியவரும் நாடாகும். (இடையாற்றுநாடு என்ற பெயரில் சோழநாட்டிலும் ஓர் நாடு உள்ளது) தென்களவழி நாட்டிற்கு அடுத்து வடக்காகவும் மேற்காகவும் அமைந்த பகுதிகள் இடையாற்று நாடாக விளங்கியிருக்கவேண்டும். பாப்பார்குடி இடையாற்று நாட்டின் எல்லையில் தென்களவழிநாட்டின் எல்லையிலுள்ள வெண்கட்டிக்கு வடமேற்காக அமைந்த ஊராக விளங்கியிருக்க வேண்டும்.

## நாற்பால் எல்லைகள்

இவ்விரு ஊர்களும் அடுத்தடுத்து அமைந்த ஊர்களாக இருந்தமையால் செப்பேட்டில் இவற்றினைச் சூழ்ந்த நான்கு எல்லைகளும் தனித்தனியாக கூறப்படாது ஒன்றாகவே சேர்த்து கூறப்பட்டிருக்கின்றன. இவ்வூர்களின கிழக்கு எல்லையாக வேம்பற்றூர் குளமும் நெடுங்குளத்து உள்வாயும் விளங்கியிருக்கின்றன. தென்னெல்லையாக வேம்பற்றூர் பழங்காலும் வில்லவராயன் ஏந்தலும் விளங்கியிருக்கின்றன. மேற்கு எல்லையாக சடங்கி, கண்ணன்குடி, மங்காமல்காத்தான் ஏந்தல், எலும்புகுளத்து வயல்பரிப்பு, காயனார் ஏந்தல் ஆகியவை விளங்கியிருக்கின்றன. வடவெல்லையாக செயங்கொண்டான்கால் விளங்கியிருக்கின்றது. இந்நான்கெல்லைகளுக்குட்பட்ட எல்லா வகையான உடமைகளும் திருப்-பெருந்துறை நாயனார்க்கு திருநாமத்துககாணிக்குச் சர்வ

பாணிபமாக அளிக்கப்பட்டன. இவ்வெல்லைகளைச் சூழ்ந்த வெண்கட்டி, பாப்பார்குடி முதலிய ஊர்களுக்குச் சென்று கள ஆய்வு செய்தபோது[10] அவற்றைச் சூழ்ந்த பகுதிகளாகச் செப்பேட்டில் கூறப்படும் சில பெயர்கள் இன்றும் அப்பெயரிலேயே இருந்து வருவதை அறியமுடிந்தது. இவற்றில் சில பெயர்கள் மாறிவிட்டன. சில பெயர்கள் வழக்கொழிந்து விட்டன. கிழக்கெல்லையாகக் கூறப்படும். வேம்பற்றூர்குளம் இன்று கானூர்கண்மாய் என்ற பெயரில் பெருங்கண்மாயாக விளங்குகின்றது. இதுவே இப்பகுதியில் அமைந்த ஊர்களுக்குப் பாசனமளித்து வருகின்றது பண்டு இப்பகுதியில் அமைந்த ஊர்களுக்கெல்லாம் தலைமையூராக வெண்கட்டிக்குக் கிழக்கேயமைந்த வேம்பற்றூர் விளங்கியமையால் இக்குளத்தின் கரைப்பகுதியில் விளங்கும் கானூர் என்ற ஊரின் பெயரால் இக்குளம் அழைக்கப்பெறாது. வேம்பற்றூர்குளம் என்று அழைக்கப்பட்டிருக்கின்றது. தற்போது இது இக்குளத்தின் கரைக்கு அண்மையில் அமைந்த கானூரின் பெயரில் 'கானூர்கண்மாய்' என்று மாறி அழைக்கப்பட்டு வரப்பெறுகின்றது. இக்குளத்திற்குச்-செல்லும் வாய்க்கால் ஒன்றே செப்பேட்டில் வெண்கட்டி பாப்பார்குடிக்குத் தென்னெல்லையாகக் கூறப்பட்டிருக்-கின்றது. இப்பழங்கால் வைகையாற்றிலிருந்து வரும் வாய்க்காலாகும். இன்று இக்கால் வெண்கட்டியின் தென்பகுதி வழியாகவே செல்கின்றது. இவ்வூர்களின் மற்றொரு தென்னெல்லையாக கூறப்படும் பல்லவராயன் ஏந்தல் இன்று திருமானேந்தல் என்றழைக்கப்படும் ஏந்தக்கண்மாயாக இருக்கவேண்டும். வடவெல்லையாகக் கூறப்படும் பகுதிகளின் பெயர்கள் பல இன்று வழக்கொழிந்துவிட்டன. சடங்கி என்ற ஊர் மட்டும் இன்றும் மேற்கு எல்லையில் அமைந்த ஊராக பழம்பெயரிலேயே இருந்து வருகின்றது. கண்ணன்குடி என்பது இன்று இப்பகுதியில் விளங்கும்

கணக்கன்குடி என்ற ஊராக இருக்கவேண்டும். மங்காமல் காத்தான் ஏந்தல் என்பது இன்று இவ்வூர்களின் மேற்பகுதியில் விளங்கும் பெத்தானேந்தலாக இருக்கலாம். எலும்புக் குளம் காயனார் ஏந்தல் என்ற பகுதிகள் வழக்கொழிந்து விட்டன. இவ்வூர்களின் வடவெல்லையாக கூறப்பட்ட செயங்கொண்ட சோழன்கால் என்பது இப்பகுதியில் ஓடும் கண்ணாயிருப்புக்கால்வாய் ஓடை என்றழைக்கப்படும் நீர் காலாக இருக்கவேண்டும். இவ்வெல்லைகள் சூழ்ந்த பாப்பார்குடியும் வெண்கட்டியும் தற்போது ஆவுடையார் கோயிலோடு பழைய உறவு அறுந்து போன ஊர்களாக விளங்கி வருகின்றன.

அடிக்குறிப்புக்கள்:

1. இச்செப்பேட்டைக் கண்டறிந்து படியெடுத்து இது தொடர்பானத கவலைத் தந்துதவியவர் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டுத்துறை இணைப் பேராசிரியர் திரு. புலவர். செ. இராசு ஆவார்கள். இச்செப்பேட்டு வரிகள் தமிழ்ப் பல்கலைக்கழக கல்வெட்டியல்துறை செப்பேடுகள் தொகுப்பில் உள்ளது.
2. Pudukottai State Inscriptions Vol Nos 462, 461.
3 நேரடி கள ஆய்வில் அறியப்பெற்றன.
4. ஸ்ரீவில்லிபுத்தூர், ஆண்டாள்கோவில் நேரில் படிக்கப்பெற்ற கல்வெட்டு, S. I. I. Vol IV No. 318. P. S. I. No. 671
5. P. S. I. No. 671; S. I. I. Vol IV. No. 348
6. ARE 250 of 1890
7. P. S. I. Nos. 671, 715, 815
8. S. I. I. Vol VIII No. 395
9, பாண்டியநாட்டு தொண்டி சிவன்கோவில் கல்வெட்டில் அவ்வூர் பவித்திரமாணிக்கப்பட்டினம் என்று குறிப்பிடப் படுகின்றது. திருப்புல்லாணி கல்வெட்டில் அப்பகுதியில் இருந்த பவித்திரமாணிக்கப்பட்டினம் பற்றிய குறிப்பு வருகின்றது.
10 இவ்விரு ஊர்களைக் கண்டறியச் சென்ற ஆய்வின் போது தனது வாகனத்துடன் வந்துதவியவர் மாளா மதுரை ஒ வெ. செ. மேல்நிலைப்பள்ளி ஆசிரியர் திரு. அ. இரவிச்சந்திரன் ஆவார்.

# வாணாதிராயர் குறித்த கல்வெட்டுக்கள்

## பிற்காலப்பாண்டியர் காலத்தவை

பின்வரும் கல்வெட்டுக்களில் வரும் வடவெழுத்துக்கள் (கிரந்தம்) தமிழ் எழுத்துக்களாக மாற்றப்பெற்றுள்ளன. குறியீடுகள், எண்கள் ஆகியவை தற்கால எண் எழுத்துக்களாக மாற்றப்பட்டுள்ளன.

1. கள்ளங்காடு சிவன்கோயில் பகுதியிலுள்ள மாவலிப் பாறை கல்வெட்டு மதுரைமாவட்டம், மேலூர்வட்டம், வஞ்சிநகரம் அருகிலுள்ளது.

கல்வெட்டு வரிகள் :

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மரான சுந்தரபாண்டியதேவர்க்கு (யாண்டு) 3 வது கன்னிஞாயிற்று 14 தியதியும் பூர்வபட்சத்து ஞாயிற்றுக்கிழமையும் பெற்ற அவிட்டத்து நாளும் (பெற்றுள்ள யாம்)

2. ஆனைமலைநாட்டு அறுகைக்குன்றத்துடையோனான மாவலிவாணவதரையர் திருநட்டப்பெருமாளானபிள்ளையார் அழகப்பெருமாள் மகனார் வாணனார் வாணவதரையர் அவனிநாராயணத்தேவரெனும் வழுதி நாராயணத்தேவர்க்கு யாம்கொடுத்தவாக்குப்படியாவது அதிகரத்தில் எழுந்தருளிய அகளங்கீசுரமுடைய நாயனார்க்கு திருக்கற்றளி யெடுப்பிக்குமாறு ஊரோம் வேண்டியதன்படி நாமும் ஒப்பளித்து இதற்கு உறுதளியாக வடபார்க்கெல்லை திருவெண்காடன்பாறையும் இம்மாவலி

3. ப்பாறை மேல்பார்க்கெல்லையாகவும் காளாங்கரை கீழ்பார்க்கெல்லையாகவும் வாணன்பாறை தென்பார்க்கெல்லையாகவும் நிச்சயித்து திருச்சூலக்கல் நாட்டி அச்சு மிழித்து

4. இந்நாயனார்க்கு இறையிலியாக கொடுத்த

5. சோனாடு பொருதினின்று வாகைசூடி வரும் நாளில் வழிப்பாட்டுக்கானவாறு திருக்கொடு(ங்) குன்றத்து பண்டாரத்தான் அழகியசுந்தராச்சாரியன் பொறு-பேற்கும்படி தாமிட்ட ஆணையை மதுரைமாகண்டத்-தரையரும் வஞ்சிமண்டலத்தரையரும் வோலை அனுப் பியதை படையொடு செல்லும் திருநெல்வேலி வல்ல புரத்து கொன்றைவேலுடையான் எழுத்து

2. மதுரை மீனாட்சியம்மன் கோயில் கல்வெட்டு. ARE. 192 of 1943/44.

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமலர்திருவும் பொருசெயமடந்தையும் தாமரைக்குவிமுலை செயப்புயத்திருப்ப வேதநாவின் வெள்ளிதட்டாமரைக் காதன்மாதுகவின் பெறத்திணைப்ப வெண்டிரை யுடுத்த மண்டிணி கிடக்கைத் திருநில மடந்தை யுரிமையிற் களிப்ப

2. சமையமு நீதியுஞ் தருமமுந் தழைப்ப இமையவர் விழாக் கொடியிடந்தொறு மெடுப்பக் கருங்கலிக்கனல் கெடக் கடவுள் வேதியர் அருந்தொழில் வேள்விச் செங்கனல் பூதலஞ் சூழ்தா ஒருகையிருசெவி மும்மத நாற்கோட்டயி ராவத முதற் செயிதீர் கொற்றத்தொண்டிசையா

3. னையெருந்த மேறிக்கண்டநாடாடெமதெனக் கயல்களி கூரகே சலந் துளுவங் குதிரம் குச்சரம் போசல மகதம் பொப்பளம் புண்டரம் கலிங்க மீழங் கடாரங் கவுடம் தெலிங்கஞ் சோனகம் சீன முதலா விதிமுறை திகழ வெவ்வேறு வகுத்த முதுநிலக்கிழமையின் முடிபுனை வேந்தர்க் கொருதனி நாயகனெ

4. ன்னுலகேத்த திருமுடி சூடிச் செங்கோலோச்சிக் கொற்றத் தரளக் குளிர்குடை நீழற் கற்றைக் கவரி காவலர்வீச மிடைகதிர் நவமணி வீரசிங்காதனத்துடன் முடிசூடி யுயர்குலத் திருவெனப் பங்கய மலர்கரங் குவித்துப் பார்த்திவர் மங்கையர் திரண்டு வணங்குஞ் சென்னி சுடரொளி மவுளிச் சூடாமணி மிசைச்

5. சிவந்த இணைமலர்ச் சீரடிக்கமல மதுகரங் கமலமென்ற னுகும் உலகமுழுதுடையாரோடும் வீற்றிருந்தருளிய ஸ்ரீகோமாறபன்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் ஸ்ரீசுந்தரபாண்டியதேவர்க்கு யாண்டு நாலாவது நாள் நூற்றொருபத்தைஞ்சினால் மதுரோதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக்

6. கோயில்பள்ளியறைக்கூடத்துப்பள்ளிபீடம் மழவராயனில் எழுந்தருளி இருந்து உடையார் திருவாலவாயுடையார் கோயில் பதிபாத மூலப்பட்டுடைய பஞ்சாசாரியார்க்கு மிழலைக்கூற்றத்து கீழ்கூற்று தச்சனூரு

7. டையான் அருளாளன் சேவகத்தேவனான பாணாத- ராயன் கண்டசந்திக்கு திருப்படிமாற்றுள்ளிட்டு வேண்டு நிவந்தங்களுக்கும் ஆலவாயுடையாரை மார்கழித் திருநாள் திருவெம்பாவை சேவிக்கும் பரதேசிக்கோவண வர்க்குப் போசன முள்ளிட்டு வேண்டு மவையிற்றுக்கும் இக்கோயில் திருக்காம

8. கோட்டத்து ஆளுடைய நாச்சியார் கோயில் தெற்கில் வாணாதராயன் திருவாசலில் உடையார் எழுந்தருளிச் சாதாரிப்பண் கேட்டருள வேண்டுவனவயிற்றுக்கும் இவ்வாணாதிராயன் காணியான வெண்பைக்குடி நாட்டு நம்பிதாயநல்லூர் நான்கெல்லை

9. க்கு உட்பட்ட நீர் நிலமும் கலஞ்செய் புன்செயும் நத்தமும் தோட்டமும் குளமும். குளப்பறிப்பு முன்பட நீர் நிலமும் காராண்மை மீயாட்சியும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும் காரியவாராய்ச்சியும் வெட்டிபாட்டமும் பஞ்சுபீலி சந்துவிக்கிரமப்பேறும் எ

10. ப்பேர்ப்பட்டனவும் உட்பட நாலாவதுமுதல் தேவதான இறையிலியாக இடப்பெறவேணுமென்று மழவராயன் நமக்குச் சொன்னமையில் இவ்வுடையாற்கு இவ்வாணாதிராயன்சந்திக்கு திருப்படிமாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கும் இவ்வுடையார் மார்கழித்

11. திருநாளில்த் திருவெம்பாவை சேவிக்கும்பரதேசிக்கும் கோவணற்கும் போசனமுள்ளிட்டு வேண்டுவனவுக்கும் இக்கோயில் திருக்காமக்கோட்டத்து ஆருடையநாச்சியார்கோயில் தெற்கில் வாணாதிராயன் திருவாசலில் உடையார் எழுந்தருளிச் சாதாரிபண் கேட்டருள வேண்டுவனவு

12. க்கும் இவ்வாணாதிராயன் காணியான வெண்பைக்குடிநாட்டு நம்பிதாயநல்லூர் நான்கெல்லைக்குட்பட்ட நீர் நிலமும் கருஞ்செய் புஞ்செயும் நத்தமும் தோட்டமுங் குளமும் குளப்பரிப்பும் உட்பட்ட நிலம் காராண்மை மீயாட்சியும் அந்தராயமும் வினியோகமும் தருவதான அச்சும்

13. காரியவாராய்ச்சியும் வெட்டிப்பாட்டமும் பஞ்சுபீலி சந்துவிக்கிரகப்பேறும் மற்றும் எப்பேர்ப்பட்டனவும் உட்பட இவ்வாண்டு முதல் தேவதான இறையிலியாக இட்டமைக்கு இவ்வுடையாற்கு வாணாதிராயன் சந்திக்கு திருப்படிமாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கு

14. க்கும் இவ்வுடையாரை மார்கழித்திருநாள் திருவெம் பாவை சேவிக்கும் பரதேசிக் கோவணவற்கும் போசன முள்ளிட்டு வேண்டுவன வயிற்றுக்கும் இக்கோயிற் திருக் காமகோட்டத்து ஆளுடையநாச்சியார் கோயிலில் தெற் கில் வாணாதிராயன் திருவாசலில் உடையார் சாதாரிப் பண் கேட்டருள வேண்

15. டுவனவுக்கும் இவ்வாணாதிராயன் காணியான வெண் பைக்குடி நாட்டுநம்பிதாயநல்லூர் நான்கெல்லை உட் பட நீர்நிலமும் கருஞ்செய் புன்செயும் நத்தமும் தோட்ட மும் குளமும் குளப்பரிப்பும் உட்பட்ட நிலம் காராண்மை மீயாட்சி அந்தராயமும் வினியோகமும் தருவதான அச் சும் காரியவாராய்ச்சியும் வெட்டிப்பாட்டமு

16. ம் பஞ்சுபீலி சந்துவிக்கிரகப்பேறும் மற்றும் எப்பேர்பட்ட னவும் உட்பட இவ்வாண்டு முதல் தேவதான இறையிலி யாகத் தந்தோமென்று திருவாய்மொழிந்

17. தருளினர்

3. இளையான்குடி ஸ்ரீமதனவேணுகோபாலசாமி முன் மண்டப வடபக்க வெளிச்சுவரிலுள்ள கல்வெட்டு இராமநாதபுரம் மாவட்டம் பரமக்குடி வட்டத்திலுள்ளது ARE 306 of 1949/50

கல்வெட்டுவரிகள் :

1. ஸ்வதிஸ்திஸ்ரீ மலைமண்டலமும்
2. சோழமண்டலமும் கொங்கு
3. இரண்டும் ஈழமும் மகதை
4. மண்டலமும் சோச்சமு

5. த்திரமும் நடுவில்மண்ட
6. லமும் தொண்டைமண்ட
7. லமும் மண்ணைசூறு அறுதி
8. யாகக் கொண்டருளிய ஸ்ரீ
9. குலசேகரதேவர்க்கு யாண்டு
10. 35-வது [எக.] ஸ்ரீபாண்டி
11. மண்டலத்து வடவல்ல
12. த்திருக்கை இளான்குடியான
13. (இந்திரா)வதாரநல்லூர்க் கங்கைகொண்ட
14. சூரியதேவ வாணாதிராயரான
15. காலிங்கராயர் செய்த சோழ
16. மண்டலத்து பெரும்பற்றபுலி
17. யூரிலே குலோத்துங்கசோழன்
18. திருவீதியிலே பெருமான் திருமகனார்
19. திருநாமத்தாலே உடையார்
20. வீரபாண்டீஸ்வரமுடைய நாயனாரை
21. எழுந்தருளுவித்து கோயிலும் செய்து பரிவார
22. தேவமாரையும் எழுந்தருளுவித்து இன்
23 (நாயன்) மார்க்கு கோயிலும் செய்து இத்
24. திருவீதியிலே தபஸிகள் பன்னிரண்டு
25. பேருக்கு அமுதுக்கு தம்பேராலே நியாய
26. பரிபாலன மடமும் தண்ணீர்பந்தலு
27. ம் இந்நாயனார்...... ..............
28. பேராலே சுந்தரவல்லிச்சதுர்ப்பேதிமங்
29. கலம் என்று கொற்றங்(குடி)

30. யிலே பதிமூன்று பட்டர்களையும் கை
31. வத்து சீரங்கத்தில் காவேரிக்கரையிலே
32. தாம் முன்பு பேராலே வாணாதிராயன்
33. கரையும் விட்டுக்கட்டி கலியுகராமன்
34. கரையும் கலியுகராமன் திருவீதியும் பெருமாள்
35. குலசேகரதேவர் திருநாயத்தாலே ...... ருடவர்
36. (த)ன்மமாக நாச்சியாரோடும் கூடமு வறியா
37. த பெருமானையும் (பி)ரதி(சி)த்து இவர்க்கு கோயிலும்
38. உத்(ச்ச)வ நாயன்மாரை
39. யும் எழுந்தருளிவித்து
40. ஸ(ந்யா) ஸிகளும் (தா)ஸர்களும்
41. இருபத்து நாலுபேர் அமு
42. து செய்ய மாடத்திருவீதி
43. யிலே குலசேகரன் மட
44. மும் தண்ணீர் பந்தலும்
45. பெருமாளுக்கு திருநாள்
46. புதுப்புனல் உள்ளிட்ட
47. தி(வ்வி)யங்களுக்கு ஏறி அ
48. ருள எடுத்த கை அழகிய
49. நாயனார் திருத்துறை
50. முகத்திலே தீர்த்தமண்ட
51. பமும் அலைஏறும் படி
52. ஏற்றமும் தாம்பிறந்த
53. நாள் (அசு)வதியிலே பெருமாள்
54. புறப்பட்டருளி சிறப்பு செய்து

55. சந்தி(கள்)தோறும் (அருளுகை)க்கு
56. கெருடக்கொடியும் திருநந்தவனமும்
57. பெருமாள் சுந்தரபாண்டியதேவர் கோயி
58. ல் பட்டணத்தைத் தவிர்த்து மாடத்திருவீதி
59. யையும் திருமலைதந்தான் திருவீதியையும்
60. கலியுகராமர் திருவீதியையும் திறந்து குலசேகர
61. சதுர்வேதிமங்கலம் என்றும் முனிவறியாத
62. பெருங்கோயிலைச் சூழ வாணாதராயச்சதுர்வெதிமங் கலம்
63. என்றும் இருநூற்றெண்பத்திரண்டு பட்டரைய்
64. வைய்த்து திருவானைக்காவுடைய நாயனார்க்கு
65. தாம் பிறந்தநாள் (அசு)வதிச் சிறப்பும் இக்கோயிலிலே
66. (பி)தாக்கள் பேராலே கங்கைகொண்ட (சுவ)ரம்
67. உடையாரையும் மாதாக்கள் பேராலே சுந்தரநாயனா ரையும்
68. (பிரதிஷ்டி)த்து தமையனார் பேராலேதிருவிடைமருதில்
69. உடையார் திருவிடைமருதுடைய நா
70. யனார் கோயிலிலே மருதவனீஸ்வரமுடையா
71. ரையும் (பிரதிஷ்டி)த்து தம்பியார் பேரராலே
72. வைய.......... ....... நாயனார் கோயிலிலே
73. பெருந்திக்கு நாயகரையும் (பிரதிஷ்டி)த்து
74. திருநரையூரிலே ஸ்ரீவைகுண்ட நாதரையும்
75. நாச்சியாரையும் ஆழ்வார்கள் பதி(னி)ருவரையும்
76. பெரும்பற்றபுலியூரில் வீரபாண்டீசுரமுடை
77. யாரையும் ஒரு (மூர்த்தத்)லே (பிரதி)ஷ்டித்து

78. (ரா)ஜ(ரா)ஜனில் மன்னவர்க்கு (அ)சுவதிச்

79. சிறப்பு அமுது செய்யவும் திருமண்டபமும்

80. திருநந்தவனமும் (வேதாத்யாயந)த்துக்கும் திரு

81. மொழித் திரு(அத்யாயந)த்துக்கும் காலிங்கராயச்

82. சதுர்வேதிமங்கலம் என்றும் ஐம்பத்திரண்டு பட்டர்

83 களையும் வைத்து பாண்டிமண்டலத்து அழகர்

84. க்கு (மா)தாக்கள் பேராலே சுந்தரவல்லிநாச்சியாரை

85. (பிர)திஷ்டித்து கோயிலும் செய்து திருக்கோட்டி

86. யூரிலே நாச்சியார் சுந்தரவல்லியாரை (பிர)திஷ்டித்து

87. கோயிலும் செய்து மதுரையில் உடையார்

88. திருவாலவாயுடையநாயனார் திருநாள்களில்

89. தீத்தத்துக்கு ஏறி அருள............(வைகை)

90. கரையிலே காலிங்......................

91 திலே காலிங்கராயன் திருமண்டபமும் இக்

92 கோயிலிலே தம்பேராலே சூரியதேவ இ(சு)வர

93. உடையாரையும் ஸ்திரிகள் பேராலே திருவுடைநா(ச்)சி

94. யாரையும்(பிர)திஷித்து திருக்கசைப்பேரில்காளையார

95. திருமுன்பே திருபாட்டு ஓத (ப்றதி) மேனிக்களையும்

96 சேற்றூர் உடையார் (சண்டேஸ்)வரமுடையா

97. (ர்) பேராலே வாணாதிராயன் சந்தியும் துவ்வூரில்

98. உடையார்திருவதிஸ்வரமுடையார்க்கு வாணாதிராய(ன்)

99. சந்தியும் மங்கலநாட்டு மணலில் திருமாணிக்காழ்வார்

100. க்கு வாணாதிராயன் சந்தியும் இச்கோயில் வடபால்

101. குலசேகரச்சதுர்வேதிமங்கலம் என்றுநாற்பத்தாறு.......

102 பட்டர்களையும் மேல்பால் நியாயபரிபாலன

103. குளம் என்று ஊருணியும் கண்டு சிவில்லிபுத்தூர்
104 வடபெருங்கோயிலுடையார்க்கு பெரியதிருவடி
105 நாயனாரையும் எழுந்தருளிவித்து கோயிலும் செய்து
106. திருத்தங்காலூர் நின்ற நாராயணர்க்கு திருநந்த வனமும்
107 செய்து பிரதிஷ்டித்து மண ... .............
108. தீப தீர்த்தக்கரையிலே.........மண்டபமும் திருநந்த
109. வனமும் சேரன்மாதேவி............க்கு(அசு)வதி சிறப்பும்
110 தீர்த்தமண்டபமும் திருநந்தவனமும் ஸ்ரீவல்லமங்கலத்து
111. ஸ்ரீபராந்தீஸ்வரமுடையார்(அசு)வதி சிறப்பும் அத்யனம்
112. பண்ண (ஆறு) பட்டர்களையும்..............
113. திருநெல்வேலி உடையனாயனார்க்கு திருநந்தவனமும் திருநாட்
114. ...ல் பொலிந்து நின்றபிரானுக்கு திருநந்தவனமும் வல்லநாட்டு
115. ஆற்றங்கரையிலே சூரியதேவவிண்ணகர எம்பெருமான்
116. என்று திருக்குறளப்பனை (பிர)திஷ்டித்து இவர்க்கு கோயிலும்
117. திருநந்தவனமும் செய்து திருக்குறுங்குடி நம்பிக்கு நி
118. வந்தங்களும் இறங்கின வைப்பும் கண்டு தம்பேராலே
119. இறங்கல்மீட்டான் என்ற திருநந்தவனமும் கோடித்
120. தீத்தக்கரையிலே நம்பி அருளி நித்தம் (பிரசாதி)க்க
121. தீத்தமண்டபமும் படிஏற்றமும் (அ)ள்ளிஊரில் கரு
123. மாணிக்காழ்வார் கோயிலிலே சங்கப்பெருமானை
123. (பிரதிஷ்டி)த்து இவர்க்கு கோயிலும் செய்து ..........

124. (த்த்)திலே திருக்குழல்

125. ஊதினபிள்ளையை எழுந்

126. தருளுவித்து... ..........

127. ம் செய்து மலைமண்டலத்

128. திருவநந்தபுரத்து ஸ்ரீபத்மநா

129. ப பெருமாளுக்கு காலிங்கராயன்

130. சந்தியும் (அசு)வதி சிறப்பும்

131. (நு)ந்தா விளக்கும்

132. ..........................

133. லூர் இளான்குடி நாயனார்

134. வீரசோழ விண்ணகர எம்

135. பெருமானை ஒப்பித்தருளப்பப்

136 பண்ணி இவர்கோயிலும் செய்து

137. திருநுந்தாவிளக்கும் இவர் கோயி

138. லிலே பெரியதிருவடி நாயனா

139. ரையும் (பிரதிஷ்டி)த்து உடையார்

140. இராஜேந்திர சோழீசுவரமுடையார்

141. கோயிலும் செய்து இவர்க்கு

142. (அசு)வதி சிறப்பும் .................. வினா

143. ...................... விண்ணகர

144. எம்பெருமான்என்று திருக்குழலூதின பிள்ளையாரையும்

145. நாச்சியாரையும் (பிர)திஷ்டித்து உற்சவங்களுக்கு எழுந்தருள

146. அழகியபிள்ளையார் சுந்தரபாண்டிய வாணாதிராயன்

147. பேராலே அழகிய பெருமாளையும் நாச்சியாரையும்

148. உலகாண்பாசய் காலிங்கராயர் பேராலே

149. உலகளந்தார் என்று ஸ்ரீ(பலி)நாயனாரையும் தங்கையார்

150. பேராலேஆளுடையநாச்சியார் உள்ளிட்டு பல[நாயன்]

151. திருநாகீசுரமுடையாரான வீரபாண்டிய வாணாதிராயர்

152. பேராலே விநாயகப்பிள்ளையாரையும்(பிர)தி(ஷ்)டித்து

விசயநகரவேந்தர் காலத்தவை :

4. ஸ்ரீவில்லிபுத்தூர்-காமராசர் மாவட்டம் - ஆண்டாள் கோவில் கல்வெட்டு ARE 572 of 1926

கல்வெட்டு வரிகள் :

1. ஸ்வஸ்திஸ்ரீ (மந்மஹா மண்டலீசுவரன்) அரியதளராய வி(பா)டன் பாசைக்குத் தப்புவராயகண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன் சோழமண்டல பிரதிஷ்டாசாரியன் பூர்வ தெட்சிண பட்சிம உத்தர ஸமுத்திராபதி கெஜவேட்டை கண்டருளிய

2. மஹாபிரதாப தேவராய மஹாராயர் (பிருதிவிராஜ்யம்) பண்ணிநின்ற (சகாப்தம்) 1350-ன் மேல் மதுராபுரி மஹாநாயகன் திருமாலிருஞ்சோலை நின்றார் மஹாபலி வாணாதிராயர்க்குச் செல்லாநின்ற (சௌமிய) வருஷம் சித்திரை மாதம் 5வ ஸ்ரீவில்லிபுத்தூர் நாச்சியார் சூடிக் கொடுத்தருளிய நாச்சியார்க்கு (உத

3 கபூர்வ தர்மதானம்) ஆகவிட்ட அளவுக்கு திருவிடையாட்டம் ஆவது மதுரை... .... வைகைக்கரையில் வெருகனூர்போன ...... .. இன்னாசன் முதலுக்கு ஸர்வம்

ஆக விட்ட அளவுக்கு இவ்வூருக்கு எல்லை ஆவது மேல் எல்லை அயிராவணநல்லூர் குளப்புரவுக்கும் மேற்படி ஆற்றங்கரைக்கும் கோயிலுக்கும் கிழக்குவடவெல்லை ஆற்றுக்கு தெற்கு மேல்எல்லை புளியங்குளப்பற்று

4. ப் புஞ்சைக்கும் மேற்படி புரவுக்கும் மேற்கு தென் எல்லை ..........லடக்கு ஆக இப்பெருநான்கெல்லைக்கு உட்பட்ட கீணோக்கின கிணறு மேனோக்கின மரமும் மாவடை மரவடை யட்டடடை பதிமுதல் எப்பேறப்பட்ட (ஸமஸ்தபிராப்திகளும்) இவ்வோலைப்படியே கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கைக்கொண்டு ஆசந்திராதித்தவ

5. ற் செலவிட்ட அளவுக்கு இம்மரியாதியிலே வெருகனூர் ...........இப்பெருநான்கு எல்லையும் திருவாழிக்கல்லு வெட்டிக்கொள்ள கற்பித்தது .......

5. ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில். ARE 577 of 1926

கல்வெட்டு வரிகள் :

1. எகது திரைலோக்ய நிர்மாணதாரண ஸம்ஹாரகாரணம் ஸ்ரீமந்ஸ்ரீரங்கநாதஸ்ய ஸாசனம் சாசுவதம் பரம் பொருப் பன்னமாடம் பொலிந்து தோன்றும் புதுவையர்கோன் விஷ்ணுசித்தன் கோதைக்கு நாம் வரக்காட்டின பிரணய பத்திரிகை பத்தர்களும பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்த நாடேு சித்தர்களுந்தொழுதிறைஞ் சத் திசைவிளக்கமாய் நிற்கின்ற நல்லார்கள் வாழும் நளிரங்கப் பெருநகருள் நடுவீட்டில் சேரனைவென்றான் மண்டபத்து சுந்தரபாண்டியன் பந்தர்கீழ் அரியாரயன் கட்டிலில் இருந்து உம்பரும் தும்புருநாரதரும் வந்து மூகங்கட்டி அவர்களுக்கு அலகோலச்சம் கொடுத்து

இருக்கச் செய்தே நம்வீட்டில் குடவர் கோவணவர் பூவிடுவார் தழையிடுவார் தண்ணீர்சுமப்பார் தண்டெடுப்பார் அர்ச்சகர் கணக்கர் மற்றும் நம் காரியத்துக்குக்-கடவார்

2. எல்லோரும் வந்து நம்கோதை வீட்டில் நின்றும் (அர்ச்சகர்) குடவர் கோவணவர் தண்டெடுப்பார் இராமானுஜ உடையார் வந்தார்களென்று சொல்லி நாமும் மலைய பரிகரமும் அனைத்துக் கொத்துள்ளாரையும் எதிரே போகவிட்டு தம்வீட்டில் உள்ளாரையும் கூட்டிவந்து காணிக்துக் கொள்ளும் அளவில்லை தாம்பரக் காட்டின (ஸம்மாநமும் சுவீகரிக்கும்) அடைவிலே சுவீகரித்தோம் தாம்பரக்காட்டின சாசனமும் வாசித்துக்காட்ட அறிந்து கொண்டோம் தாம் சொல்லி வரக்காட்டினபடி ஆவது பதினாறாமாயிரவர் தேவிமாருடனே பெரியமண்டபத்திலே வினோதித்திருந்தோம் என்று தம சுற்றத்துத் தோழிமார் தமக்குச் சொல்லவும் அப்பொழுது தாம் புண்ணிறிற புளிப்பெய்தாற் போலவும் வேலாற்றுன்னம் பெய்தாப போலவும் நெஞ்சூடு

3 நிலையுந் தளர்ந்து கொள்ளும் பயனொன்றில்லா கொங்கை தன்னைக் கிழங்கொடும் அள்ளிபறித்திட்ட வல மார்பிலெறிந்தென்ன முலைக்காவேனென்று உள்ளே யுருக்கினைத்து தாம் நம்மைப் பொருத்தமலியென்றும் புறம்போல் உள்ளங்கரியான் என்றும் பெண்ணினென் வருத்த மறியாத பெருமான் வஞ்சகள்வன் மாமாயன் பாம்பணையாற்குத் தம் பாம்புபோலே நாவுயிரண்டுளவாய் நாணல் யென்றுமதாய் சொல்லி வரக்காட்டினது தாம் மாம(ன்)மார் மக்களார் கையாலும நம்மாமன்மார் மக்களார் கையாலும் நந்திறத்தூடல் கண்டுவப்ப

வேண்டிச் சொன்ன தாயருக்கும் நா(ம்)மூப் பந்து மூவர்மார்க்கு மூன் சென்று கப்பந்தவிற்பது காரியம் ஆகவும் தேவரஸ்சியம் ஆகவும் போய் மண்டபத்திலே இருந்தோம் என்றும் தாம் தாம் பணவாளர் வைக்க பரிசிலே இருந்தோம் என்றும் நாங்களெம்மலிருந்த கொட்டியகைச்சங்கம் நானும்மவனும் அறிந்தும் என்றும் பாசதூத்துக்கிடந்த பார்.

4. மகட்குப் பண்டொருநாள் மாசுடம்பில் நீர்வார் மான மிலாப் பன்றியான் தேசுடைதேவர் திருவரங்கச் செல்வனார் பேசியிருப்பன்கள் பேற்கவும் போர்த்து என்றும் இன்னாந்திருந்த சிசுபாலன் தேசழிந்த அண்ணாந்திருக்கவே யரங்கவனைக் கைப்பிடித்த பெண்ணாளள் என்றும் செம்மையுடைய திருவரங்க ரென்றும் சொன்னபடியே நாம்தம்மையல்லாது வேண்டு வதில்லை தம் வீட்டில் உள்ளவனைத்தாடக நிறுத்தி நில்லாமல் வரக்காட்டச் சொன்னபடியே அவர்களுக்கு வேண்டும் ஸதுகாரங்களும் செய்து தமக்கு நாம் ஏறும் பல்லாக்கும் நாம் இருக்குங்குடையும் நாம்பூணும் கண்ட மாலைகளும்ஆவற்ணங்களும் பட்டுப்பருத்தி(சுகந்தத்திர விய)ங்களும் வேண்டுமதுங் குடுத்து தமக்கு அடுக்களைப் புறம் ஆக நமக்கு (சர்வம்) நடந்து வருகிற சீர்மையில் விட்ட ஸகாப்தம் 1375-ன் மேல்செல்லா

6. நின்ற ஸ்ரீமுக வருஷம் மீநஞாயிற்று பூர்வபக்ஷத்து ஏகாதசியும் புதவாரமும் பெற்ற உத்தரத்துநாள் உறங்காவில்லி தாஸன் ஆன மஹாபலி வாணாதிராயர் சீர்மை ஆன மதுரை மண்டலத்து முட்டநாட்டு திடியன் ஆன திருவரங்கநல்லூர்க்கு எல்லை ஆவது மேல்எல்லை பத்துமலைக்கும் வாராந்தூர் கீழ்எல்லை மாத்தூரில் குளத்துக்கும் மேற்கும் தென்எல்லை புளியஞ்சோலைக்

கும் குத்துக்கல்லுக்கும் வடக்கு ஆக இன்னான் செல்லை க்கு உட்பட்ட மாவடை மாவடை பட்டடடைப்பதி முதல் என்றும் எப்பேறபட்ட (ஸமஸ்தபிராப்திகளும்) கைக் கொண்டு கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்ளவும் இப்படிக்கு திருவாய்மொழிந்தருளமைக்கு அருளால் திருமந்திர ஓலைநாயகம் (ஸ்ரீரங்க)னாத பிரியநெழுத்து

6. ஸ்ரீவில்லிபுத்தூர்-ஆண்டாள்கோவில்- ARE 573 of 1926

கல்வெட்டு வரிகள் :

1. ஸவஸ்திஸ்ரீ (சகாப்தம) 1398-ன் மேல் செல்லாநின்ற துன்முகிவருஷம் வைகாசி மீ 12 (தியதி) ஸ்ரீமது மூவராயகண்டன் இராஜமீசர்கண்டன் மதியாதமன்னர் மணவாளன் சமரகோலாகலன வீரகஞ்சுகன் புவனேக வீரன் பூபாலகோபாலன பட்டயாலங்கானத்தான் ஸ்ரீமது திருமாலிருஞ்சோலை நின்றானான மாவலிவாணாதி நாயர் குமாரர் சுந்தரத்தோளுடையான் மழவராயர் மாதரக்கள் ஸ்ரீரங்க நாயகியார் னாம் கொடுத்த (தர்ம) சாதனப்பட்டயம் திருமல்லிவளநாட்டு ஸ்ரீவில்லிபுத்தூர் நாச்சியார் (சூடிக்கொடுத்தருளிய நாச்சியார்) மார்கழி மாசத்தில் என்னுடைய குறைஅறுப்பு ஆகக்கொண்டு அருளும் படிக்கு திருப்பொன்னூசலும் உண்டு ஆக்கி இந்த திருநாளுக்கு வேண்டும் அமுதுபடி கறியமுது சாத்துப்படி திருப்பரிவட்டம் திருமாலை திருவிளக்கு மஞ்சன்காப்புஉட்பட வேண்டும் நைவேத்தியங்களுக்கும் அக்காரவடிசிலுக்கும்உட்பட்டவனாக்கு நயினார் எனக்கு

அடுக்களைப்புறம் ஆகத் திருவுளம்பற்றி அருளின வீரநாராயண வளநாட்டுக் குராயூர்பற்றில் சொக்கன்

2 எந்தல் ஆன சுந்தரத்தோள்நல்லூர் நான்கெல்லையும் (பூர்ணையும்) புதவாரமும் விசாகமும் பெற்ற புண்ணிய காலத்திலே திருமாலிருஞ்சோலைமலையில் தலையருவிக்கரையிலே அழகர் எழுந்தருளுகையில் ஸன்னதியிலே (சஹிரன்யோ உதகதாராபூர்வமாகத்) திருவிடைஆட்டம் ஆக விட்ட அளவுக்கு இம்மரியாதியிலே சொக்கன்எந்தல் ஆன சுந்தரத்தோள்நல்லூர் பெருநான்கெல்கை உட்பட்ட நஞ்சைய் புன்செய்யும் கீணோக்கின கிணறும் மேணோக்கின மரமும் எப்பேற்பட்ட (ஸமஸ்தபிராப்திகளும்) ஆகக்கொண்டு .................. திருவிடை ஆட்டம் ஆகக் கல்விலும் செம்பிலும் வெட்டிக் கையாண்டு கொளவும் (சுபமஸ்து)

7. ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள்கோயில்-A. 85 7Rof 1926

கல்வெட்டுவரிகள் :

1. ஸ்வஸ்திஸ்ரீ (சகாப்தம்) 1399-ன் மேல்செல்லா

2. நின்ற ஏவிளம்பி வருஷம் வைகாசிமாதம் இருபதாந்தியதிஸ்ரீமத் மூவரායகண்டன் ராஜகண்டன் மதியாத மன்னர் மணவாளன் சமரகோலாகலன் விரகஞ்சுகன் புவனேக வீரன் பூபாலகோபாலன் பட்டமானங்காத்தான் ஸ்ரீமது திருமாலிருஞ்சோலை நின்றான் ஆன மாவலி வாணாதிராயர் கொடுத்த (தர்மதானப்)பட்டையம் இரு

மல்லி நாட்டு சீவில்லிபுத்தூர் நாச்சியார் சூடிக்கொடுத்
தருளிய நாச்சியார்க்குத் திருவாடித் திருநாள்
நம்முடைய குறையறுப்பு ஆகக் கொண்டருளும் படிக்கு
இந்தத்திருநாளுக்கு வேண்டும் அமுதுபடிக் கறியமுது
சாத்துப்படி திருப்பரிவட்டம் திருமாலை திருவிளக்கு
மஞ்சள்காப்பு கற்பூரம் குங்குமம் கண்டருளத்திருவந்திக்
காப்புச்சூடன் உட்படவேண்டும் நைவேத்தியங்களுக்
கும் உட்பட்ட வகைக்கும் நாம்விட்ட வீரநாராயண
வளநாட்டுத் திரளிற் பற்றில் மாங்குடி ஆன-
சுந்தரத்தோள்

நல்லூர் நான்கெல்லையும் அழகர்கை ஸன்னதியிலே
(உதகபூர்வ)மாகத்திருவிளையாட்டமாகவிட்ட அளவுக்கு
இமமரியாதியிலே மாங்குடி ஆன சுந்தரத்தோள்
நல்லூர்க்கு பெருநான்கெல்லை ஆவது மேல்எல்லை
பாறைக்குளத்துக்குக் கிழக்கு வடவெல்லை சாத்தான்
குடிக்குத்தெற்கு கீழ்எல்லை மதுரைப்பெருவழிக்குமேற்கு
தென்எல்கை ஆற்றுக்கு வடக்கு ஆக இன்னான்
கெல்லைக்குள்ப்பட்ட நஞ்சை புஞ்செய் மாவடைமரவடை
(கீழ்நோக்கிய) கிணறும் மேல்நோக்கிய மரமும் மற்றும்
எப்பேர்ப்பட்ட (ஸமஸ்தபிரசப்திகளும் ஆசந்திராதித்-
தயர்).... ஆக... தர்மம் ஆகத திருவுடைஆட்டம் ஆகக்
கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்ளக் கற்பித்தபடியே
அனுபவித்துப் போகவும் இம்மரி ஆதியிலே அனுபவித்துப்
போகவும்.

# பாண்டியநாட்டில்
# வாணாதிராயர்கள் பெயர்ப்பட்டியல்

சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலம்

பிரதிநிதிகள் :

1. சடாவர்மன் விக்கிரமபாண்டியன்
2. சடாவர்மன் வீரபாண்டியன்
    1. அரசுபுத்தன் சாமந்தன் வாணாதிராயன் —பக். 31
    2. உய்யநின்றாடுவான் வீரசோழதேவனான வாணாதிராசன் —பக். 33
    3. அண்ணன் வாணாதிராசன் —பக். 33,34
    4. விக்கிரமபாண்டிய வாணாதிராயர் —பக். 34
    5. பிள்ளை குலசேகரமாவலி வாணாதிராயர்—பக். 35
    6. பராக்கிரமபாண்டிய மாவலிவாணாதிராயன்—பக். 32
    7. தஞ்சைவாணன் (சந்திரவாணன்) —பக். 37-45
    8. வாணாதிராயர் சோலைமலைப்பெருமாள் —பக். 45-46
    9. கங்கைப்பிள்ளை அழகியபிள்ளை வாணாதிராயர் —பக். 46
    10. கங்கைகொண்டான் சூரியத்தேவன் —பக். 47.
    11. கெங்காதர வாணவராயர் —பக். 36

மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலம்

1. கங்கைகொண்ட சூரியத்தேவன் வாணாதராயன் காலிங்கராயன் —பக். 47
2. வாணவதரையர் —பக். 51
3. வளத்தார் சுந்தரபாண்டிய வாணவதரையர் —பக். 52
4. சுந்தரபாண்டியன் அதிகாரி வாணாதிராயர்—பக். 52
5. அம்மான் மகாபலி வாணாதிராயர் —பக். 52-53

எந்தப்பாண்டியர் காலமெனத் தெரியாதவர்கள்.

(கி. பி. 13. ஆம் நூ):

1. பிள்ளை வாணக்கோவரையர் —பக். 53
2. வாணாதிராசன் —பக். 53
3. வாணவிச்சாதரன் — பக். 53
4. உய்யவந்தானான விக்கிரமசிங்கதேவன் — பக் 53, 54
5. வாணாதிராயன் — பக். 54

விசயநகரவேந்தர் காலம் :

1. வாணவன் சுந்தரன் — பக். 6
2. திருமாலிருஞ்சோலை நின்றான் மாபலிவாணாதிராயன் உறங்காவில்லிதாசனான சமரகோலாகலன் (கி. பி. 1428-1477) — பக். 67.
3. சுந்தரத்தோளுடையான் மகாபலிவாணதிராயன் (கி. பி. 1468-1488) — பக். 90
4. இறந்தகாலம் எடுத்த சுந்தரத்தோளுடையான் மகாபலி வாணாதிராயன் (கி. பி. 1515-1533) —பக். 98

மதுரைநாயக்கர் காலம் :

விசுவநாதநாயக்கன் காலம்

1. இறந்த காலமெடுத்த சுந்தரத்தோளுடையான் மகாபலிவாணாதிராயன் — பக. 98
2. வலிவாணாதி மகாபலி வாணாதிராயர் — பக். 128

கிருட்டிணப்பநாயக்கர் காலம் :

1. மணலி வாணாதிராயன் — பக். 138

வீரப்பநாயக்கன் காலம்

1. வாணாதிராயன் — பக். 129
2. சுந்தரத்தோள் உடையார் மாவலிவாணாதிராயர் — பக். 130

முத்துக்கிருட்டிணப்பநாயக்கர் காலம் :

1. வாணதிராயன் — பக். 132

# பெயர் அகர வரிசை



அழகர்கோயில் கருவறை (பக். 124)



ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கருவறை (பக். 122)

## வாணாதிராயர்கள் வெளியிட்ட காசுகள்

(பக்கம். 113-116)



வகை இரண்டு





வகை ஒன்று



வகை மூன்று



வகை ஐந்து





வகை ஆறு-ஐந்து

